ஓம்

பரப்பிரம்மணேநம:.

# புருஷார்த்தபோதினி.

இஃது

திருத்துருத்தி இந்திரபீடம் கரபாத்திர சுவாமிகளாதீனம்

ஸ்ரீமான் ஈசூர் - சச்சிதானந்தசுவாமிகள்

மாணுக்கருள் ஒருவராகிய

தண்டறை - சுப்பராய ஆசாரியா ரவர்களால்

தமது சுவானுபவத்திலுதித்தவா றியற்றப்பட்டு

இவரது மாணுக்கருள் ஒருவரும்

சென்னை சிந்தாதிரிப்பேட்டை

அத்வைத பக்த லீலாமிர்தசபையின் காரியதரிசியுமாகிய

களத்தூர் முனிசாமிப்பிள்ளையவர்களால்

பார்வையிடப்பட்டு,

மற்றொருவராகிய ம-ஈ-ஈ-ஸ்ரீ,

லக்கூர் - கிருஷ்ணையசெட்டியார்

அவர்களது உதவியினுல்

சென்னைப் புரசை:

"கணேச" அச்சியந்திரசாலையிற் பதிப்பிக்கப்பட்டது.

1908.

விலை ரூபா 1.

# விளம்பரம்.

இதனால் யாவருக்குந் தெரிவிப்ப தியாதெனில்,

இவ்வரியசாத்திரத்தை புஸ்தக ரூபமாக 1000-காப்பிகள் அச்சிட்டு முழுமையும் இந்நூலாசிரியருக்குக் குரு காணிக்கையாகவும், கிருஷ்ணார்ப்பதமாகவும் செய்துவிட்டபடியால், இதனுள்ளடங்கிய சாராம்சங்களைக் கண்ணுற்றுத் தெளிந்து உய்யவேண்டினோர் இவர்களிடத்திலேயே கிரயப்படி பெற்றுக்கொள்ளலாம்.

இப்படிக்கு.
லக்கூர் - கிருஷ்ணையசெட்டியார்.

## இப்புத்தகம் கிடைக்குமிடங்கள்.

சென்னை வேப்பேரி புதுமார்க்கட்டுக்கடுத்த மேணெண்டை வெங்கடாசலமுதலி தெரு $\frac{2}{17}$-வது நம்பர் வீட்டிலிருக்கும் ம-ா-ா-ஸ்ரீ, தண்டறை சுப்பராய ஆசாரியாரிடத்திலும்,

பழயவண்ணாரப்பேட்டை கங்கணன் தெரு 9-வது நம்பர் வீட்டிலிருக்கும் ம-ா-ா-ஸ்ரீ, அமுர்தலிங்க ஆசாரியாரிடத்திலும் பெற்றுக்கொள்ளலாம்.

உ

# சாத்துக்கவிகள்.

சென்னை, ஹிந்துதியலாஜிகல் ஹைஸ்கூல்
தமிழ்ப்பண்டிதர் கோ. வடிவேலுசெட்டியாரவர்கள் இயற்றிய
அறுசீர் விருத்தம்.

தனைப்பேத மாய்க்காணுஞ் சமுக்ககன்று சிதாநந்தந் தானே யாகி, வினைப்போக மகன்றசச்சி தாநந்த குருபரன்றருள் விடாது போற்றி, நினைப்பான வுலகமய னீத்தறிவா நந்தநிலை நிலைத்து நின்றிங், கனைப்போல வடுத்தவருக் கிதங்கூறுஞ் சுப்பரா யப்பே ரையன். (1)

சங்கையறத் தானுணர்ந்த துயிர்களுணர்ந் துயுமாறு தக்கோர் நோக்கிப்,பொங்கியுளம் பூரிப்பப் புராதனவே தக்கருத்துப் பொலிந்து தோன்ற,மங்கலமெ லாம்விரவ மாகிட்டை யுணர்வோர்க்கு வாய்ப்பாக் கூடப், பங்கமறப் புருஷார்த்த போதினியென் றொருநூலைப் பகர்ந்தான்மாதோ! (2)

இந்திரபீடம் ஸ்ரீமத்
ஈசூர் - சச்சிதானந்தசுவாமிகள் மாணுக்கருளொருவராகிய
பி. ஆறுமுகமுதலியாரவர்கள் இயற்றிய
அறுசீர் விருத்தம்.

ஒப்புயர்வொன் றில்லாத மறைப்பொருளி னந்தரங்கமோர்ந்து வோர்ந்து, செப்பரிய புருஷார்த்த போதினியென் றொருநூலைத் தெரித்திட் டானல், தப்பரிய தன்னிலையே யின்பநிலை மற்றவையோ பிறவே யென்னுந், துப்பமைந்த பெரியனெங்கள் சுப்பரா யப்பெயரின் றாய்மை யோனே.

கோயிலூர்ப் பரம்பரை

ஸ்ரீமத் - ஷண்முகானந்த சுவாமிகளா லியற்றப்பட்ட

வெண்பா.

இச்சகத்தி னேசகற்றி யின்புற் றிருந்தவருட்
சச்சிதா னந்தகுரு தாண்மலரைப் - பொச்சமறச்
செப்பலறுஞ் சித்தெனவே தேர்ந்தவரா மாட்சிபெறுஞ்
சுப்பரா யத்தவத்தோன் சூழ்ந்து.

முப்பாலி னீத்தார் பெருமையிரு மூன்றினுரை
யெப்பா வலர்களுமே யின்புறநாற் - கப்பாப்
புருடார்த்த போதினிநூல் பொற்புறத்தந் தானஃ
தொருவாயா லோதுதகைத் தோ.

இந்திரபீடம் ஸ்ரீமத்

ஈசூர்-சச்சிதானந்தசுவாமிகளுடைய அடியார்களில் ஒருவராகிய

க. அமுர்தலிங்க ஆசாரியார் மாணவர்

மதுரை - இ. ரா. குமராநந்தசுவாமிகள் இயற்றிய

பதினென்சீர் விருத்தம்.

சீர்கொண்ட வொண்டா மரைப்பனவ னேவினிய
திருவள்ளு வப்பெரிய ராய்ச்
செந்தமிழ்த் தண்கடன் மடுத்தரிய வெண்குறட்
டேனமு தளிப்ப நீத்தார்
பேர்கொண்ட வதிகார மதனிலோர் சூத்திரம்
பெறுமுரையெ லாம்விரி வதாய்ப்
பேதமிற் சதுர்வித புருடார்த்த மாநல்ல
பெருவிளக் கேற்றி யுலகோர்

கார்கொண்ட நெஞ்சத்தி ருட்டிரியச் சச்சிதா
நந்தகுரு கழல்சே கரன்
காமரிந் திரபீட கரபாத்ர மரபினிற்
கலைபல வுணர்ந்த மேலோன்
ஞார்கொண்ட சண்பகப் பொழில்புடை நிவந்தோர்
தழைத்தோங்கு தண்டறை வருஉத்
தானற்ற பூரணக் கருணைவடி வுற்றோங்கு
சற்சுப்ப ராய குருவே.

நேரிசை வெண்பா.

துய்ய குறட்கடலிற் றோய்ந்தோர் மணிகொடுல
குய்ய விளக்கியிரு ளோட்டினான்—பொய்யா
வருளோங்க நஞ்சுப்ப ராயக்கோன் வேதப்
புருடார்த்த போதினியி னால்.

இந்நூலாசிரியர் மாணாக்கருளொருவரும்
சேலம் ஜில்லா அரங்கனூர்
ம-ௗ-ௗ-ஸ்ரீ, தாமோதரம் பிள்ளையவர்கள் குமாரருமாகிய
மகாவித்வான் - வேங்கடாத்திரி பிள்ளையவர்க ளியற்றிய
அறுசீர் விருத்தம்.

சீரூருந் தடங்கடல்சூழ் புவியினர்முத் தாபமறத்
தெளிந்தா நந்த
பேரூரு மரியசுக வாரிதியிற் கலந்தருள்வான்
பிறங்கு ஞான
வேரூரும் வேதாந்த வுண்மைநிறை புருஷார்த்த
விளக்க நூலிப்
பாரூரும் படியுதவி யிருமையினு மழியாத
பதம்பெற் றானால்.

அனையவனற் பெருமையையா னறிந்ததிலோ ரணுவி
    வறையக் கேண்மோ [லணு
வினையகல வமரர்தவ மேவுறுகா விரிநாட்டின்
    மேலாஞ் செல்வந்
தனையருளிந் திரபீட மரபுயரீ சூர்சச்சி
    தாநந் தப்பேர்
புனையுமெழில் குருநாத னடியிணைமா மணிமுடியிற்
    பொறுத்து மேலோன். (உ)

ஓதுமறை முடிவாமா தனத்திடைதே சிகச்செங்கோ
    லோய்ச்சி யென்றுந்
தீதகலச் சித்தியெனுஞ் சிற்றரச ரனைவரையுஞ்
    ஜெயித்தெந் நாளும்
பேதமிலா முத்தியெனு முலகினையாண் டிடவுமுடி
    பெற்ற கோமான்
பூதலமா யையைவிலக்கு ஞானவொளி மாருதம்
    புரியும் பானு. (௩)

ஒப்பிலா மனிதவுரு விசுவகுல வள்ளலென
    வுலகில் வந்து
தப்பிலா திருவறமுந் தன்னைத்தா னறிவகையுந்
    தரையிற் காட்டி
அப்பிரா னவதார மெனவெவருஞ் சொலவருதன்
    டறையா மெங்கோன்
சுப்பரா யப்புனித ஞமவரின் றிருவடியைத்
    துதிப்பா மாதோ! (௪)

---

இந்திரபீடத்து ஆதீனம்

ஸ்ரீமத், ஈசூர் - சச்சிதானந்த சுவாமிகளின்

மாணாக்கர்களில் ஒருவரும்,

சுதேசியவிருத்தி விளக்கமாதி நூலாசிரியருமாகிய

அ. சின்னையா முதலியாரவர்க ளியற்றிய

## வெண்பா.

கரபாத் திரன்மரபிற் கண்ணுடைத்திங் கான்ற
பரன்சச்சி தானந்தன் பாலே - திரமாகத்
தத்துவத்தை யாய்ந்துணர்ந்த சாந்தசுப்ப ராயன்மால்
சித்தநிலை பெற்றான் சிறந்து.

## அறுசீர் விருத்தம்.

இதுபிரம மென்றுணரா வெச்சமய ருந்தெளிந்தே
யினிதாய்க் காண
எதுபிரம மென்றாராய்ந் தெவ்வுருவை யுங்கரைத்தின்
பியல்பாய் நின்ற
ததுபிரம மென்றுரைக்க வையன்சுப்ப ராயன்மா
லாழ்ந்து தேர்ந்தே
சதுர்விதமாம் புருஷார்த்த போதினியென் றோர்நூலைச்
சாற்றி னானால்.

---

இந்நூலாசிரியர்

மாணாக்கருள் ஒருவராகிய

மதுரை - ஸ்ரீமீனாம்பிகை பிரஸ் புரப்ரைட்டர்

எஸ். கந்தசாமி பிள்ளையவர்க ளியற்றிய

வெண்பா.

உற்றவுற மாதிநான் குள்ளபுரு ஷார்த்தமதாச்
சற்றுமய லென்பதின்றித் தாமிலங்க—நற்றவத்தோர்
ஓர்ந்தளித்தா னிந்நூலை யொப்புதற்கென் னாட்சேப
மார்ந்தசுப்ப ராயகுரு வாழ்ந்து. (1)

எங்கெங்குந் தானா யிருந்திலக வெஞ்ஞான்று
மங்கங் கதுவதுவா யாகாமற்—பங்கமின்றிப்
போதித்தா னிந்தப் புருஷார்த்த போதினியைச்
சாதிப்போர்க் கென்னிதனைச் சார்ந்து! (2)

---

இந்நூலாசிரியர் மாணாக்கருள் ஒருவராகிய

வேலூர் - நாகப்பமுதலியாரவர்க ளியற்றிய

வெண்பா.

வேதமுதற் பன்னூல் வியனளவை யால்விண்ணோர்
சோதனைசெய் துங்காணாச் சோதியினை-சோதனையாற்
றானேதா னுணர்ந்து சான்றபுரு ஷார்த்தத்தைத்
தானாகச் சாற்றினான் றான்.

பெருமனத் தோர்கள் பிறழா துணர
அரியவின் நூலை யறைந்தான் - தெருளான
இந்திரபீ டத்தெழுந்த வெந்தைசுப்ப ராயகுரு
முந்துவோர்க் குண்டோ முறண்.

---

இந்நூலாசிரியர் மாணாக்கருள் ஒருவரும்
சென்னை சிந்தாதிரிப்பேட்டை, அத்வைதபக்தலீலாமிர்த
சபையின் அக்கிராசனாதிபதியுமாகிய
அ. அத்துவிதானந்தம் பிள்ளையவர்கள் கூறிய
அறுசீர் விருத்தம்.

பொருடானே தானாய்ச்சச் சிதானந்த மாநிட்டை
பொருந்திற் காணு
மருடானே யகன்றிடுமாங் கந்நிலையே யறமுதலாய்
மன்னு மென்ப
தருடானே வடிவாக மிளிர்சுப்ப ராயனெனு
மையனோர்ந்து
புருடார்த்த போதினிநா லென்போல்வா ரும்முய்யப்
புகன்றானம்மா!

---

# சிறப்புப்பாயிரம்.

இஃது இந்நூலாசிரியர் மாணாக்கருளொருவரும் சென்னை சிந்தாதிரிப்பேட்டை அத்வைத பக்த லீலாமிர்த சபையின் காரியதரிசியுமாகிய

**களத்தூர் - முனிசாமிப் பிள்ளையவர்கள் கூறியது.**

**நேரிசையாசிரியப்பா.**

'சொல்லரும் வண்மை சூழிரு புவியிற்
பல்லுயிர்க் கனையிற் பரிவ துறீஇ
எவ்வுயி ரெவ்வண மிதம்வேண் டிடுமோ
அவ்வுயிர்க் கவ்வண மன்ன தளித்து
நற்குலா ஜிகுவா ஞாயப் படியே
புற்பவ நோயைப் போக்கிப் பரம
சுகத்தை நல்கு சுருதியி னறுதியிற்
புகன்ற வான்ற பொருட்டிர ளியாவும்
மாயை யவித்தை மற்றதன் காரியம்
ஆய வுலக வமைதியுஞ் சுத்த
விசிட்ட வுபகித விரிசே தனங்கடம்
அசித்த வியலு மத்தியா சத்தின்
றாதாத் மியமாஞ் சார்வு மாங்குறு
பேத பந்தப் பெற்றியு மஃதொழி
யாறு மாத்மிக மாதி தாபத்
தாறும் வகையை யறிவான் சாதனத்
தெஞ்சா முமூட்சு வியைபு மாங்கவற்

கஞ்சா வபய மளிக்கு சற்குரு
வமைதியு மன்னேன் முன்னேன் றுன்பச்
சுமையொழித் தற்குச் சொரூப முணர்த்தி
மாறு வின்ப வாரிதி யாக்கும்
ஈறில வாது மின்னண வவற்றை
வசிட்டர் வியாதர் சங்கரர் மற்று
சுசிட்ட முனிவரர் சொற்றனர் வழியே
திரட்டிச் சார்பின் செம்பொருள் காட்டி
மருட்டு மாயா மயக்கொழிந் தியாரும்
அறிவே வடிவா மகம்பொரு டன்னைப்
பிறிவற வுணர்ந்து பிறங்கவு மறம்பொருள்
ஆதி புருடார்த் தங்க ளன்கும்
ஓதுவர் பல்லோ ரொருசா ரெனவே
மற்றது தன்னை மறுக்க வவைதம்
உற்ற காண்ட மொருமூன் றுக்கும்
வேறும் வகையை விரித்தவ் வகையில்
ஈறுறு வகையே யியைசித் தாந்தம்
என்ப துணர்த்தவு மிழிவுறு குணத்தில்
என்போல் வாரு மெளிதிற் றேர
எனினும் பரிபா கிகளா யிலகிப்
புனிதத் தவாது பொருந்திய மனத்தோர்
நண்ணி லபர ஞானிக ளாய்ப்பின்
றிண்மை பரஞா னிகளாய்த் திகழக்
கலியுக மைந்நூற் றெருதசங் காண

நிலவு கிலக நேரிட பத்தில்
அருநூல் புருடார்த் தப்போ தினியென்
றொருநூற் புகன்று னேங்கு மிந்திர
பீடக் கரபாத் திரராம் பெரியார்
சீட மரபினிற் றெளிந்து சென்னை
மாநகர் ஞான மன்னுப் புரந்து
யார்கிக ரெமக்கென் றெண்ணி வரூஉ
நியாய வியாகர ணத்தி னிபுணரந்
நியாய வாத நிகழ்த்துந் துவிதியர்
முதலா னோர்த முரண்சித் தாந்த
விதங்கெடப் பொருதி வென்ற சச்சிதா
னந்த வாரிய னடிமலர் முடிபூண்
டந்தமி லறிவா னந்தந் தேர்ந்தோன்
விடய விருத்தி மேவுமெற் புரைவார்
அடைக விவேக வகண்ட விருத்தி
என்று மனுதனு வேற்றோன் றண்டறை
நன்றும் பதியோ னானே நானும்
தனதரு பவத்தைச் சகங்காண் டற்கு.
மனதிற் கருணை வதிந்தோன் அறிவறி
யாமை யாதார விளக்கம் அகம்புற
வாய்மை யாராய்ச்சி விளக்க மற்று
ஒப்பி னூற்பல வுதவினோன்
சுப்ப ராய தூய்மை யானே.

# விஷய அட்டவணை.

---

ஓம்

பரப்பிரஹ்மணே நமஃ.

# முகவுரை



"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்."

எனப் பிறந்திருக்கின்ற இத்திருக்குறள் மகாவாக்கியத்தில் அரியசெயலென்றும், எளியசெயலென்றும் இருசெயல்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன. எங்ஙனமெனின், செயற்கரியவைகளைச் செய்யாதவர் சிறியர் என்றதனால், அவர் செயற்கெளியவைகளைச் செய்வார் என்பது அருத்தாபத்தியாற் பெறப்படுகின்றது. இதனால் செயற்கரியவை அரியசெயலென்றும், செயற்கெளியவை எளியசெயலென்றுந் தாமே பொருள் தருகின்றனவென்க. இவற்றுள், அரியசெயல் யாரிடத்தது, எளியசெயல் யாரிடத்தது எனப்பார்க்கின், அரியசெயல் அறிவுடையாரிடத்ததென்றும், எளியசெயல் அறியாமையுடையாரிடத்ததென்றும் தெரியவருகின்றன. அறிவுடையார் (கல்வி கேள்விகளிற் சிறந்த) கற்றவர்களும், அறியாமையுடையார் (அவைகளில்லாக்) கல்லாதவர்களுமாம்.

ஆகலின் இவ்வறிவுடையாரையே பெரியரென்றும், அறியாமையுடையாரைச் சிறியரென்றும் ஷை வாக்கியங் குறிப்பித்ததுபோலும். உலகில் இஞ்ஞான்று கற்றவர்கள் நான்கில் ஓர்பாகமும், கல்லாதவர்கள் மற்றை முப்பாகமுமா யிருப்பரென உத்தேசிக்கப்படுகின்றனர். கற்றவர்கள் ஓர்பாகமாயிருப்பினும் இத்துணையரெனக் கணிக்கப்படாதவர்களாயிருக்கின்றனர். இங்ஙன மிருப்பின், முப்பாகமாயிருக்குங் கல்லாதவர்களை எத்துணையரெனக் கணிப்பது?

நிற்க, ஷை மகாவாக்கியங் குறிப்பித்த அரியசெயலெனப்படுவது உலகில் எத்திறத்தர் பாலதென விசாரிக்கின், யாவர்பாலு மின்றி எத்திசையிலோ அருமைக்கெல்லாம் மிக்கஅருமையாயிருக்கின்ற யாரோ ஒவ்வொருவர்பால்இருக்கவேண்டியதாகின்றது. முன்ஞான்று கற்றோரையே அறிவுடையாரென்றும், பெரியரென்றுங் கூறியிருப்பதனால் அக்கற்றோர்பாலெல்லாம்ஷை அரியசெயலென்பதுஇராதோவெனின், அங்ஙனம் பலரிடத்திலிருப்பது அரியசெயலெனப்படுமோ? படாதன்றோ? அன்றியும் கற்றோர்கள் செயலனைத்தும் வைதிகச்செயல்களா? இலௌகிகச்செயல்களா? வைதிகச்செயல் தேகபோகங்களை முற்றும் வெறுத்துப் புரியத்தக்கதாகலின் கற்றோர்கள் பலரும் தேகபோகங்களை மறந்துவிட்டவர்கள்தாமோ? அன்றாகலின் அவர்கள் இலௌகிகச் செயல்களை யுடையவரேயாமென்க. இங்ஙனமிருக்கும்

இவர்கள் வைதீகச் * சாமானிய செயல்களையும், வைதீக விசேடசெயலாகிய ஷ அரியசெயலையும் எங்ஙனஞ் செய்யப்போகின்றனர்? இதனால் கற்றவரெல்லாம் பெரியரென்றும், ஆதலால் அவர்களே அரியசெயலைச் செய்பவரென்றுங்கூறலாமா? ஆயினும் முன்னொன்று கூறியதின் கருத்தாவது யாதெனின், கற்றவர்கள் இருவகுப்பினரா யிருக்கின்றனர். அவர்களுள் ஒருசாரார் இயல், இசை, நாடகமுதலிய வெறுங்கற்பனைகளையே கூறும் அயல் நூற்களைக்கற்று வாளாநாள்போக்குபவர்கள். இவர்களை வற்புறுத்தற்கே,

சசிவர்ணபோதம்.

இயலறிவ திசையறிவ தினமறிவ துளவாம்
அயலறிவ தறிவதல வறிவறிவ தறிவே. எனவும்,

நாலடியார்.

அலகுசால் கற்பி னறிவுநூல் கல்லா
துலகநூ லோதுவ தெல்லாங் - கலகல
கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒம் வழியறிவா ரில்.

எனவுங் கூறியிருக்கின்றன.

சிலர் (ஆத்மார்த்தத்தை யுணர்த்தும்) அறிவு நூற்களைக்கற்றுப் பொருள்களை நுட்பமாக அறிந்திருந்தும், பிறர்

* வைதீகச் சாமானிய செயலென்பவை: வேதத்தில் விதிக்கப்பட்டுள்ள நித்திய நைமித்திகக் கர்மங்களும், உபாசனையுமாம்.

க்குப் புகட்டுவாரேயன்றி அங்ஙனம் நடந்து பயனை யடையாதவரா யிருப்பார். கற்றுங்கல்லாத இவர்களும் மேற்சொல்லப்பட்டவர்களிற் சேர்ந்தவர்களேயாம். இவர்களின்பொருட்டே,

**திருக்குறள்**

ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்.

என்று கூறியிருக்கின்றது.

மற்றோர்சாராராகியகற்றோர்கள் ஆத்மார்த்தத்தையுணர்த்துபவை அறிவுநூற்களாயினும் அயலேடுகளாகலின், இவ்வயலேடுகளில் விளக்கப் பட்டிருக்கும் இலக்கணங்களெல்லாம் தானாகிய ஏட்டின்கண் விளங்குகின்றனவாவென அறிவான்வேண்டித் தேகாதி பிரபஞ்ச மனைத்தும் மித்தையென்று துணிந்து சதாநிட்டைகூடித் தெளிதற் கியைந்தவர்களேயாம். இவர்களே 'கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார்' என்பதற் கிலக்கானவர்களாம். அன்றியும் 'செயற்கரிய' என்னும் ஷை வாக்கியம் நீத்தார் பெருமை என்னும் அதிகாரத்தில் பிறந்திருக்கின்றதனால், அந்நீத்தாரென்பவரன்றோ (அறிவைக்) கற்றவரென்றும், பெரியவரென்றும் பொருள்படுகின்றது? நீத்தாரென்பவர் முற்றுந்துறந்தமுனிவராவர்.—முற்றுந்துறத்தலாவது: அறிவறியாமையாக நிகழும் சர்வதிருசியங்களிலும் ஆரோபமாகப் பற்றியிருக்கும்

பந்தத்தினின்று (நிரந்தர விசாரத்தினால்) நீங்கியிருப்பதாம். ஆகலான் 'தலைப்பட்டார் தீரத்துறந்தார்' என்னும் வாக்கியமும் பிறந்திருக்கின்றது. இதனால் இவர்களையே (அறிவைக்) கற்றவரென்றும், அறிவுடையாரென்றும், பெரியரென்றும் முன்னோன்று கூறியதென்க.

இதுகாறுங் கூறிவந்த அரியசெயலென்பவை யாவையெனின், அவை தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்னும் அரிய சதுர்வித புருஷார்த்தங்களை அடைந்தநுபவிக்க விழைந்து புரியும் பேராற்றல்களேயாமென்க. இச்சதுர்வித புருஷார்த்தங்களை அடைவதற்குப் பலரும் பேராற்றல் புரிகின்றனரேயெனின், புருஷார்த்தங்கள் ஒருவகுப்பாயிராமல் காண்டத்திரயங்களுக்கு முரியனவாய்த் திரிவிதவகுப்புகளா யிருக்கின்றன. அவற்றுள், கன்மோபாசனைக்குரிய இருவகுப்பாயுள்ள புருஷார்த்தங்களை யடைவதற்குக் கல்லாதவர்களில் சிலரும், (அயல்நூற்களைக் கற்றவரும், அறிவுநூலைக்கற்று வாளாதிரிபவரும் ஆகிய ஒருசார்) கற்றவர்களிற் சிலருமாக அவ்வவற்றுக்குரிய ஆற்றல்களைப் புரிகின்றனர்.

ஏனைய ஒருவகுப்பாயுள்ள புருஷார்த்தங்கள் ஞானகாண்டத்திற்குரியனவாகலின் அவற்றை யடையவேண்டினோர் அகத்தும், புறத்தும், எத்துணைச்சேய்மை பொருளல்லாதவைகள் பொருள்களாகத் தோன்றுகின்றனவோ, அத்துணைச்சேய்மையும் அவற்றை ஆராயவேண்டியவாறு ஆராய்ந்

தாராய்ந்து பொருளல்ல பொருளல்லவெனக் கழித்துக் கன்னிக் கதலிதனை நார்கழிப்பான் கண்போன்று(அதாவது ஒருவன் இளம் வாழையினது நார் (மட்டை) கழித்துக் கழித்துச் சென்றால் அந்தத்தில் யாதுமின்றி அவனது கண் மாத்திரந் தனித்து நிற்பதுபோல) அந்தத்தில் அறிவான் மாத்திரந் தனித்துநிற்க அவ்வறிவானை யாதுபொருள் யாது பொருளென அகநோக்கில் கிஞ்சித்துந்தளர்ச்சியுறாது செல் லத்தக்க மற்றோர்சார் அரிய கற்றோர்களேயாகலின் அவரை யன்றி ஏனைய பலரும் பேராற்றல்புரிபவரன்றென்க.

ஷை திரிவித வகுப்புகளாகிய புருஷார்த்த சதுட்டயத் தையும் விதந்துகூறுகின்றமையினால் இந்நூல் 'புருஷார்த்த போதினி'என்னும்பெயரோடு கத்தியரூபமாய் வெளிவந்திரு க்கின்றது. இஃது உபநிடதம், கீதை, பிரமசூத்திரம் என் னும் பிரஸ்தானத் திரயங்களினாலும், உத்தர மீமாம்சத்தி னாலும் பிரதிபாதிக்கப்படும் சர்வதுக்க நிவிர்த்தியும், பர மானந்தப் பிராப்தியும் வாய்க்கக்கூடிய கூடஸ்தபிரமஐக்கிய ஞானத்தை மேற்கொண்டதாகலான், கன்மோபாசனைக்குரிய புருஷார்த்தங்களைச் சங்கிரகமாகக் கூறிப் பூர்வபட்சப் படு த்திப், பின்ஞான்று ஞானகாண்டத்திற்கியைந்த பரமபுரு ஷார்த்தங்களைப் பலநியாயங்களுடன்விளங்கக்கூறிச் சித்தா ந்தப்படுத்துகின்றது. புருஷார்த்தமானவை ஒருவகையே யென்பது பெரும்பாலாருடைய அபிப்பிராயமாதலான் அத னையொழிக்கவும், (அவ்வக்காண்டங்கள் உடன்பட்டுக் கூறு

வதுபோல ஞானகாண்டம்உடன்பட்டுக்கூறும்)இப்புருஷார்த்தங்களை வேதாந்த சாத்திரங்களின் பலவிடங்களிற் கூறப்பட்டிருப்பினும் இலைமறை, காய்மறைபோ லிருத்தலினால் அவற்றைத் திரட்டித் தெள்ளிதில் விளக்கிக் காட்டவும் வந்த நூல் இதுவேயாம்.

இந்நூலின்கண் உலகம், பூதம், அணுமகத்து பேதம் ஆகிய இவற்றின் சாமானிய விசேட ஆராய்ச்சிகளும், காரணகாரியம், திருஷ்டிசிருஷ்டி யாதி வாதங்களும், சதுர்வழக்கு, சதுர்விழிப்பு இவைகளின் தன்மையும், துவிதமுதலிய பட்சங்களின் பூர்வபட்ச சித்தாந்த நிலையும் வேதாந்த சாத்திரங்களிற் சிறிது பயிற்சியுடையவர்க்கும், மற்றையர்க்கும் எளிதிற் புலப்படுமாறு ஆங்காங்கும் பிரபல சுருதிகளின் பிரமாணங்களுடன் கூறப்பட்டிருக்கின்றது. ஆயினும் இந்நூலைக் கண்ணுறுவோர்,

"நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்."

எனப் பிறந்துள்ள திருக்குறள் மகாவாக்கியத்திற் குறிப்பித்த சதுர்வித பேதைமையினின்று நீங்கினவராயிருப்பின் உத்தமம்.

அப்பேதைமையாவது, (1-வது) பழி பாவமென்னுந் தீச்செயல்களுக்குக் கிஞ்சித்தும் அச்சமுறாமையும்,(2-வது) விதி நிடேதமென்னும் நன்னெறியின்கட் செல்லாமையும்,

(3-வது) தம்மால் அபிமானிக்கப் பட்டவரிடத்து அன்புடைமைகொண்டிருப்பதுபோல் எவ்வுயிர்பாலும் அன்புடைமைகொண்டிராமையும், (4-வது)கல்வி, கேள்வி முதலியவற்றில் ஒன்றினையுங் கருதாமையுமாமென்க. இப்பேதைமையற்றிருப்பதுமாத்திரம் போதுமோவெனின், இதனோடு மதாபிமானமும் அற்றிருக்கவேண்டுமென்க. மதாபிமானம்அற்றிருப்பது எற்றுக்கெனின், மதவாதம் அன்பு நெறியாயினும் அது நம்பிக்கைமயமா யிருக்கின்றது. இந்நூலானது வேதாந்தமாகலின் அதுபோன்ற நம்பிக்கையுடையதா யல்லாது ஆராய்ந்துதெளிதற்கியைந்த ஞாயம், சோதனை, பொருத்தமென்னும் யுக்திஅங்கங்களையுடையதாயிருக்கின்றது.

இங்ஙனமிருப்பதால் (நம்பிக்கைமயமாயிருக்கும்) மதவாதத்தை அபிமானித்திருக்கின்ற அபிமானத்தை முன்றள்ளி இதனைப்பார்க்கப்புகின், இதில் முழுதும் விரக்தியுண்டாகும். விரக்தியாகிய தடையிருக்க இதனது உள்ளாழம் எங்ஙனம்வெளிப்படும்? வெளிப்படாதாகலின் அங்ஙனங் கூறினமென்க.

அற்றேல், மதாபிமானம் முற்றும் பயனற்றதுதானோவெனின், அஃது இந்நூலுக்கு எங்ஙனம் பயனற்றதாகின்றதோ, அங்ஙனமே அகத்தில் இராகாதிகளைவிடாது புறத்தில் வேடங்களினாலும், வறிய சொற்களினாலும் மயக்கிக்கொண்டிருப்பவர்க்கும் பயனற்றதேயாம். ஆயினும் ஷி

இராகாதிகளை விட்டுச் சுதந்தரவீனராய் அன்புநெறியில் வழுவாதொழுகும் அறிவுடைமையுள்ளார்க்கு எங்ஙனம் பயனற்றதாகும்? அவர்கட்கு முற்றும் பயனுடையதே யா மென்க. அன்றியும் ஷெ நாணுமை முதலிய தீயவினைகளுக் கேதுவாகியபேதைமையும்,மதாச்சாரமாகியநல்வினைகளுக்கி யைந்த மதாபிமானமும் மயக்கத்தையடுத்து நிகழ்வதாக லின் அவை இந்நூலை ஆழ்ந்து பார்ப்பதற்கு எங்ஙனம் இடந்தரும்?

அவை மயக்கத்தை யடுத்தனவென்ப தென்னையெ னின், மதவொழுக்கமானது காமியத்தவம், நிட்காமியத் தவம் என இரண்டாயிருப்பினும் அவ்விரண்டும் நல்வினைக ளாயும், நாணுமை முதலியவைகள் (தீமை பயப்பனவாக லான்) தீயவினைகளாயும் இருக்கின்றன. இருக்குமிவைகள் 'ஈனமாம் வினையி ரண்டாம் இருவினை யாலு டம்பாம்' என் பதற்கிணங்கப் பிறவியைத்தருகின்ற மயக்கத்தையடுத்தவை யேயாம். இதனாலன்றோ திருக்குறளின்கண் கடவுள்வாழ்த் தென்கிற முதலதிகாரத்திலேயே,

"இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"

என்கிற மகாவாக்கியம் பிறந்திருக்கின்றது?

மதவொழுக்கமானது இறைவனுடைய அருள்வசமு ற்று இன்பாகாரமா யிருப்பதற் கியைந்ததாகலின் அஃதும்

பிறவிமயக்கத்தை யடுத்ததோவெனின், இன்பாகாரமாயிருக்கினும் அங்ஙனமிருப்பதற்கும், ஷை இருவினைகளைப் புரிவதற்கும் இயைந்த எழுவாயாகிய தன்னை எட்டாது மறந்திருக்குஞான்றும் பிறவி மயக்கத்திற் சிக்கி வருந்தவேண்டுவதவசியமாகலின்,

(கைவல்லியத்திலும்.)

வீராவென் மகனே தன்னை மறந்தவன் பிறந்தி றந்து
தீராத சுழல்காற் றுற்ற செத்தைபோற் சுற்றிச் சுற்றிப்
பேராத கால நேமிப் பிரமையிற் றிரிவன் போதம்
ஆராயுந் தன்னைத் தானென் றறியுமவ் வளவுந் தானே.

என்று கூறியிருக்கின்றதென்க. ஆகலின் மதவொழுக்கமும் மயக்கத்தை யடுத்ததேயாம்.

நிற்க, ஷை மயக்கம் எல்லாவற்றுக்குங்காரணம் அறியாமையாகலானும், அவ்வறியாமை கெடவேண்டியதே இந்நூலின் தாற்பரியமாகலானும் இதனைக் கண்ணுறுவோர் ஷை பேதைமையும், மதாபிமானமு மற்றவராக இருப்பாராயின் இதனது உண்மையையறிந்து ஷை அறியாமை கெடுவதற்கியைந்த உழைப்புகளையெய்தி இன்புற்றிருப்பதற் குரியவராவார். மதாபிமானத்தை எஞ்ஞான்று மகற்றியிராவிடினும் இதனைப் பார்க்கு ஞான்றேனும் அகற்றியிருப்பாராயின் மிக்க நன்மையேயாமென்க. அன்றியும் எதனை யறிவதனால் எல்லாமறியப்படுமோ அதனை யறிதற்கும், எதனுடைய

நிவிர்த்தி வாய்ப்பதனல் எல்லாவற்றினுடைய நிவிர்த்தியும் வாய்க்குமோ அதனுடைய நிவிர்த்தி வாய்த்தற்கும், எதனை யடைவதனல் எல்லாமடைந்த திருப்தியுண்டாகுமோ அதனையடைந்து திருப்தியுறுதற்கும் இஃது ஏற்ற கருவியாயிருப்பதனல் பரிபாகிகளாயுள்ளார் ஓதியுணர்வாராயின் வாச்சியக்கியானமென்னும் பரோட்ச ஞானத்தைப் பெற்றுப் பின்ஞான்று இலட்சியக்கியான மென்னும் அபரோட்ச ஞானத்தைப் பெறுவதற்குரியஅதிகாரிகளாவாரென்பதற்கு யாதும் ஐயமின்றெனக. நிற்க,

**பிரத்தியட்சானுபூதி விளக்கம்.**

அறிவது நாட்டமுற் றுய்வா ருலகினி லாருமிலை
அறிவினைக் கண்டு சுகிக்கப் படிப்பவ ராருமிலை
அறிவே தனதுரு வாகப் பயில்பவ ராருமிலை
அறிவாயு மெட்டரி தார்க்கு மதுவே யருந்தெய்வமே.

என்று கூறியிருக்கின்றதால் நாமொவ்வொருவரும் எதனைக் கேட்டுத்தெளிந் தின்புறுதற் கிலக்காயிருக்கின்றனம்? அயலையே கேட்டின்புறுதற் கிலக்காயிருக்கின்றனமெனின், அயலைக்கேட் டின்புறும் நம்மைக் கேட்டின்புற்றுயிற்று? இல்லாமையினலன்றோ, கேட்கவேண்டியதைக்கேட்டுக் கேள்வியாகிற கருவியினல் துவாரப்படாத செவிப்புலனனது அயலாகிய ஏனையவற்றை எத்துணை மிகுதியுறக் கேள்வியுற்றிருப்பினும் முற்றுஞ் செவிடென்பதற்கு இலக்காயிருக்கின்றதெனப்படுகின்றது? என்னை,

திருக்குறள்.

"கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி."

எனப் பிறந்திருக்கின்றதனுலென்க. இதனுல் உலகில் பெரும் பான்மையரும் செவிடர்களென்பதற்குக் கிஞ்சித்தும் விருத்தமென்பதின்றென்க. சிறுபான்மையர் அங்ஙனங் கேட்கவேண்டியவாறு கேட்டுத்தம் செவிப்புலன் துவாரப்பட்டுச்செவிடுநீங்கியிருந்தும் கற்பனையினின்றகன்று ஞானகாண்டத்திற்கியைந்த ஷ அறமுதலிய புருஷார்த்த சொரூபிகளாகத் தெளியாதிருக்கின்றனராகலின் இவர்கள் கண்ணுடையார்பலராலும் அறிவுறுத்தற் கிலக்காகயிருப்பார்களென்பதற்குஐயமென்பது சிறிதுமின்றென்க. அறிவுறுத்தியிருப்பதாவது:

(ஞானவாசிட்ட முதலிய நூற்களில்.)

"மாளாத காதலெனும் வர்ச்சநரீபிக்கொடியின் வனத்தைச் சுட்டு, நீளாசை யனைத்துமறுத் தவர்க்கன்றோ வப்பொருடானேரே நிற்குங், கோளான பொருளனைத்து முன்னுடுபின் பினிமையிலாங் குற்றங் கண்டும், மீளாத பாவஙனையாற் கட்டுண்பார் வேசரியே வேறொன் றன்றால்" எனக் கூறியிருப்பதுபோலென்க. ஷ கேட்கவேண்டியதைக் கேட்டுச் செவிடுநீங்கினவர்களே வேசரிகளென்றாற் கிஞ்சித்துஞ் செவிடுநீங்காதவர்கள் என்னவெனப்படுவார்களோ! அறிகிலம்.

முகவுரை முற்றிற்று.



உ

ஓம்

பரப்பிரஹ்மணேநம:.

# புருஷார்த்தபோதினி.



## பாயிரம்.



### சொரூபவணக்கம்.

வெண்பா.

சந்ததமு மாளாத் தனியரசாய் நின்றிலங்குந்
தொந்தமிலாப் பூரணசிற் சோதிபரம்—எந்தமது
சிந்தையைவி டாதிமுக்கிற் செய்தவம்வே றுண்டோபின்
சிந்தையெது வாயிருக்குந் தேர்ந்து. (க)

### குருவணக்கம்.

என்றுமெனே நானு யிருந்துனற்கில் லாவென்னை
நன்றருட்கண் ணாலளித்த நன்மையனாய்—நின்றொளிருஞ்
சச்சிதா னந்தகுரு தாளிணைநா னெஞ்ஞான்று
மிச்சமுற்ற தாப்பணிவேன் மேல். (உ)

## மகான்கள் வணக்கம்.

அனைத்தினுளுந் தம்மைக்கண் டாங்கனைத்துந் தம்முள்
எனைத்தனையு நீங்கா திலக—வுனற்கெளிதாக்
கண்டுவக்கு முத்தர் கழலிணைநா னுட்கொண்டேன்
பண்டைமயல் போமே பறந்து. (௩)

## அவையடக்கம்.

என்றுமுள நானு மிருப்பவர்க ளேற்கினுமே
யென்றுமுட னு யிருண்டிருக்கும்—புன்மதியோர்
ஏற்பரோ விந்நூலை யேழைமதி யாலளிக்க
வேற்பரோ வென்னையுந்தா னீங்கு, (௪)

## இந்நூற்பெயர்.

உற்றபுரு ஷார்த்தநான் கோதுவதா லிந்தநூல்
சற்றுமுர ணின்றியே சந்ததமும்—பெற்றிடுமே
யப்பெயரைத் தானேநன் காழ்ந்துணர்ந்த யாவருக்குந்
தப்பகன்று போமே தளர்ந்து. (௫)

## இந்நூல் தத்துவங்கட் கதீதமாயிலங்கும் அகம்பொருளையே ஷை புருஷார்த்த மென்பதெனல்.

அகம்புறத்துட் காண்பவற்றை யாங்காங்கா ராயி
னகம்பொருளா யாவதனு லார்ந்தவ்—வகம்பொருளை
யன்றியொன்று மின்றெனவு மானபுரு ஷார்த்தமென
லென்றுமது வாமெனவு மெண். (௬)

வேதாந்தத்துக்கு மத்வாதங்கட்கு முள்ள தாரதம்மியம்.

அன்புநெறி யாயுநெறி யார்ந்திலங்கு மிவ்விரண்டும்
நன்மைகளே யென்றொன்று நாடுங்கா—லன்புநெறி
யுற்றமத வாதமய லோட்டாதிங் காயுநெறிப்
பற்றொழிக்கும் வேதாந்தம் பார். (எ)

இந்நூல் சுவாநுபூதியுள்ளார்க் குரைத்த தன்றெனல்.

முடிந்ததவ மீண்டு முடிப்பவரு முண்டேல்
படர்ந்தவிந்நூல் சொன்னதென்போம் பற்று - மடமிறந்தோர்க்
கென்றென்றுங் கற்றுணர்ந்த வேழ்மையர்க்குச் சொன்னதினால்
நன்றெனற்கீ தையமென்ன நாடு. (அ)

இந்நூல் அகமுகதிருட்டியில்லார்க் கறிவுடைமையென்பதின்
றெனல்.

தானாகு மேட தனைச் சங்கையறக் காணாது
தானாகா வேடுதனிற் சாதிப்போ—ரேனுவார்
எம்மையினு மிம்மருளர்க் கென்றுங் குருடறமோ
தம்மையடுப் பார்க்காகார் தான். (கூ)

இந்நூற்கு அதிகாரி, அநதிகாரி இனையரெனல்.

தத்தமுடல் பாரமெனச் சத்தியமாக் கொண்டோர்க
ளொத்தவதி காரிகளா முண்மையதா—நித்த
மிலங்கற்கு ரைத்தவிந்நூற் கேழையரா காரே
நலமுளதி காரிகளா நாடு. (க0)

---



உ

ஓம்

பரப்பிரஹ்மணேநமஃ.

# புருஷார்த்தபோதினி.

---

மெய்யுணர்வை யன்றியொன்றும் வேறுகவின்றல்
மெய்யுணர்வே நற்றுணையா மெய்.

## நூல்.

யதார்த்த ஞானமின்றி ஐயந்திரிபுகள் அகல்வதில்லை யென்பது நம்மனோரால் அறியப்பட்டதோர் சிதையாத சித்தாந்தமாம். யதார்த்த ஞானமோ பிரமாணமின்றிச் சித்திக்காதாதலின், பிரமாணம் இன்றியமையாததேயாம். பிரமாணம் உண்மையநுபவத்திற்குச் சிறந்தகாரணமா யிருத்தலின், பிரமா (உண்மை யநுபவத்திற்கு) கரணம் (சிறந்த காரணம்) பிரமாண மென்பது நியாயநூற்றுணிபா யிருக்கின்றது. அந்தப் பிரமாணமும் பிரத்தியட்சம் (காண்டல்) அநுமானம் (கருதல்) உவமானம் (ஒப்பு) சத்தம் (உரை) அருத்தாபத்தி (பொருட்பேறு) அநுபலப்தி (விளக்கமின்மை) என அறுவகையாம். இப்பிரமாணம் ஆறனுள் ஆத்மாவின் சொரூபம், மோட்சத்தின் விளக்கம் முதலானவற்றின் யதார்த்த ஞானம் சத்தப் பிரமாணத்தாலன்றி வேறே எப்பிரமாணத்

தாலும் உண்டாவதன்று யிருத்தலின் ஆத்மாவின் சொரூப முதலிய யதார்த்த ஞானத்தையறிய விரும்புவோர், சத்தப் பிரமாணத்தை யறியவேண்டுமென்பது அத்தியாவசியமாம். அச்சத்தப் பிரமாணமோ சுருதியாதி சதுர்த்தச வித்தைகளாம். அவ்வித்தைகளாவன வெனின்:—

வேதம் நான்கு, வேதாங்கம் ஆறு, நியாயம் ஒன்று (அதுவே தர்க்க மெனப்படுவது) மீமாம்சை ஒன்று, அட்டாதசமாயுள்ள புராணம் ஒன்று, நவதசமாயுள்ள ஸ்மிருதி ஒன்று ஆக இப்பதினான்குமாம். ஷை பதினான்கனுள்ளும் தேர்ந்து பிரகாசிக்கின்றவை அரிய சதுர்வித புருஷார்த்தங்களேயாம். அப்புருஷார்த்தங்களுள், இறுதியாயுள்ளதே பரம புருஷார்த்தமாம். அப்புருஷார்த்தம் நான்காவன வெனில்:—தர்மம், அர்த்தம், காமம், மோட்ச மென்பவைகளாமென்க. அவை அறம், பொருள், இன்பம், வீடெனவும்வழங்கப்படுவனவாம். அவற்றுள், அறமென்பது அளித்தலும், பொருளென்பது இருப்பாயிருத்தலும், இன்பமென்பது திருப்தியா யிருத்தலும், வீடென்பது விடுதல் மயமாயிருத்தலுமாம். இங்ஙனமிருக்கும் இந்நான்கு புருஷார்த்தங்களும் ஒன்றைவிட்டொன்று வேறுபடாது ஓர் வகுப்பாயிருக்கின்றன வாயினும், அவ்வகுப்பானது ஸ்தானபேதங்களால் மூன்று யிருக்கின்றதென்க. எங்ஙன மெனின், ஓர் வகுப்பு அறியாமையாயும், ஓர்வகுப்புஅறிவறியாமையாயும், மற்றோர் வகுப்பு சுத்த அறிவுடைமையாயு மிருக்கின்றதனு

லென்க. அஃதெங்ஙனமெனின், ஷ்டி சத்பிரமாணசொரூப மான வித்தை பதினான்கனுள் ஒன்றாகிய *மீமாம்சையென் னும் அரிய வித்தையின்கண் நிகழும் கர்மம், பக்தி, ஞான மென்னும்முக்காண்டங்களுள்,கர்மகாண்டத்தில்அறியாமை யாயும், பக்திகாண்டத்தில் அறிவறியாமையாயும் இறுதியா யுள்ள ஞானகாண்டத்தில் சுத்த அறிவுடைமையாயு மிருக் கின்றனவென்க.

இவ்வறமுதலிய நான்கு புருஷார்த்தங்கள் முக்காண் டங்களிலும், சுத்த அறிவுடைமையாயிருக்கின்றனவென்ன து, மூன்றாகப் பிரித்துச் சொல்லுவானேனெனின், காண்ட

*மீமாம்சை பூர்வம், உத்தரமென இருவகையாயிருக்கின்றது. பூர்வமீமாம்சை கர்மத்தையும், உத்தரமீமாம்சை ஞானத்தையுஞ் சொல்லும். ஆனால் பக்தி யெதனு ளடங்குமெனில், அதுபூர்வமீ மாம்சையில் அடங்கியிருக்கின்றதென்க. எங்ஙனமெனின், கர்மத் துக்குப் பாகியகர்ம மென்றும், பக்திக்கு மானசீக கர்மம் அல்லது ஆந்தரகர்ம மென்றும் பெயரிருக்கின்றபடியினால், இவ்விரண்டை யுஞ்சொல்லும் பூர்வமீமாம்சை கர்மமீமாம்சையென்று சொல்லப் படுகின்றது. ஆயினும் முமூட்சுக்கள் சாஸ்திரங்களி னிடத்தும், குருவினிடத்தும் விசுவாசம் வைக்கவேண்டிய தென்றும், முக்கிய மாய் குருவினிடத்தில் ஆப்தாங்கதான சத்பாவமுற்றுக் குருபக்தி செய்யவேண்டிய தென்றுஞ் சொல்லியிருக்கின்றபடியினால், உத்தர மீமாம்சையிலும் பக்தியடங்கி யிருக்கின்றது. இதனால் பக்தியா னது பூர்வோத்தரமென்னுமிருமீமாம்சைகளிலுமிருப்பதாக வேற் படுகின்றது.பூர்வமீமாம்சை தர்மமீமாம்சையெனவும், உத்தரமீமா ம்சை பிர்ம்மமீமாம்சையெனவும் சொல்லப்படும்.

மென்பதுஒன்றாயிராது மூன்றாயிருப்பானேன்? இருக்கின்ற நால்புருஷார்த்தங்களும் மூன்றுவகுப்பாகப் பிரிந்திருக்கின்றனவென்க. காண்டம் மூன்றாயிருப்பானேனெனின், உயிர்களுக்குப் பொருள் நிச்சயம் மூன்றாயிருக்கின்றமையால் எவ்விதத்திலாயினும் உயிர்களது பக்குவத்திற் கியைந்த மார்க்கங்களைக் கற்பித்து அவற்றின் வாயிலாகவே உய்விக்க வேண்டுமெனப் பெருங்கருணை கொண்ட வேதமாதா, அவ்வுயிர்களைக் காக்கு நிமித்தம் மூன்று காண்டமாய் விரிந்திருக்கின்றதென்க. பொருள் நிச்சயம் மூன்றாயிருக்கின்றதென்ப தெங்ஙனமெனின், நீங்கற் றிருப்போர்க்குத் தேகபோகமும் நீங்கற்றிருப்பதோடு, மனம் ஒருவழிப்பட்டிருப்போர்க்குத் தெய்வீகமும், இவ்விரண்டிலும் விரக்தியுற்றகன்று தனிப்பட்டு நிற்பவர்க்கு ஆத்மார்த்தமுமா மென்க. இம்மூன்று வகுப்பினருள் நீங்கற் றிருப்பவர்கள் பழிபாவங்களிற் புகாது, கட்டுண் டொழுகுங் கர்மகாண்டிகளும், நீங்கற்றுப் பழிபாவமுழுதுந் தெரிந்து நடந்து மனம் ஒருவழிப்பட் டிருப்பவர்கள் பக்தி காண்டிகளும், தனிப்பட்டு நிற்பவர்கள் தன்னிருப்பும், உலகிருப்புமியாவையென நிதானிக்கும் ஞானகாண்டிகளு மாகின்றனர். இவர்களிங்ஙனம் பேதித்திருக்கின்றமையால், முக்காண்டங்களிலுமெங்ஙனம் ஷை அறமுதலிய நான்கு புருஷார்த்தங்களும் ஒருவகுப்பாயிருத்தல்கூடும்? கர்மகாண்டத்திற்கியைந்தநான்குபுருஷார்த்தங்களும் பக்தி ஞானமென்னுமிருகாண்டங்கட்கும், பக்தி காண்டத்திற்கியைந்த நான்கு புருஷார்த்தங்களும் கர்மம்,

ஞானமென்னு மிருகாண்டங்கட்கும், ஞானகாண்டத்திற்கியைந்த நான்குபுருஷார்த்தங்களும் கர்மம், பக்தியென்னு மிருகாண்டங்கட்குமியையுமா? அன்றியும் அவ்வக்காண்டத்திற்கு மியைந்த பேராற்றல்கள் ஒன்றுக்கொன்று மாறுபட்டிருக்கின்றனவே, அவைகள் எங்ஙனம் மாறுபட்டிருக்கின்றனவெனின், கர்மகாண்டத்தினின்று உழைக்கின்ற வுழைப்பனைத்துந் தேகபோகங்களுக்கும், பக்திகாண்டத்தினின்று உழைக்கின்ற வுழைப்பனைத்தும் ஓர்பரமாகிய ஆண்டானென்பதற்கும், ஞானகாண்டத்தினின்று உழைக்கின்றவுழைப்பனைத்துந் தானாகிய ஆத்மார்த்தத்திற்குமாமென்க. இம்முக்காண்டங்களிலுமியங்கும் பேராற்றல்களாகிய பிரிவுகளையுணர்ந்து தெளியுமாறெங்ஙனமெனின், கூறுதும்.

அதாவது தேகத்தை விடாதுவருத்துகின்ற வாத, பித்த, சிலேத்துமமென்னும் மூன்றுநோய்கள் எங்ஙனமிருக்கின்றனவோ, அங்ஙனமே மனதைவிடாது வருத்துகின்ற நோய்களுமிருக்கின்றன. அவை மலமெனவும் விட்சேபமெனவும், ஆவரணமெனவும் மூன்றும். அவற்றுள், மலமென்பது பாவமெனவும், விட்சேபமென்பது கலக்கமெனவும், ஆவரணமென்பது மறைப்பெனவுமாம். பின்னுமவற்றைத் தெளியக்கூறுமிடத்து மலமென்பது மனந்தூய்மையுற்றிருக்கவும், விட்சேபமென்பது அம்மனம் ஒருவழிப்படாது விரிந்திருக்கவும், ஆவரணமென்பது அம்மனதுக்குப் பொருள்நிச்சயம் கிஞ்சித்துந் தோன்றாதிருக்கவுஞ் செய்கின்

றன எனப்படுமென்க. தூய்மையற்றிருக்கச் செய்தலென்பது, மனம்பழிபாவமென்னுந்தீயவசமுற்று இராகத்துவேஷ முதலாகிய பதின்மூன்று துர்க்குணங்களையும் (அத்துர்க்குணங்களாவன:—இராகம், துவேஷம், காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம், ஈரிஷை, அசூயை, இடம்பம், தர்ப்பம், அகங்காரம்என்பவைகளாம்.) பொருந்தி அததற்கியைந்த தீயவொழுக்க முற்றிருக்கச்செய்தலெனவும், மனம்ஒருவழிப்படாது விரிந்திருக்கச் செய்தலென்பது, முற்கூறிய பழிபாவமுதலிய துர்க்குணங்களின் வசமுறாதுமடங்கியும், யானெனதென்கிற அகமமதைகள் சிறிதுங்குன்றாது விரிவுற்றும் விஷயங்களிலேயே பற்றிச்செல்லச்செய்தலெனவும், பொருள்நிச்சயந்தோன்றாதிருக்கச்செய்தலென்பது விடாதுதோன்றிக் கொண்டிருக்கின்ற உலகத்தினுண்மை யிருப்பையும், அங்ஙனந் தோன்றுகின்றதை விடாதுணர்ந்து கொண்டிருக்கின்ற அறிவாகிய ஆத்மாவினுண்மையிருப்பையும், இன்னவாறெனக் கிஞ்சித்துந் தோன்றவொட்டாது முழுதுமறைத்துக்கொண்டிருத்தலெனவுமாகின்றன. இதுவே அஞ்ஞானமெனப்படுவது. இவ்வஞ்ஞானம் இரண்டுவித சத்திவடிவமாயிருக்கும். அவற்றுளொன்று, வஸ்துவென்பது இருந்தும், இல்லையென்கிற மருள் நிச்சயத்தையுண்டாக்கும். இதற்கே அசத்தாவரணமென்றுபெயர். மற்றொன்று வஸ்துதோன்றவில்லையென மறைத்தலையுண்டாக்கும். இதற்கு அபானாவரணமென்று

பெயர், இவையே நாஸ்தியென்றும் நபாதியென்றுமாகின்றனவென்க. நிற்க,

மலம், விட்சேபம், ஆவரணமென்னும் இம்மூன்றுள், முதலாவது மனந்தூய்மையுருவண்ணஞ் செய்யும்பராக்காகிய மலமானது அகலுமாறு விதிவிலக்குகளிற் கட்டுண்டு நீதியோடொழுகுதற்குக் கர்மகாண்டமும்; இரண்டாவது மனம் ஒருவழிப்படாது விரிந்துநிகழச்செய்யும் பராக்காகிய விட்சேபமானது அகலுமாறு வழிபடுதற்கியைந்த சரியையாதி முக்கிர்த்தியங்களைத் தேகபோகங்களில்விரக்தியுற்றவராய்ப்புரிந்துபுரிந்து ஒடுங்கவேண்டியதற்கியைந்தஉபாசனாமூர்த்தங்களின் வசமாகவொடுங்கி நிலைத்திருத்தற்குப் பக்திகாண்டமும்; மூன்றாவது மனதிற்குப்பொருள்நிச்சயங்கிஞ்சித்துந்தோன்றவொட்டாதுசெய்யும் மயக்கமாகியஆவரணமானது அகலுமாறுதானேதானகத் தெளிந்துநிலைத்திலகச் சிரவணாதியைந்தினிலுஞ் சென்றொழுகுதற்கு ஞானகாண்டமுமாமென்க. சிரவணாதி ஐந்தாவனவெனின், சிரவணம், மனனம், நிதித்தியாசனம், சமாதி, சாட்சாத்காரம் என்பனவாம். இவைமுறையே கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல், விளங்கிநிற்றல் எனவும்படும். இங்ஙனமிருக்குங்காண்டத்திரயத்துள் முதலாவதான கர்மகாண்டத்தில், அக்கர்மகாண்டிகள் ஒழுகுவதற்கென ஏற்பட்ட புருஷார்த்தம் நான்கென்பதென்னவெனின்.

(1-வது.) அறமென்பது பாவவினைசிறுகச்சிறுகத்தேய்ந்துபோகவும், புண்ணியவினை சிறுகச்சிறுக வளர்ந்துவரவும்,

பிரமச்சாரிகள், வானப்பிரஸ்தர்கள், சந்நியாசிகள், வறியவர்கள், பிதுர்க்கள், சுற்றம், நட்பினர், விருந்தினரிவர்கட்கும்; பசு, பட்சியாதி மற்றுயிர்களுக்கும், அன்னமிடுதல் முதலாகிய தானங்களையும், உபசாரங்களையும்; பிறர்க்குத் தாம் பகைமை யுறாமலும், தாம் அவர்களைப் பகைமைகொள்ளாமலும், நயமேமுழுதுந்தோன்றுமாறு தத்தமக்கியன்றமட்டுஞ் செய்துகொண்டுவருதலும்; விரதம், தவம், யாகம், இவற்றைக் கிரமமாகப்புரிந்து வருதலுமாமென்க.

(2 - வது.) பொருளென்பது இங்ஙனம் நீதியோடமைந்த அறநெறிக்கண் ஒழுகுவதற்குத்துணைக்காரணங்களாகிய கிரகம், தனம், தானியம், பத்தினி, மித்திரர், பணியாளர், பசுவாதியைப்பெற்று அவ்வறநெறிக்கண் வழுவாதொழுக அதனாலுண்டாகிய புகழும், மறுமைப்பயனாகிய அரியசுவர்க்கப்பேற்றைத் தரக்கூடிய புண்ணியவினையினது * தர்மமும், அந்தக்கரணத்தில் சிறுகச்சிறுகச் சேர்ந்துசேர்ந்து இருப்பா யிருத்தலுமா மென்க.

(3 - வது.) இன்பமென்பது ஒவ்வொருவருக்கும் விழியிரண்டாயிருப்பினும் வேற்றுமையுறாது, ஒவ்வொரு பொருளையும் ஒத்துணர்த லெங்ஙனமோ அங்ஙனமே தாமும்

---

* புண்ணியவினையால் தர்மமும், பாவவினையால் அதர்மமும் விளைந்து இத்தர்மாதர்மங்கள் அந்தக்கரணத்தில் சமஸ்காரரூபமாய்த் தங்கியிருக்கும். தர்மாதர்மம், அதிர்ஷ்டம், அபூர்வம் எனவுஞ்சொல்லப்படும்.

தமது மனைவியரும், பேதமுறாது ஏகசிந்தையராய் அறத்தின்கண் கூறப்பட்ட எவ்வெவ்வாற்றலேயும், நீதிவழுவின்றிப் புரிந்து சத்த,பரிச, ரூப, ரச, கந்தங்களாகிய ஐந்து விடயானந்தப் பொருள்களுங் குறைவற விருக்க அவற்றை வேண்டியபடி யநுபவித்துக் களித்துத் தத்தஞ் சிந்தைகள் சுகமேலிட் டிருத்தலு மாமென்க.

(4 - வது.) வீடென்பது இவ்வறமுதலிய மூன்றினது நெறித்தாக ஒழுகிவருஞான்று தேகபோகங்கட்கே, இவ்வறமாதியைப் புரிந்து வருவதால் விசேடபயன் யாதுமில்லையே, எல்லாவற்றையும் படைத்துக் காக்க ஓரிறைவ னிருப்பானல்லவா? அவனுடைய திருச்செயலுக்காக வந்தனை வழிபாடு செய்யவேண்டிய கடமை நமக்கின்றே? என இவ்விதமான சில மனவெழுச்சி யுண்டாகி அறமாதி மூன்றிலும் விரக்தி தோன்ற, இவற்றைப் புரியாது முற்றும் விட்டுவிடில், தம் பின்னோர்களும், இவற்றின் தன்மைதெரிந்து ஒழுகி வழிப்படாமல் விட்டுவிட நேரிடுமே என்றுன்னி, புறத்தில் மாத்திரம் அவற்றைச் செய்துகொண்டு, அகத்திலழுத்தமின்றி ஜகதீசனாகிய ஒப்பற்ற இறைவனைக் கருதிக்கொண் டிருத்தலுமாமென்க. இதற்குதாரணம்:—

ஈதலறந் தீவினைவிட் டீட்டுபொரு ளெஞ்ஞான்றுங்
காத லிருவர் கருத்தொருமித்—தாதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு.

என்று ஔவையார் கூறியிருப்பதையு முணர்க.

இரண்டாவதான பக்திகாண்டத்தில், பக்திகாண்டிகள் வழிபடுதற்கென ஏற்பட்ட புருஷார்த்தம் நான்காவன வெனின்,

(1 - வது.) அறமென்பது, தனு, கரண, புவன, போகங்களென்னும் தூலசரீர முதலிய நான்கும் உயிர்களாகிய நம்பால் வந்துவந்து நிலையாதகன்றகன்று போவதி யாராலெனப்படும்? அற்பவாற்றலுடைய நாமோ இவைகளைக் கொள்ளவும், நீக்கவும் வல்லவர்களன்று. ஆனால் ஓர் அரிய இறைவனுண்டு. கருணாநிதியாகிய வவனே இத்தனுவாதி நான்கையும், நமக்குக் கொடுப்பித்துப் புசிப்பித்துத் தொலைப்பிக்கச் செய்துகொண்டு வருகின்றான். அவனால் கொடுக்கப்பட்ட விவைகள் அவனுடைய உரிமைகளா யிருக்கின்றனவாதலால், இவைகளில் நமக்கென்று என்ன வுரிமையிருக்கின்றது. இல்லிதிருந்தும் தனுகரணங்களையானென வும், புவன போகங்களை எனதெனவும் பற்றிக்கொண்டு மயங்கித் திரிகின்றோமே: இங்ஙனம் மயங்கித்திரிவது அறிவின்மை யெனப்படு மன்றோவெனத் தனுவாதிகளிலுள்ள அபிமானங் குன்ற எல்லாச் செயல்களும், எல்லாவுரிமைகளும் அவனுடையதே யென்பதாகக் கணந்தோறுமாறாது அவனுக்கே தத்தஞ்செய்துகொண்டு தற்சுதந்தரமற்றிருத்தலாமென்க.

(2 - வது.) பொருளென்பது, ஷித்னுமுதலியயாவும் அவனுடையதேயென அவ்விறைவனுக்கு விடாதளித்துக்

கொண் டிருக்கின்றமையால், நாம் எதை உரிமைப் பொரு ளாகப் பற்றுகின்றது? அவ்விறைவனது திருவருட் பிரசா தத்தையன்றோ பற்றவேண்டும்? பற்றினாலன்றோ நமக்கு அதனால் மேலான நன்மை கிடைக்குமென்று, அவனது அருளையே அரிய பொருட் செல்வமாக விடாது மனத்தின் கண் பற்றிக்கொண் டிருத்தலாமென்க.

(3 - வது.) இன்பமென்பது அவ்விறைவனது அரிய வருளிற் கலந்துகலந்து உறைந்து கொண்டுவரின் அவ்வரு ளே பேரானந்தமாக நின்று சுகத்தைத் தருமென அச்சுக வசமாகவே நின்று விடாத்திருப்தியுற் றிருத்தலாமென்க.

(4 - வது.) வீடென்பது கடல் வியாபகத்தில் ஓர் கட மானது தனது அகத்தும்புறத்தும் நீர்நிறைவுற அக்கடலில் பிரிவின்றி யமிழ்ந்திருக்குமாறு தான்விடாது வசப்பட்டுக் கொண் டிருத்தற்கியைந்த சிவானந்த வியாபகத்தில் ஷெ அறமுதலியவைகளைப் புரிந்துகொண்டு வருகின்றோமென் கிறபோதமானது, கிஞ்சித்துந் தலையெடுக்க வொட்டாது அவற்றி னபிமானமு மிராவண்ணந்துவிதபாவமின்றி, முழு தும் அமிழ்ந் திருக்குமாறு அவ்வானந்தம் உள்ளும் புறம் பும் நிறைவுறத்தானதில் இலயித்திருப்பதாமென்க. இதற் குதாரணம்,

[அறிவறியாமை யாதார விளக்கம்.]

ஆவியாதி மூன்றினையு மாய்ந்தளித் தல்லருளைத்
தாவல் குணானுபவந் தான்கேட்டன்—மேவுமிவை

விட்டயர்ந்து நிற்றலன்றோ மேன்மையற மாதியெனல் கட்டைமதிக் கீதன்றே காண்.

மேற்கூறிய, இருகாண்டத்தில் சொல்லப்பட்ட இரு வகுப்பாயுள்ள புருஷார்த்தங்களுமிக்க அருமையாயிருக்க, அவற்றில் ஒன்று அறியாமை யெனவும், மற்றொன்று அறி வறியாமை யெனவும் கூறுவதையேற்பது எங்ஙனமெனின், கர்மகாண்டத்தில் நிகழும் புருஷார்த்தங்கள் கிஞ்சித்தும் பொருளென்ப தின்றித் தோற்றன்மயமாயும், அசுத்தமா யும், துன்புருவாயும் நிலையாமையாயுமுள்ள தேகபோகங் களைப்பொருளெனவும், சுத்தமெனவும், இன்புருவெனவும், நிலையுள்ளதெனவும் மயங்கிப் பந்தித்து நிகழ்கின்றதனால் அறியாமையெனவும்;

பக்தி காண்டத்தில் நிகழும் புருஷார்த்தங்கள் ஷை தேகபோகங்கள் பொருள்க ளன்றெனக் கிஞ்சித்துந் தேரா விடினும் அசுத்தமெனவும், துன்புரு வெனவும், நிலையாமை யெனவுந் திடபாவங்கொண்டு விரக்தியுற்று அவற்றினின்று நீங்கிப் பொருளல்லாது பொருளாகத் தோன்றுந் தனது பாவனைதடிப்பாகிய பரத்தை வந்தித்து அதன் வசப்பட்டி ருப்பதனால்அறிவறியாமையெனவுங்கூறியதென்க. இங்குத் தேகபோகங்களை ஷை அசுத்தமுதலியவைகளெனக்கண்டு அவற்றினின்று நீங்கினவரையில் அறிவுடைமையும், ஷை பாவனைத்தடிப்பாகிய பொருளல்லாதபரத்தைப் பொருளாக மயங்கினவரையில் அறியாமையுமாகின்றன. இக்காரணத்தி னாலேயே இவைகளை அறியாமையெனவும், அறிவறியாமை யெனவுங் கூறப்பட்டதென்க.

---



## முதலாவது

# அறமென்னும் புருஷார்த்தம்.

மூன்றாவதான ஞானகாண்டத்துள் ஞானகாண்டிகளுக்கென ஏற்பட்ட நான்குபுருஷார்த்தங்களும் சுத்த அறிவுடைமையென்ப தெங்ஙனமெனின், இந்நான்குபொருளும் ஏகத்துவமாகவேயிருப்பதனாலென்க. எங்ஙனமெனின், அறிவானாகியதனக்குத் தானே அறமாயும். தானேபொருளாயும், தானே இன்புருவாயும், தானேவீடுருவாயுந் தெளியுமாறு உழைத்து உழைத்து விளங்குவதாலென்க. இந்நான்கும் இங்ஙனம் (ஓர் மொழியார்த்தமாக) இருப்பதனாலன்றோ "செயற்கரியசெய்வார் பெரியரென்னும்" மகாவாக்கியம்பிறந்திருக்கின்றது? அதிலும் நீத்தார்பெருமையென்னு மதிகாரத்திலேயே பிறந்திருக்கின்றது. அந்நீத்தாரென்பவர் அகத்தும், புறத்தும் சிற்சடபேதங்களாகக் காணப்படுவனவாகிய ஜெகஜீவபரங்களை முழுதுந்துறந்த முனிவரன்றோ? இங்ஙனமாகிய நீத்தார்செயல் எத்தகையதெனப்படும்? ஷை கர்மகாண்டத்தின் ஒழுக்கமெனப்படுமோ? அன்றிப் பக்திகாண்டத்தின் ஒழுக்கமெனப்படுமோ? இரண்டுமல்லவே: ஆகலின் அவர்கள்செயல் தன்னைத்தனக்களிப்பதன்றோ? அங்ஙனமிருக்க நமக்கு நாம் எதினையளிக்கின்றது? அயலாகிய நாமரூபங்களையா? அன்றே: அறிவாகிய தன்னையன்றோ தனக்களிக்கவேண்டியது? அங்ஙனமாயின் ஓர்பெண்பால் தான் சுகிக்கவேண்டி வேறோர்நாயகனைத்தழுவாது தன்னையேதழுவிக்கொள்வதுமுண்டோ? அங்ஙனமுண்டாயின் இங்ஙனமுண்டாயிருக்கலாம். இன்றாகலின் அயலாகிய நாமரூபவுலகையே யளிக்கவேண்டுமெனின்; அங்ஙனமளிப்பது கர்ம

காண்டிகளுக்கியைந்ததென முன்னோன்றேசித்தாந்தமாயின தால், அஃது ஈங்குப்பொருத்தமானதன்று. உலககாரணமா கிய பரத்தையேனு மளிக்கலாமேயெனின், அங்ஙனமளிப் பதுபக்திகாண்டிகளுக்கியைந்ததென முன்னோன்றேசித்தாந் தமாயினதா லிஃது மீங்குப்பொருத்தமானதன்று. ஆனல், உலகு,பரமென்பனவைகள்நமக்களிக்கப்படும்பொருள்களென வுலகில்முழுதும் வழங்கப்படுகின்றனவேயெனின், ஆங்ஙன மாயின் ஷை கர்மகாண்டத்திலும், பக்திகாண்டத்திலும்அளி க்கப்படும்பொருள்களை(அதாவதுபற்றப்படும்பொருள்கள்.) அவ்வக்காண்டிகளும் விசாரிக்கவேண்டியவாறுவிசாரித்துத் தெளிந்த பின்னோன்று பற்றவேண்டுமென்கிற வவசியங்கிஞ் சித்துமின்று. பின்னரெங்ஙனமெனின், அவ்விருகாண்டங் களிலும் அவ்வக்காண்டிகள் பற்றவேண்டியவற்றை எவ்வெ வ்வாறு கூறியிருக்கின்றனவோ அவ்வவ்வாறு ஆராய்தலில் லாமலே அவர்கள் பற்றவேண்டிய தவசியமென்க. ஆயின் அவர்களுக் காராய்ச்சி யென்பது வேண்டாமோ வெனின், அவர்களது பந்திப்பு அன்பு மார்க்க மாதலின், அதனை ஆராய்ச்சி வசமிழுத்தால் பஞ்சுப்பொதி அக்கினி வசப் படின் அஃதெங்ஙன மாகிவிடுமோ அங்ஙனமே ஆய்விடும். ஆகலின் அவர்களுக்கு நம்பிக்கையே போதுமான நன்மை யேயன்றி ஆராய்ச்சியென்பது கிஞ்சித்தும் பயன்படாதெ ன்க. ஞானகாண்டிகட் கங்ஙனமன்று. பின்னரெங்ஙனமெ னின், தமக்களிக்கப்படும் பொருளை ஆராயவேண்டியவா றாராய்ந்து தெளியவேண்டியது அவர்களுக்குப் பெருங்கட

மையாமென்க. அவ்வாராய்தலென்ப தெங்ஙனமெனின், எது தமக்கு அளிக்கப்படும் பொருளோ: அது அன்றெனற்கு மின்றெனற்குங் கிஞ்சித்து மியையாது, ஆமெனற்கு முண்டெனற்குமே யியைந்திருக்குமாறு தெளிந்திருக்கவேண்டியதென்க. நாம் அங்ஙனந் தெளியாவிடின் நம்மை ஆரோபமாக அடுத்திருக்கும் அறியாமையென்பது கிஞ்சித்து மகலாதாகலின், நாம் தெளிந்திருக்கவேண்டிய தவசியமன்றோ? அங்ஙனம் நாம் ஆராயவேண்டுமாயின் ஒருவாறு உலகை ஆராயலாம். ஏனெனின் நம்மால் இது வந்திக்கப்படும் பொருளன்றாயிருக்கின்றது. பரமென்ப தங்ஙனமன்றே? எத்திறத்தரும் உடல் பொரு ளாவி மூன்றுமதனுடையமெதன (இவற்றில் மிதப்புறுமாறு) திடபாவமுற்று உள்ளவாறு வந்திக்கப்படும் பொருளாகலின் அதனையாராய்வதுமுண்டா? அங்ஙனமாராய்வதாயின், அது ஒருவன் தன்மாதுரு யோனியைப் பரிட்சிப்பதுபோல் ஆகுமேயெனின்,

இவ்வன்பு மார்க்கத்தில் சுருதிகளாலும், பெரியோர்களாலும் அப்பரம்பொருள் எங்ஙனமெங்ஙனமிருக்கிறதாகக் கூறப்பட்டிருக்கின்றனவோ, அங்ஙனமங்ஙனமே நாம் பொருள்கொண்டு வந்தித்து உய்யவேண்டுவதன்றி ஆராய்தல் வேண்டுவதெற்றுக்கெனின், வந்திக்கும் அறிவுபொருளாகிற நம்மையே விசாரித்துத் தெளிய வேண்டுவது ஆவசிகமாயிருக்க, நமக்குக் கண்கூடன்றாயும், நாம் பாவித்தறியப்படுவதாயுமுள்ள பரத்தையா விசாரிக்கவேண்டுவதின்று? கண்

கூடாகிய வுலகத்தையே விசாரித்துத் தெளியவேண்டுவ தா வசிகமென்றால், கண்கூடன்றாகிய பரத்தை ஏன் விசாரித்துத் தெளியக்கூடாது? பரமென்பது வேதாந்தப் பொருளென நாம் ஒத்துக்கொண்டிருக்கின்றமையால், அவ்வேதாந்தம் வழக்குமயமா யிருக்கின்றதன்றோ? எங்ஙனமெனின்,

பரமென்பது எல்லாமாயும், அல்லவுமாயு மிருக்கின்ற தென வேதாந்தநூல்க ளனைத்துங் கோஷிக்கின்றமையால் அப்பரம் வழக்குமயமாக இருத்தற்கிழுக்கென்னை? எல்லா மென்பது பசுபாசங்களைவிட வேறே என்ன விருக்கின்றது? பரமென்பது பசுபாசங்களாயும், அவைகளன்றாயும் இருப்ப தாக ஏற்படுகின்றது. பசுபாசங்க ளெங்ஙன மிருந்தால் பரமென்பதுஎல்லாமாயும், அல்லவுமாயுமிருக்கும்? இவற்றை ஆராயப்புகுந்தால் எத்துணை வழக்குமயமாகவிருக்கலாம்? அங்ஙன மிருக்கின்றமையாலேயே,

உத்தமவாதநூல்.

வழக்குமயம் வேதாந்த வத்துநிலையன்றோ
விழிச்சொருகிக் காட்டுவீர் மெய்போல் - வழக்கறுக்கீர்
பக்குவம்வந் தாற்றெரியும் பாரென்பீர் ஞானிகளே
யிக்கதைக்கீங் கின்னடிப்பா லென்.

என்று கூறியிருக்கின்றதால், நாம் வழக்கில் முழுகித் தெளியவேண்டுமென்றாகின்றதே;

ஆத்மாநாத்மா விசாரமென்பது வழக்குமயமாயிருப்ப தன்றோ? அவ்வழக்கென்பது மேற்கூறிய இன்றெனவும்,

அன்றெனவும், உண்டெனவும், ஆமெனவுமாம். இங்ஙனமாகிய வழக்கில் முழுகித்தெளிந்தாலன்றி நம்மை ஆரோபமாக அடுத்திருக்கும் (ஒன்றை மற்றொன்றாக உணரும்) அறியாமையென்பது கிஞ்சித்தேனுமகலாதென்க. என்னெனில்,

சீவகாருண்ணிய விளக்கம்.

உண்டில்லை யாமலவென் றோர்நான்கு மேலாமற்
கண்டபொருளொன்றேனுங்காட்டாதார்க்-குண்டோ
குருத்துவந்தான் வல்லீர் குளறிவழி தற்கோ
பெருத்தகுரு வென்றுகொண்ட பேர். எனக் கூறியிருக்கின்ற இச்சந்தர்ப்பங்களையுணர்ந்து வழக்கில் நின்று தெளியவேண்டுமென்றோ? தெளியவேண்டுமாயின் சுருதிகள் மட்டும் நில்லாது அநுபூதிப்படுமாறு, யுக்தியினாலுமாராய்ந்து தெளியவேண்டுமென்க. யுக்தியென்பது திரிவிதஅங்கத்தை உடைத்தாயிருக்கின்றது. அவ்வ, ஞாயம், சோதனை, பொருத்தமென்பனவாம். எங்ஙனமெனின், அவற்றுள்,

(1-வது,) ஞாயமென்பதுஒழுங்கு. அதாவது நாம்தெளியவேண்டி எந்நெறியிற்செல்லுகின்றனமோ அது முடிவு பெறுமளவும் அந்நெறியினின்று குறுக்குநெறியிற் செல்லாதிருத்தல்.

(2 - வது,) சோதனையென்பது ஆராய்ச்சி. அதாவது காணப்படுமோவ்வொன்றும் உபாதான முபாதேயமாயிருப்பது விளங்குமாறு (அதாவது முதற்காரணகாரியமாயிருத்தல்) ஆய்ந்தாய்ந்து அததுவும் பொருளாக மயங்கிக்

கொண்டிருக்கும் திருஷ்டியை நேதிசெய்துகொண்டேசெல்லுகின்றது (நேதியென்பது=களேதல்)

(3 - வது,) பொருத்தமென்பது சித்தாந்தம். அதாவது இங்ஙனம் ஆய்ந்தாய்ந்துசென்ற அந்தத்தில் பொருள் நிச்சயம் எப்படித் தேறுகின்றதோ அத்தேர்ச்சியேயாமென்க. இதனாலேயே

திருக்குத்திருசியவிவேகம்.

ஞாயத்தை முன்னிட்டு நாட்டுவது மேற்பதுவும்
ஞாயத்துக் கொவ்வாதே னம்பாதே - ஞாயந்தான்
பொய்யைப் பொய்யாக்கிப் பொருளைப் பொருளாக்கி
மெய்யாக்கு நம்பினரை மேல்.

எனக்கூறியிருக்கின்றது. ஆகலின் ஞாயநெறியிலேயே செல்லவேண்டுவது நம்மனோர்க்காவசியமாமென்க. அன்றியும்,
"பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும்
மருளானு மாணாப்பிறப்பு" என்றும்,
"எப்பொருளெத்தன்மைத்தாயினு மப்பொருள் [வு."
அப்படிகாண்பதறிவென்னுது," மெய்ப்பொருள்காண்பதறி
என்றுங் குறள் மகாவாக்கியம்பிறந்திருக்கின்றதே, இவற்றையெல்லாங் கருதாதிருப்ப தென்னே? இஞ்ஞானகாண்டம் ஏனைய இருகாண்டங்களைப்போல் நம்பிக்கைமார்க்கமன்றே; முற்றும் ஞாயமயமாகலின் இக்காண்டத்தைத் தழுவியும் ஞாயநெறியைவிட்டு நம்பிக்கையுற் றிருக்கலாமா? அவ்விரு காண்டத்தையே தழுவிக் கிர்த்தியம் புரிந்துகொண்டிருக்க

லாமே? அவற்றைத் தழுவிப் புரிவதால் ஷை அறியாமை யென்பதகலாவிடினும் வழிபட் டிருத்தற் கைய மென்ப தின்று. இன்றுயினும் எவரெவர் எந்நெந் நெறியினரா யிருக்கினும், அர்த்தமென வழங்கப்படும் ஒவ்வொருசொல் லுக்கும் பொருள் நிச்சயம் குணந்தொழிலெனக் கொள் ளாது, பொருளாகவே தேர்ந்திருக்குமாறு அகத்தில் விடா மனனவுழைப் பெய்தவேண்டு மென்க.

பொருள் நிச்சயமென்பது காரணகாரிய ரகிதமாயும், குணிகுண ரகிதமாயும், பிம்பப்பிரதி பிம்பரகிதமாயும், அம் சாம்சிக ரகிதமாயும், விகார அவிகார ரகிதமாயுமிருக்கின்ற நிலைமையதா மென்க. அதுதான் பொருள் நிச்சயமென்ப தென்க. அற்றேல், ஷை பரமென்பதை யாவரும் விசாரிக் கக்கூடாதோவெனின், இவ்விசாரணை ஞானகாண்டத்தில் நுழைந்தவர்க்கே யன்றி, ஏனையருக்கு முற்றும் விருத்தமா கவே முடியுமென்க. அன்றியும் இவ்விசாரணை அவ்விரு காண்டிகளுக்குமன்று. ஆயினும் அவர்கள் தமக்கே ஞான காண்டிகள் இவ்விசாரணையை உணர்த்துவதாகக்கொண்டு வைதுவருவது கிஞ்சித்தும் நீதமன்றென்க.

"எப்பொருள்யார்யார்வாய்க்கேட்பினுமப்பொருள்
மெய்ப்பொருள்காண்பதறிவு."

என ஷை குறளில், அறிவுடைமையென்கிற அதிகாரத்தில் வந்திருக்கின்றமையால், எவரெவர் எவ்வெவ்வாறு கூறினும் அவரவரது நிலைமையையும், அவர்களால் கூறப்படும் சொற்

களையும் சொல்மாத்திரமாகக் கொள்ளாது, அததனிடத்தும் ஷை உறுதிப்பொருள் விளங்குமாறு,விடாது மனன வுழைப் பெய்தவேண்டுமாதலின், இங்ஙனமாகிய மனனவுழைப்பு ஷை இருகாண்டிகட்குங் கிஞ்சித்தும் பயன்படாதே: இதனு லிது ஞானகாண்டிகட்கே முற்றும் பயன்படுமாமென்க.

அன்றியும், இம்முக்காண்டங்களுள் ஞானகாண்டிகள் செய்திருக்கின்ற பொருள்நிச்சயத்திற்கியைந்த மார்க்கமும், ஏனைய இருகாண்டிகள் செய்திருக்கின்ற பொருள் நிச்சயத் திற்கியைந்த மார்க்கமும் ஒன்றுபடாது பேதித் திருக்கின் றன. எங்ஙனமெனின்,இஞ்ஞானகாண்டிகள் நிச்சயித்திருக் கின்ற நிச்சயம் சித்தாந்தமும்,ஏனைய இருகாண்டிகள் நிச்ச யித்திருக்கின்ற நிச்சயம் பூர்வபக்ஷமுமாகலினென்க. ஞான காண்டிகள் தமதகத்தும்புறத்தும் பொருள்போற்காணப்படு வனவாகிய சிற்சடபேதகற்பனைகளுள் ஒவ்வொன்றும் பொ ருளல்ல பொருளல்லவென் றுராய்ந்தாராய்ந்து நேதிசெய்து சென்ற அந்தத்தில், இருப்பாகவுங் கண்கூடாகவுந் தேறப்ப டடதே பொருள் நிச்சயமென இவர்கள் கொள்ளுமார்க்க மிஃதும், ஏனைய விருகாண்டிகள் ஷை பொருளல்லவற்றை யெல்லாம் பொருள்களென மயங்கி இவற்றிற்குமேல் ஓர் பொருளிருக்கவேண்டுமென இவர்கள் நிச்சயித்துக்கொள்வ தற்கியைந்த மார்க்கமிஃதுமாமென்க. அங்ஙனமாயின் ஷை இருகாண்ட நிச்சயமும் பூர்வபக்ஷந்தானோவெனின், பூர்வ பட்சமாயினும் அவைகள் தீயநெறியிற்செல்லாது அறநெறி யிற் கட்டுண்டொழுகுவதற்கும், பின்ஞான்று தமக்குரியன

வாக நிகழ்ந்துவரும் உரிமைகளெல்லா மகன்று (அதாவது சுதந்தர வீனத்துவமாயிருத்தல்) ஒருவழிப்பட்டுச் (அதாவது தாம் நிச்சயிக்கப்பட்ட பொருள் வசப்பட்டிருத்தல்) சுகவடிவாயிருத்தற்கு மியைந்ததாகலின், நாம் எத்துணையாராய்ச்சியுடையவராயினும், அவற்றைக் கைவிட்டிருக்குமாறு கிஞ்சித்து மெண்ணற்க. என்னெனில்,

௬ (சோருபசாரம்.)

வேத விதியை வெறுத்துரையா ருள்ளளவும்
ஓத லுழுக லொழிந்திரார்—சாதல்
மறவார் கருத்திளகி மண்ணுலகில் வாஞ்சை
பிறவார் பிறவாதபேர்.

எனக் கூறியிருக்கின்றதை நன்குகவனித்துணர்க. அற்றேல், ஷஷ் இருகாண்டிகளும் நிச்சயித்திருக்கின்ற பொருள்நிச்சயம் நன்கு புலப்படுமா றுணர்த்தவேண்டுமெனின்,

உலகமென்பது கண்கூடானுபவமுடையது. பரமென்பது கண்கூடானுபவமன்றுயது. கண்கூடானுபவமன்றுகிய பரமென்பதொன்றுளதென ஏற்கற்பாலதெங்ஙனம்? அளவைகளினுலேயா? அன்றிவெறுஞ்சொல்லாலேயா? அளவைகளினுலேயேயெனின், அளவைகள் * காண்டல், கருதல்,

* அஷ்டவித அளவைகளில் பிரத்தியக்ஷம், அநுமானம், உவமானம், சத்தம், அருத்தாபத்தி, அநுபலப்தி என்னுமிவ்வாறும் வேதாந்தபக்ஷத்திற்குடன்பாடானவைகளாம். இவ்வாறையுஞ் சுருக்கி, அதாவது உவமானம், அருத்தாபத்தி இவ்விரண்டையும் அநுமானத்திலேயும், அநுபலப்தியைப் பிரத்தியக்ஷத்திலேயுமடக்கி இங்கு மூன்றுகக் கூறியதென்க.

உரையென மூன்றாயிருக்கிறபடியினால், இம்மூன்றுள் எந்த அளவையின்மேற்பது? இவற்றுள் காண்டலென்பது கண் கூடாயதாதலின் அதுவே பிரத்தியக்ஷமென்றுஞ் சொல்லப் படுகிறது. அதுசெவியாதியிந்திரியங்களுக்குச் சத்தாதிவிஷ யங்களோடு சம்பந்தமுண்டானபோதுண்டாகிறது. இங்ஙனமே பரமென்பது கண்கூடானதா? அது சத்த பரிச ரூப ரச கந்தங்களாகிய தர்மங்களையுடையபொருளன்றாதலின் செவியாதி யிந்திரியங்களுக்குப் புலப்படுவதன்று. இதனால் அதுகாண்டலளவைக் குட்பட்டதன்றெனவாகின்றது. உரையளவையென்பது சொல்லென்கிற சத்தமெனப் படும். பரமென்பது நாதாதீதமாகலின் சொல்லாகிய உரை யளவைக்குட்பட்டதன்றே. அன்றியும் உரையென்பது சாத்திரவளவை யெனவும் படுமாதலின், இச்சாத்திரவளவை முன்ஞான்று சொன்னபடி சொல்லளவை யென்றாகின்றதனால், சத்தமாகிய சொல்லானது அப்பரத்தைக்கண்டு சொல்லிற்றா? காணாமல் சொல்லிற்றா? கண்டேசொல்லிற்றெனின், அப்பரம் கண்ணாதியிந்திரியங்களுக்குப் புலப்படுவதன்றென,முன்ஞான்றே தீர்மானிக்கப்பட்டமையால்,எங்ஙனங்கண்டு சொல்லற்பாலதாகும்? காணாமலே சொல்லிற்றெனின், அங்ஙனங்காணாமல் சொல்லப்பட்டவைகளெல்லாம் சொன்மாத்திர மென்றாகின்றதனால், அப்பரமும் சொன்மாத்திரமென்றாகிச் சொன்மாத்திரமாயிருக்கு மலடிமகன், ஆகாயதாமரை யிவற்றைப்போலக் கற்பனையாகவே முடிகின்றது. அச்சத்தம் பரத்தை நேரேகண்டதன்று. உல

கைக்கண்டு ஓர்பரமென்பது இதற்குவேருக வுளதெனச் சொல்லியதெனின், இது ஓரேதுவைக்கொண்டு நிச்சயிக்கும்நிச்சயமாகிய கருதலளவையென்றுசொல்லாமல்தீராது. அஃதெங்ஙனமெனின்,

சேதனமாகவும், அசேதனமாகவுங் கலந்திருக்கும்படியான பிரபஞ்சத்தை அல்லது உலகைப்பற்றியோசிக்குஞான்று, இதைப்படைத்துக் காத்து, அழிப்பதற்கும், அன்றியும், எண்பத்துநான்கிலக்ஷம் யோனிபேதங்களாயுள்ளவுயிர்களை ஆண், பெண், அலி, உயர்ந்தது, தாழ்ந்ததுமுதலான பேதங்களாயிருக்குமாறு, அவ்வவைகளின் வினையின்பகுதிக்குத்தக்கபடி தனு, கரண, புவன போகங்களைக்கொடுத்துவருவதற்கும் ஓர் பரம் உளதென நிச்சயித்தலாம். என்னையெனின்,

ஒழிவிலொடுக்கம்.

பெண்ணு ணலியாய்ப் பிறந்துவளர்ந் தேயழியும்
எண்ணாத பேத மியல்பின்றிப்—பண்ணுங்கால்
காரணகர்த் தாவொருவ னுண்டவனைக் காட்டுநூல்
ஆரணமு மாகமமு மாம்.

என்று வந்துள்ள கண்ணுடையார் செய்யுளின்படி, அநுமான அளவையினு லுலகைக்கொண்டு நிச்சயிக்கவேண்டியதாயிருக்கின்றதன்ருே? ஆமெனின்,

இங்ஙனம் நிச்சயிக்குமளவையும் தோற்றஅநுமானமா? அன்றியதார்த்த அநுமானமாவெனவாராய்வாம். அதுயதா

ர்த்த அநுமான அளவைதானெனின், யதார்த்த அநுமான அளவையின்னதென்றும், தோற்ற அநுமானவளவையின்னதென்றும், தெரிந்தபின்ஞான்றன்றோ அவ்விருவகையுள் இது யதார்த்தமா? அல்லது தோற்றமாவென விசாரிக்கவேண்டும்? திருஷ்டாந்தத்தில் யதார்த்த அநுமான அளவையென்பது, ஓர்மலையின்கண் உண்மையான தூமமென்பது எழுந்துசெல்ல, அதைத் தூமமாகவேகொண்டு இம்மலையில் அக்கினியுளதென நிச்சயித்தல். தோற்றவநுமானஅளவையென்பது, மலையின்கண்ணிருந்து வெண்முகிலானது எழுந்துசெல்ல அதைத் தூமமாகமயங்கி இம்மலையில் அக்கினியுளதென நிச்சயித்தல். இவற்றுள் முன்ஞான்று கூறிய நிச்சயம், உள்ளதை யுள்ளதாகவேகொண்டு நிச்சயித்தபடியால் அதிஷ்டானமும், பின்ஞான்றுகூறிய நிச்சயம் அல்லாததை ஆமெனக்கொண்டு நிச்சயித்தபடியால் ஆரோபமுமாகின்றன. இதனால் அதிஷ்டானமாகிய யதார்த்த நிச்சயத்தாலக்கினியென்பதின்றெனவும், ஆரோபமாகிய கற்பிதநிச்சயத்தாலவ்வக்கினி யுண்டெனவும் பொருள்படுமா? படாதாகலின், யதார்த்தாநுமானத்தால் அக்கினிசித்திப்பதும், தோற்றுநுமானத்தால் சித்திக்காததுமாகின்றது. இத்திருஷ்டாந்தம்போல்,தாஷ்டாந்தத்தில் யதார்த்தஅநுமான அளவையென்பதும், தோற்றஅநுமான அளவையென்பதும் எங்ஙனம்? உலகைக்கொண்டு பரமுளதென நிச்சயித்தல் யதார்த்த அநுமான அளவைதானெனின்,தோற்றஅநுமான அளவையென்பதொன்று இதற்கு வேறாகவிருக்க

வேண்டுமென்றே? அங்ஙனமிருக்கின்ற தென்பதற்குப் பொருள்பட்டாலன்றோ, உலகைக்கொண்டு நிச்சயிப்பது யதார்த்தஅநுமான அளவையெனப்படும்.

தோற்ற அநுமான அளவை யென்ப தொன்று இன்றெனின், யதார்த்த அநுமான அளவையெனவிதனைச் சொல்லவேண்டுவதின்றே. அது பொய்மை யென்பதின் றெனின் மெய்மை யென்பதும், தீமையென்பதின்றெனின், நன்மை யென்பதும், காரியமென்ப தின்றெனின், காரண மென்பது மின்றுதல் போலாம். அன்றியும் அநுமான அளவையி னிலக்கணமென்ப தியாது? கண்கூடாநுபவமாயிருக்கும் உண்மையிருப்பை யேதுவாகக்கொண்டு கண்கூடாநுபவமன்றுயதொன்றுளதென நிச்சயித்தலன்றோ? *இவ்வுலகம் கண்கூடாநுபவமாயினும், உண்மை யிருப்பெனப்படுமாயின், இதைக்கொண்டு நிச்சயிக்கப்படுகின்ற பரமென்பதும் உண்டெனப்படும். அன்றியும் உண்மை யிருப்பைக் கொண்டு நிச்சயிக்கும்நிச்சயத்திற்குப்பொருள்சித்திக்குமே

* கண்கூடா யிருப்பதெல்லாம் உண்மையா யிருக்குமென்கிற நியமமில்லை. ஏனெனில், கற்பனையும் கண்கூடா யிருக்கக்கூடும். கண்கூடா யிருப்பதற்கே பிரத்தியக்ஷ மென்று பெயர். ஆதலால் அப்பிரத்தியக்ஷம், யதார்த்தம், விபரீதம், சந்தேகம் என மூவகையா யிருக்குமென்க. இவற்றுள் உண்மையா யிருக்கிற கயிற்றைக் கயிறாக அறிவது யதார்த்தம். கயற்றினிடத்தில் கற்பனையாகப் பாம்பைபறிவது விபரீதம். கயிறோபாம்போவென ஐயமயமாக அறிவது சந்தேகம்.

யன்றிக் கற்பனையைக்கொண்டு நிச்சயிக்கும் நிச்சயத்திற்குப் பொருள் சித்திக்காதென வறிக. சித்திக்குமென்னில் அது வெறுஞ் சொல்லினாற் சித்திப்பதன்றி எதார்த்தத்திலன்றென்க. ஆனால் கண்கூடாநுபவமாகிய விவ்வுலகம் உண்மையிருப்பன்றோவெனின், இன்மையாகாதிருக்கட்டுமே. ஆகாதெனின், நாசமெய்தாதிருக்கட்டும். நாசமெய்துவதால்இன்மையென்பதற்கிழுக்கென்னை? இங்ஙன நாசமெய்துவானேனெனில்,சிருஷ்டி காலத்திற்கு முன்னொன்றில்லாத விதுபின்னொன்று தோன்றுவானேன்? அங்ஙனந்தோன்றுவது சங்காரகாலத்தி லின்மையாதற்கன்றோ? சிருஷ்டியென்பதற்று விளங்குகின்றதேயெனின், இலய மென்பது மற்றிருக்கவேண்டுமே: அங்ஙனமின்மையா லன்றோ பின்னொன்று இலயமாகின்றது. அதாவது பொய்யென்பதற் குரியதாகின்றது. இதைமெய்யெனச்சொல்லலாமா? மெய்யென்பதன்றாயின், அநுபவப்படா திருக்கட்டுமேயெனின், அநுபவப்படுகின்றமையால் உண்மையெனப்படுமா? உண்மை யெனப்படுமெனின், சொப்பனத்தின்கண் தோன்றும் நாமரூபப் பிரபஞ்சமானது அநுபவப்படுவதால் அஃது முண்மை யெனச் சொல்லலாமே? அங்ஙனங் கூடாதாகலின் அநுபவப்படுவதெல்லா முண்மை யென்னுஞ் சித்தாந்த மன்றென்க. அன்றியும் "இல்லது வாராது, உள்ளது போகாது," என்னுமிவை அறிவுடையோர்களால் வழங்கப்படுகின்றபடியினல் இவைகட்கு மாறுக வொன்றும் நடவாதென்க. அங்ஙனமின்றி மாறுகவே இல்லதுவருமெனின், இல்லாததாகிய

ஆகாயதாமரையும் உள்ளதாகவரவேண்டும். உள்ளதுபோகு மெனின் உள்ளதாகிய கடவுளுமில்லாது போகவேண்டும். அங்ஙனமின்றாதலால் உள்ளது உள்ளதே. இல்லது இல்லதேயாமென்க. உலகம் அநுபவத்தாலுள்ளதும், அழிவையெய்துவதாலில்லதுமா யிருக்கின்றதெனின், இங்ஙனம் உள்ளது, இல்லதெனவிருக்குமையமாகிய வுலகைக்கொண்டு ஓர்பரமிருக்கின்றதென நிச்சயித்த நிச்சயமும் ஐயமயமன்றோ? ஐயமயமான அப்பரத்தையாஷி அறிவானாகிய தனக்களிக்கின்றது? இதுவும் ஓரறமெனற்பாலதா? அன்றே. ஐயமகன்றிலங்குந் தெளிவுடைமையயன்றோ அளிக்கவேண்டியது? அதற்காகவன்றோ

"ஐயத்தினீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து."

என இம்மகா வாக்கியம் திருக்குறளின்கண் மெய்யுணர்வென்கிற அதிகாரத்தில் பிறந்திருக்கின்றது? பிறந்திருக்கின்றதால் ஞானகாண்டிகள் தமக்கு எதனையளிக்கின்றதென நன்குவிசாரித்துணர வேண்டுமென்க. அன்றியும்,

ஆஸ்திகமெனவும், நாஸ்திகமெனவுமிருக்கு மிரண்டு பக்ஷங்களில் ஆஸ்திகமென்பது கடவுளுண்டெனவும், நாஸ்திகமென்பது கடவுளின்றெனவுமான கொள்கையை வுடையனவாயினும், இவ்விரண்டு பக்ஷத்திலும் உலகமென்பதுண்டென்கிற உடன்பாடாதலாலும், இவ்வுடன்பாடாகிய விதனையே யாங்காங்குமுள்ள அறிவாகிய வுயிர்கள் தழுவித்

தழுவிச் சுகிக்கவேண்டிய தவசியமாதலாலும் இவ்வுலகை யே யளிக்கவேண்டுமெனின், உலகையாராயவேண்டியவாறு ஆராய்ந்து தெளிந்திருக்கின் இவ்வாறு மருண்டுபேசுதற் கிடந்தராதென்க. மருண்டுபேசுதலாவது ஐயமாகிய பரத்தையும், விபரீதமாகிய உலகையுமளிக்கின்றதென்பதேயாம். அன்றியும், ஆஸ்திக நாஸ்திக பக்ஷங்களில் உலகமுண்டென்னுமுடன்பாடென்று கூறுவதா லதைப்பற்றிச் சிறிதாராய்வாம். எங்ஙனமெனின்.

## உலக ஆராய்ச்சி.

உலகம் உலகமென வழங்கிவரும் இப்பெயரானது அர்த்தப்பெயரா? அன்றி அநர்த்தப்பெயரா? அர்த்தப்பெயர்தானெனின், அப்பெயர் எந்த அர்த்தத்திற்கியைந்ததாகும்? பஞ்சபூதங்களாகிய அர்த்தத்திற்கியைந்ததெனின், அப்பாஞ்சபூதங்களும் தனித்தனி வெவ்வேறுபெயரையேற்கின்றனவாதலால், அவைகளெங்ஙனம் உலகமென்கிற பெயரையேற்கும்? வெவ்வேறு பெயர்களாவனவெனின், பிருதிவு, அப்பு, தேயு, வாயு, ஆகாயம். அஃதாவது மண், நீர், தீ, காற்று, வெளி, என்பனவாம். இவ்வைந்தும் தனித்தனியுலகமெனப்படுமெனின், இவை வெவ்வேறு பொருள்களாகலின், வெவ்வேறுலகமெனப்படுமே? படுமாயின் ஐந்து உலகமேற்படுகின்றனவாதல், ஐந்துலகமிருப்பதாக எங்கேயேனுங் கண்டதாவது, கேட்டதாவதுண்டா? ஒருலகமுண்டென்பதற்கே பொருளில்லாது தத்தளித்துப்போமாயின், ஐந்து உலகமிருப்பதற்கு எங்ஙனம் பொருள்சித்திக்கும்? அன்றியும், உலக

மென்னும்பெயர் பொருட் பெயராகலின், இப்பெயரால் குறிக்கப்படும் பொருள் இதுதானெனச் சுட்டியுணர்த்தற் பாலதா? அன்று? சுட்டியுணர்த்தற்பாலதேயெனின், திருஷ்டியானது அதோமுகநோக்கிற்செல்ல (அதுவே, கீழ்நோக்கென்பது) அஞ்ஞான்றிதுதானுலகமெனச் சுட்டியுணர்த்தக்கூடுமேல் அங்ஙனமே யேற்பதற்கிழுக்கின்றெனக. இதுதானுலகமென்பதெனின், இதுதானெனக் குறிப்பித்த அதோமுகமாகிய கீழ்நோக்குச் சுட்டானது மகத்துருவமாகிய மட்பொருளில் தாக்குவதால் இம்மகத்துருவமாகியமட்பொருள் உலகமெனப்படுமா? படாதே. அன்றியும் ஷை திருஷ்டியானது, ஊர்த்துவமுகநோக்கிற்செல்ல (அதுவேமேல்நோக்கென்பது.) இதுதா னுலகமென்பதற்குப் பொருளெனச் சுட்டியுணர்த்துஞான்று, அச்சுட்டு எல்லையற்ற வெளிப்பொருளில் தாக்குகின்றதால், இவ்வெளிப்பொருள் உலகமெனப்படுவதா? அல்லவே. இங்ஙனமே ஏனையமுப்பூதங்களும் உலகமெனப் பொருள்படாதாயின், உலகமென வழங்கப்படுகிற பெயரானது மற்ற எப்பொருளுக்கியைந்ததெனப்படும்? பஞ்சபூதங்களுக்கல்லாமல், இவைகள் பஞ்சீகரணப்பட்டு இத்துணையதெனச் சொல்லுவதற்கியையாது, பெருமகத்தாகத்தோற்றப்படுந் தோற்றத்திற்கன்றோ வழங்கப்படுகின்றது? தோற்றமாகிய இக்குணமும் தொழிற்குணத்தையன்றி யின்றெனப்படுகின்றதே எங்ஙனமெனின்,

"ஐந்து பூதமும் பத்தாக்கி யவைபாதி நந்நான்காக்கி
நந்துதம்பாதி விட்டு நாலொடு நாலுங்கூட்ட

வந்தன தூலபூத மகாபூத மவற்றினின் றுந்
'தந்தன நான்காந் தூல தனுவண்டபுவனபோகம்."

என்று கைவல்லியத்திற் கூறியுள்ளபடி பஞ்சபூதங்களும் பஞ்சீகரணமாகின்ற கிரமப்படி தம்முட்கலந்து பஞ்சீகரித்தது தொழிற்குணமும், பின்ஞான்று பெருமகத்தாகக்காணப்படுவது தோற்றகுணமுமாமென்க. பஞ்சபூதங்களின்சேர்க்கையாகிய பஞ்சீகரணமில்லாவிட்டால் பெருமகத்தாகக் காணப்படுவதில்லை. ஆதலாலுலக மெனப்படுவது தொழிற்குணமாயும், தோற்றகுணமாயு மிருக்கின்றதென்க. அன்றியும், இரத கஜ துரக பதாதிகளாகின்ற நால்வகைச்சேனைகளு மொன்றுகக்கூடிய நிலைக்குச்சைனியமெனப் பேர்வழங்கப்படுவதுபோல, பாஞ்சபூதங்களும் பஞ்சீகரணப்பட்டுத் தோற்றுகிற தோற்றத்திற்கு உலகமென்கிறபெயர் வழங்கப்படுகின்றதால், இத்தோற்றம் சுயம்பெனப்படுமா? அன்றி விகாரமெனப்படுமா? சுயம்பெனப்படுமெனின், இப்பஞ்சபூதங்களையும் அறிவினாற் கலைத்துப்பார்க்குஞான்று அஃதிருக்கின்றதா? இரத கஜ முதலியனவாகச் சேர்ந்ததொகுதியைக் கலைத்துப்பார்க்குஞான்று, சைனியமென்பதெங்ஙன மில்லையோ அங்ஙனமே இப்பஞ்சபூதங்களையும் பிரித்துப் பார்க்குஞான்று, உலகமென்பதுமிராதென்க. அறிவினாற் கலைத்துப் பார்த்தலென்பதேனெனின், ஒவ்வொரு பொருளையும், தன் தன் காரணநெறித்தர்கக் கருவியினாற் கலைத்துக் கலைத்து (அதாவது பிரித்துப்பிரித்து)ப் பார்த்தல் தூலவாராய்ச்சியும், அங்ஙனமே யுணர்வினாற் கலைத்துக் கலைத்துப்

பார்த்தல் சூக்குமவாராய்ச்சியுமாதலாலும், தூலவாராய்ச்சியைவிடச் சூக்குமவாராய்ச்சி விசேடமாதலாலும் இங்கு அறிவினுற்கலைத்துப் பார்க்குஞான்றென்று கூறியதென்க. சைனியமென்பது இரத கஜ துரக பதாதிகளாகிய பல பொருள்கள் கூடியிருப்பதா லெங்ஙனம் * பலவினீட்டவிகாரமென்று சொல்லப்படுகின்றதோ, அங்ஙனமே பல பொருள்களாகிய பஞ்சபூதங்கள்கூடிய கூட்டத்திற்கு உலகமென்றும், பலவினீட்டவிகார மென்றுமாகின்றது. இதனுல் இது சுயம்பெனப்படுமா? அன்றே: அன்றியும், இப்பஞ்சீகரணம் ஜெனிக்குந்தன்மையை விடாதிருக்கின்றதால் ஜகத்தெனவும், பாஞ்சபூதபெளதிகமயமா யிருக்கின்றமையால் பிரபஞ்சமெனவும், இதற்குக்காரணப்பெயர்கள் வந்திருப்பனபோல், தோற்றுந்தன்மையாயிருக்கின்றதால் உலகமெனவும் ஒருகாரணப்பெயர் வந்திருக்கின்றது. இதனுல் இப்பெயர் அர்த்தப்பெயரெனப் படுமா? அநர்த்தப்பெயராகலின், இவ்வநர்த்தமாகிய தோற்றன்மாத்திரச் சொல்லையா

---

* பலவினப்பொருள்கள் ஒன்றுகூடியிருப்பதற்குப் பலவினீட்டவிகாரமென்று பெயர். இதற்குதாரணமாக வீடென்பது, தரை, சுவர், பலகணி, கதவு, கூரையாதிபலபொருள் கூடியிருப்பதாம். ஓரினப்பொருள்கள் ஒன்றுகூடி யிருப்பதற்கு ஒன்றன்கூட்டவிகாரமென்றுபெயர். இதற்குதாரணமாக நெல்லம்பாரமென்பது ஓரினமாகிய நெற்பொருள்கள் ஒன்ருய்க்கூடியிருப்பதாம். இவற்றை விகாரமென்பதேனெனின் சுயம்பாயில்லாமல் பிரிக்கக்கூடியதாய் வேறுவடிவத்தை யடைந்திருப்பதனு லென்க.

அறிவானென்பதற் களிக்கின்றது? கூடாதெனின், பின்பெதனை யளிக்கின்றது? உலகமென்கிறசொரூபம் அநர்த்தமாயினும், அர்த்தமாயு, மிருப்பாயுமுள்ள பஞ்சபூதங்களேயேனும் அளிப்போமேயெனின், பஞ்சபூதங்களேனும் பொருள்களாயிருக்கின்றனவாவென, ஒருவாறு யோசித்துப் பார்க்கலாம். எங்ஙனமெனின், இப்பூதங்களைந்தினுள் அசையப்பட்டவையெவை? அசையப்படாததெது? அசையப்பட்டவை மண்ணாதிசதுர்ப்பூதங்களும், அசையாப்பூதமாவது வெளிப்பொருளுமெனின், இச்சதுர்ப்பூதங்களும் விரிவொடுக்க முதலிய தர்மங்களை யுடையனவாய் எங்கே நிகழ்ந்து வருகின்றன? இவைகளின் நிகழ்ச்சிக்கிடமாயிருப்பது வெளியேயன்றி வேறு யாதாவதுண்டோ? இன்றாகலின், இவ்வெளி யாதுபொருளெனப்படும்? அருவப் பொருளன்றோ? அங்ஙனமிருக்கும் அருவமென்பது யாதெனப்படும். சூனியமெனச் சொல்லாது தப்பிக்கொண்டுபோக வேறுவழியுளதா? இன்றாகலின் சூனியமெனவே சொல்லித்தீரவேண்டும். சூனியமென்பது ஒன்றுமில்லாமைதானே? வெளியென்பது அருவமாயினும் ஒன்றுமில்லாமை யாகின்ற சூனியமெனப்படுமோ வெனின், அஃதங்ஙனமாகின்றதா? அன்றாவென யோசித்துப் பார்ப்போம். கடினம், மிருதுவாதி தன்மைகளையுடைய வெல்லாப் பொருளுஞ் சந்துடையன வாகின்றனவன்றோ? அஃதெங்ஙனமெனின், பொருள்களெல்லாம் அணுக்களின் கூட்டமா யிருக்கின்றனவாதலின் இவ்வணுக்கள் ஒன்றோடொன்று கூடியவிடத்திற்கு மத்தியில் சந்துக

ளென்பவை யேற்படுகிறதென்க. அன்றியும் இவ்வணுக்கள் சூக்கும அணுக்களின் கூட்டமாயும், சூக்குமவணுக்கள் பரமாணுக்களின் கூட்டமாயு மிருக்கின்றன வாதலாலிவைகள் கூடியிருக்கு மிடையிடையேயுஞ் சந்தென்பது உண்டெனவேற்படுகின்றதன்றோ? இங்ஙனமே பரமாணுவையும் நுட்பமாக வாராய்ந்தால், முற்றுஞ் சந்தென்பது ஏற்படுகின்றதென்க, முற்றுஞ் சந்தென்பது ஏற்படுகிறதெங்ஙனமெனின், வெற்ற வெளியாகிய வொன்றுமில்லாதவிடத்தில் ஒரு பொருளைக் கொண்டுவந்து வைத்தனொன்று, ஆங்கிருந்த வெளி எங்கேயாவது நகர்ந்து சென்றுவிடுமோ? வைத்தபொருளை ஆங்கிருந்துமெடுத்துவிட்டனொன்றுமீண்டு மவ்வெளி ஆங்குவந்து நிரம்பிவிடுமோ? அங்ஙன மின்மையால் இருந்த வெளி நிறைவாயிருக்க அதன்கண் மற்றப் பொருள்கள் கற்பனையாக நிகழ்கின்றனவேயன்றி யதார்த்தமாயிருந்து நிகழ்கின்றனவன்று. இங்ஙனமே பரமாணு நிகழினும், நிகழாவிடினு மதனுள்ளும் புறம்பு மிருப்பது வெளியேயாம். இவ்வெளியே முன்னொன்று சந்தென்று கூறப்பட்டது. இடமெனவும், ஆகாயமெனவும், இன்மையெனவும், சொல்லப்படுவது மிதுவேயாமென்க.

இங்ஙனமாகிய வெளி சூனியமென்று விழுக்கென்னை? ஆகலின் ஒன்றுமில்லாமையாகிய சூனியத்தின்கண்நிகழ்ந்து வரும், மண்ணாதி சதுர்ப்பூதங்களும் என்னவெனப்படும்? பொருளெனப்படுமெனின், பொருளென்பது உண்மைப்

பொருளா? அன்றி இன்மைப் பொருளா? உண்மைப்பொருள்தானெனின், உண்மைப்பொருளென்பது, இன்மையில் நிகழ்ந்துவரற்பாலதோ? நிகழ்கின்றதேயெனின், அவ்வின்மையென்பது, உண்மை யெனப்படு மிந்நான்கினும் நிறைந்திருக்க இவைகள்நிகழ்கின்றனவா?நிறையாதிருக்க நிகழ்கின்றனவா? நிறையா திருக்கவே நிகழ்கின்றனவெனின், வெளியாகிய இன்மையை நிறைவாக ஏற்றிலங்காத ஓர்சிறிய வுருவத்தையேனுங் காட்டுவதற்குக் கூடுமா? காட்டக்கூடாதன்றோ? இங்ஙன மிருப்பதால் அருவமாகிய இன்மைப்பொருளானது, உள்ளும் புறம்புமாக நிறைவுற்றிருக்க, அதன்கண் நிகழ்ந்துவரும் சதுர்ப்பூதப் பொருள்களும் எங்ஙனமுண்மையா யிருப்பன வென்றாகும்? ஆதலால் பொய்யென்பதே திண்ணமென்க. வெளி, உள்ளும் புறம்பும் நிறைவுற்றிருக்கினுஞ் சதுர்ப்பூதங்களும் அநுபவப்பட்டு வருகின்றனவே, இவற்றை யெங்ஙனம் பொய்ப் பொருள்களென்பதெனின்,

> "நிலமைந்து நீர்நான்கு நீடங்கி மூன்றே
> யுலவை யிரண்டொன்று விண்."

என ஔவையார் குறளின்கண் பிறந்துள்ள மகாவாக்கியத்தில் குறிப்பித்திருக்கின்றபடி, சதுர்ப்பூதங்களும், அவற்றிற்கிடமாயுள்ள ஆகாயமுங் குணங்களாய் முடிகின்றபடியால் எங்ஙனம் பொருள்களென்னலாம்? பொருள்களென்றதபடி அவற்றைக்குணமென்ப தெங்ஙனமெனின், நிலமெ

ன்னும் மட்பொருளானது, கந்தம், இரசம், உருவம், பரிசம், சத்தமாகிய விவ்வைந்தையும்; நீரென்னுஞ் சலப்பொருளானது, கந்தம் நீங்கலாகவேணைய இரசம், உருவம், பரிசம், சத்தம் ஆகிய விந்நான்கையும்; அங்கியென்னுந் தீப்பொருளானது, கந்தம், இரசம் நீங்கலாகவேணைய உருவம், பரிசம், சத்தம் ஆகிய விம்மூன்றையும்; உலவையென்னுங் காற்றுப் பொருளானது, கந்தம், இரசம், உருவம், நீங்கலாக வேணைய பரிசம், சத்தமாகிய விவ்விரண்டையும்; விண்ணென்னும் வெளிப்பொருளானது, கந்தம், இரசம், உருவம், பரிசம், நீங்கலாகச்சத்தமாகிய வொன்றையும், ஆகஇப்பதினைந்து பிரிவுகளையுந் தத்தமக்கியைந்த குணபேதங்களாகப் பெற்றிருக்கின்றன வெனக.

இக்குணபேதங்களுள் கந்தமொன்ருகவும், இரசமிரண்டாகவும், உருவம்மூன்ருகவும், பரிசம்நான்காகவும், சத்தமைந்தாகவு மிருக்கின்றன. எங்ஙனமெனின்,

கந்தம், நற்கந்தம், துற்கந்தமாதியாக விருப்பினும், மட்பொருளுக்கு மாத்திரம் பொருந்தியிருப்பதால் அஃதொன்றெனப்படுகின்றது. இங்ஙனமே இரசமும், கைப்பு கார்ப்பாதியாகவிருப்பினும், மட்பொருளுக்குப் பலசுவை பேதமாகவும், சலப்பொருளுக்கு மதுரமாகியவோர் சுவையாகவும் அமைந்திருப்பதனு லிரண்டெனவும்; உருவம் பலவேறு விசித்திரத்தன்மையா யிருப்பினும், மட்பொருளுக்குப் பலநிறவுருவமும், சலப்பொருளுக்குவெண்மைநிறவுருவ

மும், தீப்பொருளுக்குச்சிவப்புநிறவுருவமுமாகமூன்றுவிதங்களாயமைந்திருப்பதனுல் மூன்றெனவும்; பரிசம், தண்மை மென்மையாதி பல்வேறு வகையாயிருப்பினும், மட்பொருளுக்குக் கடினபரிசமும், சலப்பொருளுக்கு நெகிழ்ச்சிப் பரிசமும், தீப்பொருளுக்கு உட்டிணபரிசமும், காற்றுப்பொருளுக்கு மிருதுபரிசமுமாயிருத்தலால் நான்கெனவும்; சத்தம் பிரிவுபட்ட பலபேதங்களாயிருப்பினும், மட்பொருளுக்குக் கடகடசத்தமும், சலப்பொருளுக்குப் புளபுள சத்தமும், தீப்பொருளுக்குப் பகபகசத்தமும், காற்றுப்பொருளுக்குச் சலசலசத்தமும், வெளிப்பொருளுக்கு வறுஞ்சத்தமுமாயிருக்கின்றதால், ஐந்தெனவும் படுகின்றனவென்க. ஆதலின்,

இத்தியாதி குணங்களுக்குங் குணிகளாகிய பிருதிவியாதியொவ்வொன்றுந் தனித்தனி முதலாயிருக்கவேண்டியது அவசியமன்றோ? அங்ஙனமே இவைகள் தனித்தனி முதலாயிருக்கின்றனவெனின், இம்முதல்கள் இன்னபொருள்களான முதல்களென அவற்றைத்தேர்ந்து சொல்லும் வரையும் எங்ஙன மேற்கின்றது? இம்மண்ணுதிகளொவ்வொன்றும் முதலாக வில்லாமலா அததற்குமியைந்த கந்த முதலிய குணபேதங்களிருக்கின்றன? முதலின்றிக்குணமென்பது தனியேயிருப்பதுமுண்டா? இன்றுதலின், ஒவ்வொருபூதமுந் தனித்தனி முதலென்பதற்கு முரணின்றெனின், ஒவ்வொருபூதத்திற்கு மியைந்த பெயரையுங், குணத்தை

யுஞ்சுட்டாது முதல்களை மாத்திரஞ்சுட்டி யுணர்த்தக்கூடு மேல் ஏற்பதற்காக்ஷேபமியாது? அங்ஙனமுணர்த்துதலன்றோ அறிவுடைமை யெனப்படும்? அன்றேல் அறியாமையெனப்படுமே? இதுநன்கு சிந்திப்பதற்கு இடந்தருகின்றதன்றோ? பெயர்களையுங் குணங்களையும் அறிவினால் நீக்கிமுதல்களைமாத்திரஞ் சுட்டியுணர்த்த முடியாதேயெனின், எவைகளைச் சுட்டியுணர்த்தமுடியாது? மலடிபுத்திரன்போன்ற சொல்மாத்திரமா யிருப்பவைகளையன்றோ? அங்ஙனமே இவைகளுஞ் சொன்மாத்திரமானவைகளா? பொருள்களாக வொப்புக்கொண்டிருக்கின்றனமே. இஃதன்றியும், நாம் ஒப்புக்கொண்டபடி பொருள்களாகின்ற விவைகள் காரணப்பொருள், காரியப்பொருளென்னு மிவ்விருவகையில், காரணப்பொருள்களாகவிருக்கின்றனவா? அன்றிக் காரியப்பொருள்களாகவிருக்கின்றனவா? காரணப்பொருள்களாகவே யிருக்கின்றனவெனின்;எந்தக் காரியத்திற்குக் காரணங்களாயிருக்கின்றன? நிற்க, இவ்வைம்பூதங்களில் தடித்திலங்குகின்றது மட்பூதமாகலின், முதலாவதாக,

[1 - வது மட்பூதஆராய்ச்சி.]

இம்மட்பூதத்தை யாராய்ந்து பார்ப்போம். அவ்வாராய்ச்சியில் இதுபொருள்படுமாயின், மற்றவைகளுமங்ஙனமே பொருள்களென்று ஆக்ஷேபமின்றிக்கூறலாம். எவ்வாறெனின், சமுத்திரத்தின்கண் ஓர் குடநீரைமொண்டு, உருசித்துப்பார்த்து உவர்ப்பாயிருக்கக்கண்டு, மற்றநீரும் உவர்ப்பா

கவேயிருக்குமென்று தீர்மானிக்குஞ் சமுத்திரோதககலச ஞாயம்போலவென்க. எந்தக்காரியத்திற்குமண்காரணப்பொருளெனப்படும்? பூமியாகிற காரியத்திற்கெனின், அதுபெரிய மகத்துருவமாதலின் இம்மகத்துருவஞ் சுயம்பெனப்பட்டதா? அன்றி விகாரமெனப்பட்டதா? சுயம்பெனப்பட்டதெனின், இச்சுயம்புகலையத்தகுந்த நிலைமையதா? அன்றிக்கலையத்தகாதநிலைமையதா? கலையத்தகாத நிலைமையதெனின், காற்று, இடி, மழைமுதலியவைகளாலும், கேணி, குளமெடுத்தல், வீடுகட்டுதல், இன்னுமிவைபோன்றவநேக வேதுக்களாலுஞ் சிதைவுறாதிருக்கட்டுமே? அங்ஙனமின்றிச் சிதைவுறுகிறதால் எங்ஙனஞ் சுயம்பெனப்படும்? அன்றியுஞ் சிதைவுறுகின்ற இது எத்துணையெத்துணையாகச் சிதைவுறுகின்றது? அணுத்துணை யணுத்துணையாகவெனின், அவ்வணுக்களொவ்வொன்றும் என்ன வணுக்களெனப்படும்? கட்புலனுக் கதிநுட்பமாகத் தோற்றப்படு மணுக்களெனின், அவ்வணுக்கள் தூலவணுக்களெனப்படுகின்றதால், மேலே சூக்கும வணுக்களும், அதற்குமேல் காரணமாகிய பரமாணுக்களு முண்டெனப்படுகின்றதன்றோ? இம்மூவித வணுக்களைப்பற்றி பின்னொன் றாராய்வாமாதலின் முன்னொன்று மகத் துருவத்தைப்பற்றி யூகிக்குதும்.

இம்மகத்துருவம்அணுத்துணையணுத்துணையாகக் கலைவானேன்? அவ்வணுக்க ளொன்றோடொன்று சேர்க்கை யுற்று மகத்துருவ மானதினாலன்றோ மீண்டுங் கலைவுறுகின்

றன? இதனுலிம் மகத்துருவ மென்பது சுயம்பெனப்படா மல் விகாரமென்பதற் கிசைகின்ற தன்றே? இவ்விகாரம் என்னவிகாரமெனப்படுவது? ஒன்றன் கூட்டவிகாரமன்றே? அஃதெங்ஙனமெனின், ஓரினங்களாகிற தூலவணுக்கள் சேர்க்கையுற்றஞான்றும், அவைகள் கலந்தபின்ஞான்றும் எவை யிருப்பாக விருக்கின்றன? ஷை அணுக்களேயெனின், அவ்வணுக்கள் இருஞான்றிருப்பனவா? ஓர்ஞான்றிருப்பன வா? இருஞான்றிருப்பனவெனின், இருஞான்ருவது மகத் துருவுக்கு முன்ஞான்றும் பின்ஞான்று மெனப் பொருள் படுகின்றது. ஆதலால் மகத்துருவமென்பது முன்ஞான் றும் பின்ஞான்றும் இல்லையென் ருகின்றது. ஆகவே, அஃ தெஞ்ஞான் றிருப்பெனப்படும்? இடைஞான் றிருப்பெனப் படுமெனின், அவ்விடைஞான்று ஷை அணுத்திரள்களின் றெனப்பட்டதோ? இன்றெனின், மகத்துருவமாய் விளங்கு வது யாது? மகத்துருவந் தானெனின், இம்மகத் துருவுக்கு முன்ஞான்றும் பின்ஞான்றுமுள்ள வணுத்திரள்கள் இடை ஞான் றெங்ஙனம்போயின. இருக்கின்றனவெனின், அணு க்க ளிருக்கின்ற ஞான்று அவ்வணுக்களின் தசபுறத்தில் எங் கே இம்மகத்துரு விருக்கின்றது? ஓர் பொருளின்கண் மற் ரோர் பொருளிருப்பதற்கு ஞாயமென்னை? இருக்கமுடியா தாதலால் அவ்வணுக்களே யொன்ருகக்கூடித் தோற்றுகின் றனவென்க.

இதனுலிது ஒன்றன்கூட்ட விகார மென்பதற்கு முரா ணென்னை? அன்றியும், அங்ஙனந் தோற்றுகின்ற மகத்துரு

வம் அணுத்திரள்களை யன்றியுண்டா? இன்றெனின், அவ்வணுத்திரள்களா இம்மகத்துருவம்? அன்றெனின், இம்மகத்துருவமன்றெனவு மின்றெனவுமாகின்றது. ஆகவே அணுத்திரள் ஆமெனவு முண்டெனவு மாகின்றது. இங்ஙனம் மகத்துருவம் அன்றெனவு மின்றெனவுமா யிருப்பதொரு வகுப்பென்றும், அணுத்திரள்கள் ஆமெனவுமுண்டெனவு மாயிருப்பது மற்றோர் வகுப்பென்று மாகின்றதால், இவ்வகுப்புக்களில் எவ்வகுப்பு சித்தாந்தம்? எவ்வகுப்பு பூர்வபக்ஷம்? ஆமெனவு முண்டெனவுமாகத் தேர்ப்பட்டவணுத்திரள் சித்தாந்தமும், அன்றெனவு மின்றெனவுமாக முடியப்பட்ட மகத்துருவம் பூர்வபக்ஷமுமாமெனின், இவ்விரண்டில் எது தள்ளற்பாலது? எது கொள்ளற்பாலது? பூர்வபக்ஷமாகிய மகத்துருவந் தள்ளற்பாலதும், சித்தாந்தமாகிய வணுத்திரள் கொள்ளற்பாலதுமன்றோ? இதனால் மகத்துருவஞ் சொன்மாத்திரமுந் தோற்றன்மாத்திரமுமா யிருப்பதும், அணுத்திரள் பொருண் மாத்திரமா யிருப்பதுமாமென்க.

௦

அன்றியு மிம்மகத் தணுக்களை யோசிக்கின் மகத்துருவம் அறியாமையும், அணுத்திரள் அறிவுடைமையு மாகின்றன. எங்ஙனமெனின், மகத்துருவாய்த் தோன்றியதொன்றுமிருக்கின்ற அணுத்திரளைத் திருஷ்டிக்கின் மகத்துருவாய்த் தோற்றுந் தோற்றமென்பதெங்கே? அணுத்திரளின் நாட்டந் தவிர்ந்ததினாலன்றோ அம்மகத் துருவமாகத் தோன்று

கின்றது? அணுத்திரளை நாடாமை அறியாமை யாதலால், அவ்வறியாமையே மகத்துருவாய்த் தோன்றுகின்றது. ஆகலின் அங்ஙனந்தோன்றுகின்ற அறியாமைக்கு *ஆதாரமும் உபாதானமுமாக விருப்பதியாது? அஃது அணுத்திரளை நாடும் நாட்டமாகிய வறிவுடைமையன்றோ? இவ்வறிவுடைமையையன்றி அறியாமையும், அறியாமையையன்றி மகத்துருவமும் இன்றென்பதாயிற்று. ஆகவே நாம் பொருளாகப் பந்திக்கவேண்டியதெதை? இருக்கின்ற வணுத்திரளையெனின், அவ்வணுத்திரளின் நாட்டம் அறிவுடைமையாயினும், அவ்வணுத்திரளுள் ஒவ்வோரணுவும் பொருளா? குணமா? தொழிலா? பொருளெனின், சிதையும்பொருளா? சிதையாப்பொருளா? சிதையாப்பொருளெனின், கட்புலனுக்குத் தோன்றாது அதிருட்பமாகப் போகவேண்டுவதின்று. கட்புலனுக்குத் தோன்றாதுபோவதெங்ஙனமெனின்? சாளரத்தின் வழி

* எது எந்த ஆதேயத்திற்கு ஆதாரமா யிருக்கின்றதோ அவ்வாதாரம் அந்த ஆதேயத்திற் குபாதானமா யிருப்பதில்லை. திருஷ்டாந்தத்தில் சமுத்திரமானது தன் கண் மிதப்பதாகிய மரக்கலத்திற் காதாரமா யிருக்கின்றது. மரக்கலமோ ஆதேயம். ஆதாரமாகிய சமுத்திரம். ஆதேயமாகிய மரக்கலத்திற்குபாதானமாகவில்லை: எது எந்த உபாதேயத்திற்கு உபாதானமா யிருக்கின்றதோ, அவ்வுபாதானம், உபாதேயத்திற் காதாரமாகவு மிருக்கும். திருஷ்டாந்தத்தில் சமுத்திரம் தன்கண் தோன்றிய அலைதிவலையாதிகளுக்காதாரமாக விருக்கின்றது. அலைதிவலையாதியாகிய உபாதேயங்கள் ஆதேயமாக விருக்கின்றன. சமுத்திரமோ உபாதானமாகவும் ஆதாரமாகவு மிருக்கின்றது.

யாக வுள்ளே பிரவேசிக்குஞ் சூரியவொளியின்கண் புலப்படும் சிறிய துகள்போன்றதாயிருப்பதன்றோ தூலவணுவெனப்படுவது? இதுவே நுட்பமாக, அதிலுஞ் சாளர சூரியவொளியில்மாத்திரங் கட்புலனுக்குத்தோன்றுகின்றதாயின், இவ்வணுவைச் சிதைப்பதாலுண்டாகுஞ் சூக்கும வணுக்களெங்ஙனந் தோன்றுவதாகும்? இதனாலிங்ஙனஞ் சிதையக்கூடிய ஒவ்வொரு அணுத்தடிப்புஞ் சூக்குமவணுத்திரள்களின் சேர்க்கையேயென்க. சூக்குமவணு எவ்விதத்தாலுந் தோன்றக்கூடியதன்றோவெனின், அது ஸ்படிகமுதலிய கருவிகளைப்பெற்ற கட்புலனுக்கு அதிநுட்பமாகத் தோன்றுவதேயன்றி மற்றப்படி தோன்றாதென்க.

ஆதலின் அச்சூக்குமவணுத்திரளின்சேர்க்கைக்குமுன் ஞான்றுங் கலந்தபின்ஞான்றுந் தூலவணுவென்பதுண்டா? இன்றெனின், அஃதெஞ்ஞான்றுள்ளது? இடைஞான்றுள்ளதெனின், அவ்விடைஞான்று சூக்குமவணுத்திரள்களில்லாதிருக்கட்டுமே? இருக்கின்றதெனின், சூக்குமவணுத்திரளிருப்பின்கண் தூலவணுவென்பது குணபேதமாயிருக்கின்றதா? அன்றியோர் முதலாகவே யிருக்கின்றதா? குணபேதமாகவே யிருக்கின்றதெனின், அஃது எதனதுகுணபேதமென வினவிய ஞான்று அதற்கு விடையாகச் சூக்குமவணுவினது குணம், அதாவது சூக்குமஅணுத்திரக்ஷித்தடிப்பென்றுகின்றதன்றோ? ஆமெனின், இத்தடிப்பும் ஒன்றன்கூட்ட விகாரத்தடிப்பாகின்றதா? அன்றிப் பலவினீட்ட விகாரத்தடிப்பாகின்றதா? ஒன்றன்கூட்ட விகாரத்தடிப்பே

யெனின், இதுபோன்ற வெவ்வொரு தடிப்பும் ஒவ்வொரு முதலாகத்தோன்றுவானேன்? முதலாகப் பார்ப்பதனுலெனின், அங்ஙனம் பார்ப்பது சூக்கும வணுத்திரளை நாடாமையினுலன்ருே? இந்நாடாமை யென்னவெனப்படும்? அறியாமையெனப்படுமெனின், இதனுலிவ்வறியாமையே தூலவணுத்தோற்றமாகின்றதென்க. தூலவணுத்தோற்றம் அறியாமையாயின், அறிவுடைமையென்பது யாதெனப்படும்? தூலவணுத்தோற்றத்துக்கு முன்ஞான்றும், அத்தோற்றம் மாறியபின்ஞான்றும், தோன்றுமிடைஞான்று மிருப்பாகிய சூக்குமவணுத்திரளை நாடுவதன்ருே? அவ்வணுத்திரள் ஆமென்பதற்கு முண்டென்பதற்கு மியைந்ததா? அன்று? இயைந்ததுதானெனின், தூலவணுத்தடிப்பாகிய அறியாமையென்பது அன்றெனவுமின்றெனவுமாகின்றதே. அங்ஙனமாவதை யேற்கற்பாலதா? அன்று? அன்றெனின், இனி நாம் நாடவேண்டுவதெதை? சூக்குமவணுத்திரளையே யெனின், அவ்வணுத்திரளுள் ஒவ்வோரணுவும் ஒவ்வோர் முதலா? அன்று? முதல்தானெனின், அதிநுட்பமாகச் சிதையப்படுமுதலா? அன்றிச் சிதையப்படாமுதலா? சிதையப்படாமுதலெனின், அதிக சூக்குமமான கருவிகளைக்கொண்டகட்புலனுக்குக் கிஞ்சித்துந்தோன்ருமற்போவானேன்? எங்ஙனமெனின், கருவியைக்கொண்ட கண்ணுக்குப் புலப்படும் சூக்குமவணுவானது தகுந்த கருவியைக்கொண்டு சிதைக்குஞான்று இன்னுமதிநுட்பமாகப்பிரிந்து காரணவடிவத்தை யடைகின்றது.

இங்ஙனம் நுட்பமாகப்பிரிந்த காரணவணு, காரியவடிவமாகிய சூக்குமவணுவா யிருந்தபோதே கருவியைக்கொண்டகட்புலனுக்கு அதிகநுட்பமாகப்புலப்படுமாயின், சிதைந்தஞான்றெங்ஙனம் புலப்படக்கூடியதாகும்? இங்ஙனஞ் சிதைக்கப்பட்டுக் கண்ணுக்குத் தெரியாமற் போவதால், அச்சூக்குமவணுத்தடிப்புள் ஒவ்வொன்றும் மேலே யெவ்வணுக்களினது சேர்க்கையெனப்படும்? அவ்வணுக்களன்றோ காரணமென்னும் பரமாணுக்களென்பன. அப்பரமாணுக்கள் கருவியைக்கொண்ட கட்புலனுக்குக் கிஞ்சித்துந் தோன்றாதாயினும், அவைகளுண்டெனப்படுமா? அன்றி இன்றெனப்படுமா? உண்டெனப்படுமெனின், எங்ஙனமுண்டெனப்படும்? காரியவுருவங்களாகின்ற சூக்குமவணுவர்தியனைத்துமிருக்கின்றமையால் காரணமாகிய அப்பரமாணுக்களுண்டென்பதற்கு விருத்தமென்னை? அன்றியும் அப்பரமாணுக்களின்றெனின், அவற்றின் சேர்க்கையாகிய காரிய சூக்கும, தூலவணுத்திரள்களு மின்றெனப்படும்? இன்றாகவே அவற்றின் சேர்க்கையாகிய காரியவுருவமகத்தென்பது மின்றெனப்படும். இன்றாகவே பஞ்சேந்திரியாநுபவமு மின்றெனப்படும். இருக்கின்றதால் ஷ பரமாணுக்களெங்ஙனமின்றெனப்படுமெனின், இங்ஙனங் கூறியவனைத்துமறிவறியாமைப் பேதமாகஇல்லாதிருக்கட்டும்? எங்ஙனமவையறிவறியாமைப்பேதமாகுமெனின், பரமாணுக்களினது சேர்க்கைக்கு முன்ஞான்றும் அச்சேர்க்கை கலந்தபின்ஞான்றுஞ்சூக்குமவணுவென்பதுண்டா? இன்றெனின், அச்சூக்குமவணு

வென்பதெஞ்ஞான்றுள்ளது? இடைஞான்றுள்ளதெனின், அவ்விடைஞான்று பரமாணுக்களின் சேர்க்கையில்லாதிருக் கட்டும். இருப்பதால் அச்சூக்குமவணுத்தடிப்பானது குண பேதமாகவன்றோ விருக்கின்றது? அஃதெங்ஙனங் குண பேதமாகுமெனின்; பரமாணுக்கள் சேர்ந்திருக்குஞ் சேர்க் கையானது தொழிற்குணமாதலால், இச்சேர்க்கையைத் தவிர, பொருளல்லாத சூக்குமவணு குணபேதமேயன்றி வே றன்றெனக. இங்ஙனமிருக்குஞ் சூக்குமவணுவானது, பொ ருளாகத் தோன்றுவானேன்? அதனை நாம் பொருளாகப் பார்ப்பதினாலெனின், அங்ஙனம் பொருளாகப் பார்ப்பதற்கு ஏதுவென்னை? பரமாணுக்களைக் கண்கூடாக நாடாவிடினுங் கருத்தினாலேனும் நாடாதிருத்தலன்றோ? அங்ஙனமாகியநா டாமையென்ன வெனப்படும்? அறியாமை யெனப்படுமன் றோ? அவ்வறியாமையன்றோ சூக்குமவணுத் தடிப்பாகத் தோற்றுவது? இதனால் பரமாணுக்களை முதலாகவிடாது நாடிக்கொண்டிருப்பது அறிவுடைமையாயும், அவற்றின்சேர் க்கையாகிய சூக்குமவணுத்தடிப்பை முதலாக நாடிக்கொண் டிருப்பது அறியாமையாயு மாகின்றனவென்க.

இங்ஙனமே யேனைய தூலவணுக்களு மவற்றின்சேர்க் கையாகிய மகத்துருவமுமெனக்கொள்க. இத்துணை விசாரி த்ததில் இருப்பாகத் தேரப்பட்டவை யாவையெனின்? பர மாணுக்களெனப்படுவனவென்க.

இப்பரமாணுக்க ளிருப்பாகத் தேரப்பட்டவையாயி னும் இவற்றுளொவ்வொன்றும்பொருளெனப்படுமா? குண

மெனப்படுமாவெனச் சற்றுராயுதும். எங்ஙனமெனின், ஒவ்வொரு பரமாணுவுங்குணமா? பொருளா? குணமன்றுபொருளேயெனின், அங்ஙனம் பொருளாயிருப்பின் என்னபொருளெனப்படும்? சிறிதாயிருக்கும் பொருளெனின், பொருளென்பது சிறிது, பெரிது பேதங்களாகத்தானிருக்கின்றதோ? சிறிது, பெரிது, பேதங்கள் குணபேதமென அந்தகருக்குந்தெரிந்திருக்க, கற்றோராகிய நாம் அங்ஙன்கூறுவதுபொருத்தமாகுமா? ஆகாதாதலின், ஷெகுணத்தையுடையகுணிப்பொருள் எங்ஙன மிருப்பதாகத் தேர்ந்திருப்பது? சிறிதாக விருக்கின்றதே யதுதானெனின், எந்த முதல் சிறிதாக விருக்கின்றது? பரமாணுவெனின், பொருளென்பது எதுவெனக் கேட்டஞான்று குணத்தையும், பெயரையுங் காட்டுவது ஞாயமாகுமா? இது மிக்க விந்தையாயிருக்கின்றதே! பரமாணு முன்ஞான்றுசிறிதெனக்கூறப்பட்டது. இதில் பரமாணுவென்பது பெயர், சிறிதென்பது குணம்; இவ்வாறிருக்க, எந்தமுதல் சிறியதாயிருக்கின்றதென, எழுந்தவினவுக்குத் தக்கவிடை தராது பெயரையுங் குணத்தையுங்குறிப்பித்தல் எங்ஙன மிருக்கின்றதெனின், "கடம்பூருக்கு வழியாதெனின் இடம்பூணி யென்னெருதன்று." என்றாற்போன்ற விடை வழுவாயிருக்கின்றதாதலின், சிறிதென்பதற்கியைந்த பொருளை யருளாமல் அணுவெனவுஞ் சிறிதெனவுஞ் சொல்லிக்கொண்டு திரிவது பொருத்த மன்றென்க. நிற்க, சிறியதா யிருக்கின்ற பொருளென்பது யாது? நாமிதுகாறும் எப்பொருளை யாராய்ந்துகொண்டு வந்

தோம்? மட்பொருளையன்றோ? மண் ணென்கிற பெயருக்கியைந்த பொருள்நிச்சயம் மகத்துருவமா? அதன் காரணமாகிய தூலவணுவா? அதன்காரணமாகியசூக்குமவணுவா? அதன் காரணமாகிய இப்பரமாணுவா? பரமாணுதானெனின், மகத்துருவிலிருந்து காரண நெறித்தாக வாராய்ந்தாராய்ந்துவந்ததில், அனைத்துமதிநுட்ப நுட்பமாகப்போகின்றனவன்றோ? இவ்வாறு போவது நமது திருஷ்டி எங்கே போய்நிலைத்தற்கு? அணுத்தடிப்புகளில்வந்து நிலைத்தற்கா? அல்லவே; அன்றியும் மகத்துருவென்பது நீரிறைப்பதற்கியைந்தகருவியாகிய ஏற்றக்கோலினது அடியைப்போன்றதும், பரமாணுவென்பது அவ்வேற்றக் கோலினது நுனியைப்போன்றது மன்றோ? இங்ஙன மிருப்பதால், ஏற்றக்கோலினடியிலிருந்து பரிசித்துக்கொண்டே செல்லச்செல்ல அந்தம் எதுவாகமுடியவேண்டியது? நுனியாகமுடியவேண்டியதெனின், அந்த நுனிக்குப் பரிசத்தடை யென்பதுமுண்டோ? இல்லாததால் நாம் அடியிலிருந்து பரிசித்துக்கொண்டேவரின்,அப்பரிசமான தெங்கேபோய்நின்றுவிடும்? அருவமாகியவெளியின்கண் நின்றுவிடுமன்றோ? அதுபோல், மகத்துருவிலிருந்து நமது திருஷ்டியானது காரண நெறித்தாகச் செல்லச்செல்ல அந்தத்தில் திருஷ்டிக்கு யாதுபொருளாக முடியும்? மண்ணென்பதன்றோ பொருளாக முடியவேண்டும்? அம்மட் பொருளை யிதுவரையில் விசாரித்து எட்டாததென்னை? அங்ஙன மெட்டாதது அறியாமையா? அறிவுடைமையா? அறியாமையாகலின், அவ்வறியாமையினது ஏகதேசத்தடிப்புகளே பரமாணுக்க ளென்பதென்க.

அன்றியும், ஒவ்வோர்பரமாணுவும், மேல், கீழ், பக்கங்களாதியதசபுறமுள்ளதா? இல்லதா? உள்ளதுதானெனின், அத்தசபுறமு மிருப்பது யாதெனப்படும்? அருவமாகின்றவெளியென்னப்படுவதன்றோ? அவ்வருவமாகிய வெளியென்பதைப்பரமாணுக்கள் தத்தமது அகத்தின்கண் நிறைவா யேலாதிருக்கின்றனவா? ஏலாமலேயிருக்கின்றனவெனின், அப்பரமாணுக்கள் சலத்தோடு சம்பந்தமான விடத்து அச்சலப்பொருள் உட்சென்று தனது குளிர்ச்சியைத் தராதிருக்கட்டும். பரமாணுவென்பது நுட்பத்திற்கெல்லா மதிநுட்பமாயிருப்பதால், அஃதெவ்வாற்றலானும் பிரிக்க முடியாது. இங்ஙனமிருக்க, பிருதிவிப் பரமாணுவின்கண் சலப்பொருளானது எங்ஙனம் பிரவேசிக்கும்? அஃதும் பரமாணுவாகவன்றோ பிரவேசிக்கவேண்டும்? இங்ஙனம் ஒரு பரமாணுவின்கண் மற்றொரு பரமாணு பிரவேசிக்க என்னஞாயமிருக்கின்றதெனின், பிருதிவியைவிடச் சலமானது இலகு அல்லது சூக்குமமாதலால், பிருதிவிப் பரமாணுவைவிடச் சலப்பரமாணுவென்பது அதிசூக்குமமுமா யிருக்கின்றதென்க.

அன்றியும் (இருப்புப்) பாத்திரத்தில் சலம் நிரப்பியவுடன்று, அப்பாத்திரத்தின் புறத்தில் குளிர்ந்தபரிசந்தாக்குகின்றது. இப்பரிசமோகுணம். குணமாகியவிது தனது குணியாகிய சலம் பாத்திரத்தி னுட்புறத்திலிருக்க, அதைவிட்டுத் தான் வெளிப்புறத்தில் வருவதெங்ஙனங்கூடும்? வாராதாகலின், பரிசத்தோடுகூடிய சலமே வெளிப்புறத்தில்

வருகின்றதென்க. ஆனால், அச்சலம் அதிசூக்குமமாய் வருகின்றதினால் கண்ணுக்குப் புலப்படாமல் பரிசத்திற்குப்புலப்படுகின்றது? இங்ஙனமே பிருதிவிப்பரமாணுவின்கண்ணுஞ் சலமானது அதிசூக்குமமாய் பிரவேசிக்கின்றதென்க. இங்ஙனம் சலப்பொருள் உட்சென் றூறுவதற்கு அப்பரமாணுக்கடோறும் யாதிருக்கின்றது? இடமிருக்கின்றதன்றோ? அந்தவிடமன்றோ அருவமாகியவெளியெனப்படுவது? அருவமாகிய வெளியென்பது அப்பரமாணுக்களினகத்து மாத்திரமன்றிப் புறத்தும் பிரிவுபடாது நிறைவுற்றிருக்கின்றதா? அன்றா? நிறைவுற்றே யிருக்கின்றதெனின், அந்நிர், வடிவ வெளி நிறைவின்கண், அதற் கெதிர்மறையாகிய வடிவமுடைய பரமாணுத்தடிப்புக ளென்பதேது? இருக்கின்றனவேயெனின், இவ்விருப்புந் தோற்றன்மாத்திரமாகவா? அன்றிப் பொருளாகவா? பொருளாகவேயெனின், நீக்கமற்ற நிறைவாகிய வெளியின்கண் இவைதோற்றன்மாத்திரமாகக் காணப்படுவதன்றிப் பொருள்களாக விருக்குமா? ஓர்பொருளிருக்கு நிறைவின்கண் மற்றொன்று பொருளாயிராமல் தோற்றமாயிருப்ப தெங்ஙனமெனின், கயிற்றின்கண்தோன்றிய பாம்பானது கயிறு எத்துணை நிறைவாக விருக்கின்றதோ, அத்துணைநிறைவாகவுமிருக்கின்றது. அணுத்துணையுங் குறைந்தாவது, மிகுந்தாவ திருக்கின்றதில்லை. இங்ஙனமிருக்கும் பாம்பு, தோற்றமாகவே யிருக்கின்றது ஆனால், பொருளாயில்லை. இங்ஙனமே வெளியானது நிறைவாயிருக்கின்றதால், இந்நிறைவின்கண் பரமாணுவானது எங்ங

னம் பொருளாக விருக்கக்கூடும்? ஆகலின், தோற்றமாகவே யிருக்கின்றதென்க.

அன்றியும், இப்பரமாணுக்கள் பொருள்களாகவிருக்கின்றனவென என்ன வளவையினுலேற்கப்படும்? கருதலளவையாகிய அநுமானவளவையாலெனின், அநுமானவளவை கண்கூடாகிய மகத்தணு பேதங்களை யேதுவாகக்கொண்டேற்பதன்றே? ஆம். அங்ஙனமேற்பதனுலிழுக்கென்பதென்னையெனின், மகத்தணுபேதங்கள் கண்கூடாயினுஞ் சொன்மாத்திரமுந், தோற்றன் மாத்திரமுமெனப்படாதிருக்கின்றனவா? இன்றுதலின், இங்ஙனஞ்சொன்மாத்திரமுந், தோற்றன்மாத்திரமுமானவை யறியாமையெனப்படுமா, அன்று? அறியாமையாதலின், இவ்வறியாமையை அறிவுடைமையாக மயங்கிப் பொருள்நிச்சயஞ்சொல்லப்போந்தது, அறியாமையினு மறியாமையேயென்க. பொருள்நிச்சயமின்னவாறென அறிவுடைமையினுல் தெரிவிப்பதைவிட்டு, இங்ஙனமறியாமையினுல் பொருளல்லவற்றைப் பொருளென்று சொல்லிக்கொண்டுதிரிவது, பயன்படாதவைகளை மொழிதலாகின்றதன்றே? பொருளிருக்கும்படியான வொன்றைப்பற்றி யெவ்வளவேனு,மெந்தஞாயங்கொண்டாவது பேசலாம். அங்ஙனம் பேசுவதனுலும் பயனுண்டாகும். ஆனுலற்பமேனும் பொருளில்லாததைக்குறித்து எவ்வளவுபேசியும் பயன்யாதுளது? இதனுலிது பயனில்கூற்றாகுமன்றே? ஆனதால்,

"பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரு மெள்ளப் படும்." என்றும்,

"பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
மாசறு காட்சியவர்." என்றும்,

"பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்."

என்றும், இம்மகாவாக்கியங்கள் திருக்குறளின் கண், பய னிலசொல்லாமை யென்கிற வதிகாரத்தில் பிறந்திருக்கின் றன. அன்றியும் ஷை குறளின்கண்,

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

எனப்பிறந்திருக்கின்ற மற்றோர் மகாவாக்கியார்த்தத் தின்படி, காணப்படு மொவ்வொரு பொருளின்கண்ணும், மெய்ப்பொருளை விசாரித்துணராது, அவ்வப்பொருள்களை யப்படி யப்படியே பார்த்துக்கொண்டிருப்பதனு லன்றோ கிஞ்சித்தும் பொருள்நிச்சயந் தோன்றாமல் தேகபோகங் களுக்காகவே அங்காந்து திரிந்துகொண்டிருக்க நேரிட்டி ருக்கின்றது? அன்றியும், ஷ பரமாணுக்கள் அநுமானத் தாலுண்டெனக் கொள்வதே யறியாமையாயிருக்க, அவை அருவமாகிய வெளியென்பதைத் தத்தம்பால் நிறைவாகவுற் றுக்கொண்டிருப்பதை யறிந்து மவைகள் பின்னுமுண்டெ னக்கொள்ளுவது இரட்டித்த வறியாமையன்றோ? ஆகலின், இங்ஙனமாகிற வறியாமையானது அகலுமார்க்கமியாது? அதிஷ்டானமாகிய மட்பொருளை யெட்டுவதன்றோ? அதா

வது, அனுமகத்துப் பேதங்களாயிருக்கின்ற தர்மங்களெந்த முதலினதென்று நாட்டமென்ப தழுந்துமாறு விசாரித்துச் செல்லுதலென்க. இங்ஙனமாக நாமிதுகாறு மேனெட்டவில்லை? நாமெட்டினு மெட்டாவிடினும் மட்பொருளென்ப தின்றோ? அது மலடி மைந்தன்போன்ற சொன்மாத்திரமா? அல்லவேயெனின், இத்துணையூகமிருக்கு ஞான்று அங்ஙனமேனெட்டப்படாது? எட்டும்படியான ஆற்றலில்லாதது பற்றியா வெறுஞ்சொல்லால்மாத்திரம் பொருளுண்டென்று சொல்லிக்கொண்டிருப்பது? அவ்வாற்றல்அறிவுடையாரிடத்திருப்பதாகலின், அவர்க்கெதிர்மறையினராயிருக்குநாம், அவ்வாற்றலிற்செல்லாமல் விட்டுவிட்டுத்திரிந்து கொண்டிருக்கின்றோம். இங்ஙனமிருப்பது என்ன பொருள்நயங்கருதியோ? அங்ஙனம் நாமெட்டாக்காறும் அனுமகத்துப் பேதங்களாகிறதோற்றங்களெங்ஙனம்நமதுதிருஷ்டியைவிட்டகலும்? அவைகளகலாக்காறுந் துக்கநிவர்த்தியென்பதுஎங்ஙனம்வாய்க்கும்? அதன்பின்னர் சுகோதயமென்பதெங்ஙனம்வெளிப்படும்? சுகோதயம்வெளிப்படாதாயின் நாமென்னகதியாயிருப்பது? அல்லலுற்று விடாது வதையவேண்டுமன்றோ? இங்ஙனம்வதையுறுதற்காகவா நாம் மானிடயாக்கையுற்றிருக்கின்றோம்? பிறவிகளெல்லாவற்றினும் மக்கட் பிறவியானதுசிறந்ததன்றோ? இதற்காகவன்றோ "(தாயுமானர்) எண்ணரிய பிறவிதனின் மானிடப்பிறவிதான் யாதினுமரிதரிதுகாண்." என்றும்,

ஞானவாசிட்டம்.

எறியுங்கடலி னுகத்துளையி னியாமைக்கழுத்துப் புகுவதுபோற், பொறிவெம்பிறவி யனேகத்தாற் புருடன்விவேகியெனப்பிறந்து, முறியும்பிறவிப் பயனிலதிம் மோகமமமையுஞ் செய்தொழிலாற், செறிவதென்னேயிவற்றாலே தினங்களெல்லாஞ் சென்றிடுமால்"

என்றுங் கூறியிருக்கின்றதா லிவ்வாக்கியங்களைக்கவனிக்குஞான்று எத்துணையாக வறிவுறுத்துகின்றதாயிருக்கின்றது? இத்துணையரியதாகிய, பிறவியை நாமடைந்திருப்பதுயாதுக்கு? நான், நீ, அவன், அவள், அது வெனும்விடயங்களையேற்றிக்கொண்டு கர்த்தத்துவ, போக்தத்துவ முற்றிருப்பதற்காகவா? இங்ஙனமிருப்பதினால் விளையக்கூடியபயன்துக்கவிர்த்தியேயன்றி. துக்கநிவர்த்தியாமா? துக்கவிர்த்தியைத்தேடிக்கொள்வதற்குத்தானே இவ்வரியபிறவியையெடுத்தது? இதனினு மிருகாதி பிறவிகள் சாலுமானதன்றோ? மிருகாதிகளினுங் கர்த்தத்துவ, போக்தத்துவ முற்றிருக்கின்றதினால், அவைகளும் நாமும் ஒரேநிலைமையுற்றிருப்பதாகக் காணப்படுகின்றதே: இதனையறிந்தன்றோ,

ஜீவகாருண்யவிளக்கத்தில்

மனிதரெனப் பேர்பெற்றீர் மாந்தரெனற் கெங்கே<br>
தினையளவு மர்த்தமெங்கே தேர்ந்தீர் - தனுவளவாக்<br>
கண்டுநா னென்னல் கழுதையினு மிக்கதெவன்<br>
பண்டிதர்கா ளெங்கே படிப்பு.

என்று ஆன்றோராற்கூறப்பட்டிருக்கின்றது? நிற்க,ஓர்பூதமாகியமட்பொருளினது நிச்சயத்தையேதேர்ந்தெட்டாதபடி இங்ஙனம் பராக்காயிருக்கின், ஏனைய நாற்பூதப் பொருள்களினது நிச்சயத்தை யெங்ஙனமெட்டக்கூடும்? இதனை நன்கு சிந்தித் துணரவேண்டியது நமக்கவசியமாமென்க.

(2 - வது,) [சலபூத வாராய்ச்சி.]

ஆதலால், அந்நாற் பூதங்களி லொன்றாகிய சலப்பொருளென்பது பொருளா? அன்றா? என்பதைப்பற்றிச் சற்றூகிக்குதும். சலமென்பது பெரும்பாகமாக விரிந்திருக்கின்றது. இங்ஙன மிருக்கின்ற விரிவு கடல் அல்லது சமுத்திரமெனப்படுகின்றது. கடலாகின்ற விது மகத்துருவமாயினும், இம்மகத்துருவம் பொருளெனப்படுமா? அன்றா? பொருளென்பதுதானெனின், பல துளிகளாகப் பிரியாதிருக்கட்டும். எங்ஙனமெனின் "பலதுளி பெருவெள்ள" மென வழங்குவதற் கிணக்கமாக அநேக மாயிரங் கோடித் துளிகள் சேர்ந்து கடலென்கிற மகத்துருவமாகத் தோன்றுகின்றன. இம்மகத்துருவம் பலகோடித் துளிகளினுடைய சேர்க்கையா யிருக்கின்றபடியால் மீண்டும் அத்துளிகள் பிரிகின்றன. இதனால் கடலென்கிற மகத்துருவத்திற் கிருப்பு யாதெனப்படும்? அம்மகத்துருவந்தானெனின், அது பல துளிகளாகச் சேர்ந்த சேர்க்கைக்கு முன்னான்றிருப்பென்பதா? அச்சேர்க்கை பிரிந்த பின்னான் றிருப்பென்பதா? அவ்விரண்டு மின்றெனின், பின்ன ரெஞ்ஞான்

றுள்ளதெனப்படும்? இடைஞான்றுள்ளதெனின், அவ்விடைஞான்றுள்ள பலதுளிகளு மொன்ருகச் சேர்ந்திராவிடின் கடலென்கிற மகத்துருவத்திற்குப் பொருளெங்கே? மகத்துருவமாயிருக்கின்றதேயெனின், பலதுளிகளிருக்கின்ற இருப்பில் இம்மகத்துருவ மெங்ஙன மிருத்தற்கியையும்? அத்துளிகளோடு மகத்துருவமு மிருக்கின்றதெனின், அத்துளிகள் சேர்க்கையுரு முன்ஞான்று அத்துளிகளோடு இம்மகத்துருவமுண்டா? இன்றெனின், அத்துளிகள் கலந்து தனித்தனியாயிருக்கும்பின்ஞான்றேனுமுண்டா? இன்றெனின், பின்னரெஞ்ஞான்றுள்ளது? முன்பின்னில்லையாயினும் இடைஞான்றேனுமின்ருேவெனின், அவ்விடைஞான்றுந் தோன்றுகிறதுமாத்திரமேயன்றி, மகத்துருவ மென்னுஞ்சொல்லுக்குப் பொருளுண்டா? இல்லையாதலின், இம்மகத்துருவந் தோற்றன்மாத்திரமேயன்றி வேறன்றென்க. இங்ஙனமாகியதோற்றம்விகாரமெனப்படுவதால், (துளிகளாகின்ற ஓரினத்தின் சேர்க்கையாலான) இஃது ஒன்றன்கூட்ட விகாரத்தோற்ற மாகின்றதன்ருே? ஆதலின், இத்தோற்றம் அஷ்ஷ துளிகளையன்றி யுண்டெனப்படுமோ? இன்றெனின், இத்தோற்றமா அஷ்ஷ துளிகள்? அன்றெனின், இதனுலித் தோற்றம் இன்றெனவும், அன்றெனவு மாகின்றது. ஆகவே, இவற்றிற் கெதிர்மறையாய் உண்டெனவும், ஆமெனவுமாக விருப்பதியாது? அத்துளிகளன்ருே? ஆமெனின், அத்துளிகளே சலப்பொருளென்பதற்கையமென்னே? இன்ருகலின், கடலாகிய மகத்துருவம் சலப்பொரு ளன்றென்பதாயிற்று.

இங்ஙனங் கடலாகிய மகத்துருவம் பொருளன்றென முடிகின்றதனு லறியாமையாயும், துளிகள் பொருளென முடிகின்றதனு லறிவுடைமையாயு மாகின்றனவென்க. இதுகாறு மாராய்ந்ததில் அறிவுடைமையாகத் தேர்ந்தது துளிகளாகின்றதனுலிவைகளும் பொருள்களாக விருக்கின்றனவா, அன்றுவெனச் சற்றுராய்ந்து பார்ப்போம். அவற்றையாராயவேண்டுவானேனெனின், முன்னொன்று பொருளாகத் தோன்றிய கடலுருவம், ஆராய்ந்த விஞ்ஞான்று பொருளாயிற்று? கற்பனையாக முடிந்ததன்றே? இங்ஙனமே இத்துளிகளுங் கற்பனையாகமுடிகின்றனவா, அன்று வெனவாராய வேண்டுமென்க.

இத்துளிகள் ஒவ்வொன்றும் சுயம்பா? அன்றிவிகாரமா? அறிவுடைமையாகத் தேர்ந்தமையால் சுயம்புப்பொருள்களே யெனின், கட்புலனுக்கு அதிநுட்பமாகத் தோன்றுமாறு அணுக்களாகச் சிதையாதிருக்கட்டும்? அங்ஙனஞ் சிதைகின்றமையால் தோற்றுகின்ற துளிகளென்பதின்றே வெனின், அத்துளிகளொவ்வொன்றும் உண்டென்பது,அதிநுட்பவணுக்கள் ஒன்றோடொன்று சேர்ந்திருக்குஞான்றே? அன்றித் தனித்தனியாயிருக்குஞான்றே? எஞ்ஞான்றுமே யெனின், அவ்வணுக்களின் சேர்க்கைக்கு முன்ஞான்றேனு முண்டா? இன்றெனின், அச்சேர்க்கை கலைந்தபின்ஞான்றேனுமுண்டா? இன்றெனின், இவ்விருஞான்றுமில்லாத வொவ்வொரு துளியென்பதும், பின்னரெஞ்ஞான்றுள்ள

தெனப்படும்? இடைஞான்றுள்ளதெனின், அவ்விடைஞான்றும் ஷ அதிநுட்பவணுக்களையன்றி யுண்டெனப்படுகின்றதா? இன்றாதலால், துளிகளாகத் தோற்றுந் தோற்ற விகாரமென்பதற் கிழுக்கென்பதென்னை? அவ்விகாரமுமொன்றன்கூட்ட விகாரமாக விருக்கின்றதே. இதனாலித்துளிகள் எங்ஙனஞ் சுயம்பெனற்பாலதாகும்? துளிகள் விகாரமாய் முடிந்ததால், இருப்பாகத் தேரப்பட்டவை யாவை? ஷ நுட்பவணுக்கள் (துளிகள் சிதைய வியாபித்திருக்கின்ற ஈரமாகிய வணுக்கள்) தாமெனின், அவற்றையன்றித்துளிகளாகிற தோற்றங்களுண்டா? இன்றெனின், அந்நுட்பவணுக்களா இத்துளிகளாகிற தோற்றங்கள்? அன்றெனின், இவைகளின்றெனவு,மன்றெனவுமாகின்றன. ஆகவே, உண்டெனவும், ஆமெனவுமிருப்பது யாதெனப்படும்? நுட்பவணுக்கள் தாமெனின், இவைகளறிவுடைமையு, மத்துளித்தோற்றங்களறியாமையு மாகின்றனவென்க. இதனால் அவ்வீரமாக வியாபித்த நுட்பவணுக்கள், ஆராய்ச்சியினால் தேரப்பட்ட சலப்பொருளாய் முடிந்தன. அல்லாமல், வெறுந் தோற்றங் காரணமாக வுண்டெனப்படுமாயின், ஆராய்தல் அறிவுடைமையன்றென முடியும். அன்றியுந் துளித்தோற்றங்க ளாராய்ந்த விஞ்ஞான்று உண்டெனப்பட்டனவா? இன்றாகலின்,அவைகளை யெங்ஙனமிருப்பதாகக் கொள்வது? இதனால் தோன்றப்படு மொவ்வொன்றையும் பொருளா,அன்றா வென ஆராய்ந்து பார்க்கவேண்டியது நம்மேல் விழுந்த கடமையாயிருக்கின்றதென்க. இதற்காகவே,

"எப்பொருளெத்தன்மைத்தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

என மகாவாக்கியம் திருக்குறளின்கண் பிறந்திருக்கின்றது. நிற்க, இதுகாறு மாராய்ந்து வந்ததில் அதிநுட்பவணுக்கள் தேரப்பட்டமையால், இவைகளும் பொருளென்பனவா? அன்றெவ்ன இன்னுஞ் சற்றாகிக்குதும்.

கட்புலனுக்கு அதிநுட்பமாகத்தோன்றுமிவ்வணுக்கள் பொருள்களேயெனின், அவைகள் சுயம்புப்பொருள்களா? அன்றி விகாரப் பொருள்களா? சுயம்புப் பொருள்கள்தாமெனின், இவற்றுளொவ்வொன்றும், கட்புலனுக்குக் கிஞ்சித்துந் தோன்றாது போகுமாறு கலையாதிருக்கட்டும்? அங்ஙனங் கலைவுறுகின்றமையால் இவ்வணுக்களென்னவெனப்படும்? ஒவ்வொன்றும் விகாரமெனப்படுமன்றே? அதிலும் ஒன்றன்கூட்ட விகாரமெனப்படுமன்றே? ஓரினங்கள்கூடிய இவ்வொன்றன்கூட்டவிகாரம்அந்தத்தில்யாதாகமுடிந்தது? தோன்றாவணுக்களாகவன்றே? அவ்வணுக்களன்றே பரமாணுக்களென்று சொல்லப்படுகின்றன? அப்பரமாணுக்களின் சேர்க்கையே யிந்நுட்பவணுக்களெனப்படுகின்றமையால், இவைகள் அச்சேர்க்கையையன்றியுண்டெனப்படுமா? உண்டெனப்படுமெனின், தோன்றாவணுக்களாகக் கலைந்து போகாதிருக்கட்டும்? கலைந்துபோவதால், கலைந்தஞான்றிருப்பவை ஷ்டிதோன்றா வணுக்களன்றே? அவ்வணுக்கள் ஒன்றோடொன்று சேராது தனித்தனியா யிருக்குஞான்றும்,

இருப்பவை யவ்வணுக்களேயன்றோ? இங்ஙனமிருக்க, கட்புலனுக்கு அதிநுட்பமாகத் தோன்றுமணுக்கள் தோற்றன் மாத்திரமாக விருப்பவையே யன்றிப் பொருள்களாகவிருப்பவையன்றென வுணராததாலன்றோ, அவைகளை யுண்மைப் பொருள்களாக இதுகாறுங் கொண்டிருக்கநேர்ந்தது? அன்றியும், அந்நுட்பவணுத்தோற்றங்கள் பரமாணுக்களையன்றி யிருப்பெனப்படுமா? இன்றெனின், அப்பரமாணுக்களாவித் தோற்றங்கள்? அன்றெனின், இவைகள் இன்றெனவு, மன்றெனவுமாகின்றன. இதனாலிவைகள் அறியாமையென்பதற்கிழுக்கென்னை? இங்ஙன மறியாமையென்பது இன்றெனவு, மன்றெனவுமாகுமாயின், அதற்கெதிர்மறையாயிருப்பதாகிய அறிவுடைமை யென்பது, உண்டெனவு, மாமெனவுமாகுமன்றோ? ஆகின்றதால், இத்துணை யாராய்ந்ததி லிருப்பாகத் தேர்ந்தவை பரமாணுக்களேயென்க.

அறிவுடைமை யென்பது ஷை பரமாணுக்களையன்றி யின்றாகலின், அவ்வணுக்களென்னவெனப்படும்? பொருள்களெனப்படுமெனின், அவைகள் சலப்பொருளாகவேண்டுமன்றோ? பரமாணுக்கள் சலப்பொருள்களாக ஆகுஞான்று இவ்வணுக்களின்காரியமாகிய நுட்பவணுக்களும், அவற்றின் காரியமாகிய பலதுளிகளும், அவற்றின் காரியமாகியகடலென்னுமகத்துருவமும், மண்ணினது அணுமகத்காரியங்களைப் போல ஆரோபத்தோற்றங்களேயன்றிப் பொருள்களன்றென்பதென்க. நிற்க, நுட்பவணுக்களினாராய்ச்சி முடிவின்கண்

பொருள்களாயிருப்பவை பரமாணுக்களாயினும், அவைகள் ஒவ்வொன்றுந்தோன்று வணு நுட்பங்களாக, அதாவது, சிறுமை, நுண்மைமுதலியனவாக முடிவானேன்? இங்ஙனமுடிவதாலிவைகள் குணபேதங்களன்றோ? இக்குணபேதங்கள் எந்தமுதலினதெனப்படும்? சலமாகிய முதலினதெனின், சலமென்பதற்குப்பொருளியாதென, இத்துணையுமாராய்ந்து கொண்டுவந்ததில் நாம் பொருளாகத் தேர்ந்திருப்பதெதை? அப்பொருள் இன்னதெனத் தோன்றவில்லையேயெனின், ஆனால் குணபேதங்களின் திரக்ஷிகளையெல்லாம் பொருள்களெனக்கொள்ளலாமா? கூடாதெனின், நமது திருஷ்டி எதன்கண் அழுந்திப்பந்தித்திருக்கவேண்டியது? அம்முதல் தோன்றாமையாயிருக்கின்றதினால், தோன்றுகின்றவணுமகத்துப் பேதங்களிலேயே யழுந்தியிருக்கவேண்டுமெனின் "எப்பொருளெத்தன்மைத்தாயினு மப்பொரு,ளெப்படிக்காண்ப தறிவென்றது, மெய்ப்பொருள்காண்பதறிவென்பானேன்? அம்மகாவாக்கியம் நமது திருஷ்டி அணுமகத்துப்பேதங்களிலழுந்தியிருப்பதற்குத் தானோ அங்ஙனங் கூறியிருக்கின்றது? மெய்ப்பொருளென்பதெங்கே? மகத்துருவமுதல், பரமாணுவரையில் ஆராய்ந்து பார்த்துவந்ததில், யாவுங் குணபேதங்களாயிருக்கின்றனவே? இக்குணபேதங்களையெல்லாம் பொருளல்ல பொருளல்லவெனக் கழித்துவிடாமல், உண்மையென அதாவது பொருளென வுணர்ந்திருப்பதினாலன்றோ, ஷை குறளில் "பொருளல்லவற்றைப் பொருளென்றுணரு மருளென்று" கூறியிருக்கின்றது? யாவையும் அல்ல

வல்லவெனக்கழித்து, அந்தத்தில் எதைநாம்ஆமெனத்திருஷ்டிக்கின்றது? முதலாகிய சலப்பொருளையன்றோ? அச்சலப்பொருள் அறிவுடைமையெனப்படுமன்றோ? இங்ஙனமாகிய வறிவுடைமையைத் திருஷ்டிக்காது, தோற்றங்களையெல்லாம்சலப்பொருள் சலப்பொருளெனப் பிதற்றிப் பிதற்றித் திரிந்துகொண்டிருப்பது எத்துணைமடமை யெனப்படும்? இத்துணைமடமையையுடையயாம்கற்றோர்களென்றுநம்மை வெட்கமின்றித் தீர்மானித்துக் கொண்டிருக்கின்றோம் உண்மையில் நமதுநிலையைக் கவனிக்குஞான்று, நாம் கற்றோர்களாவோமா? அல்லவே, அன்றியும் நம்மை இதுகாறுங்கற்றோர்களென்று மதித்திருக்கின்ற வுயர்வினால் பொருளல்லாதவைகளைப் பொருளெனப்பற்றி யிருக்குந்திருஷ்டியானது அற்பமேனும் நம்மைவிட்டகன்றதா? இல்லையே. இதனாலன்றோ,

வைராக்கியசதகத்தில்,

"வாயினாற்பல நூல்படித்துணர்ந்துநல் வழிபிறர்க்குரை செய்து, நீயுலோகவா சாரமோரணுத்துணை யானுநீங்கிலை நன்னெஞ்சே, தூயதாமிவண்பிறர் கொளக்குங்குமஞ்சுமந்து செல்கரமுன்னிற், காயமானுடத் தின்றதற்கன்றியுட் கள்வுமின்மையினாலே."

எனச் சாந்தலிங்கசுவாமிகள் திருவாய்மலர்ந்திருக்கின்றனர். ஆரோபமாகக்காணப்படும் பொருள்களைனைத்தினுந்திருஷ்டி-

யையூன்றி யூன்றி யுண்மையாகக் கொண்டு நிகழ்ந்து வருகிறதற்கன்றோ ஆன்றோர்களால் அங்ஙனங் கூறப்பட்டிருக்கின்றது? நாம் சலமென்கிற பொருள் நிச்சயத்தையே இங்ஙன மெட்டாதிருக்கின், முடிவான பொருள் நிச்சயத்தை யெங்ஙனமெட்டி இன்புறப் போகிறோம்? ஆதலின், இனிச் சலப்பொருள், சலப்பொருளென்ன வெறுஞ்சொன் மாத்திரமாகச் சொல்லிக்கொண்டு களியற்க.

### (3 - வது,) தீப்பூத ஆராய்ச்சி

இதுநிற்க, மட்பொருள் நிச்சயமும், சலப்பொருள் நிச்சயமுந் தோன்றுவிடினும், ஏனைய தீயென்னும் பொருளினது நிச்சயமேனும் இதுகாறுந்தோன்றிய துண்டாவெனச் சற்றாராய்குதும். எங்ஙனமெனின், தீயென்பது யாதெனப்படும்? பொருளெனப் படுமெனின், என்னபொருளெனப்படும்? வெப்பமாகிய பரிசத்தையும், செம்மையும், ஒளியும்பெற்ற வுருவத்தையுமுடைய பொருளெனப்படுமெனின், அவ்வுருவம் எத்துணையா யிருக்கின்றது? பெரிது, சிறிது பேதங்களாக விருக்கின்றதெனின், பெரிதென்பது குளிர்முதலியவைகளைப் போக்கும் மகத்துருவ மெனவும், சிறிதென்பது கட்புலனுக்கு அதிருட்டமாகத் தோன்றும் அணுப்பொறிகளெனவு மாகின்றன. இவற்றுள் பெரிதாகிய மகத்துருவம் இருப்புள்ளதா? அன்று? இருப்புள்ளதுதானெனின், அஃது நாசமெய்தாதிருக்கட்டும். நாசமெய்துங் காறும் இருப்பன்றோவெனின், அவ்விருப்பு அணுப்பொறிக

ளொன்றோ டொன்று சேர்க்கையுறு முன்ஞான்றுண்டா? இன்றெனின், அச்சேர்க்கை கலந்த பின்ஞான்றேனுமுண்டா? அஞ்ஞான்று மின்றெனின், அவ்விருஞான்றும் இருப்பில்லாத மகத்துருவம் எஞ்ஞான்றுள்ளது? இடைஞான்றுள்ளதெனின், இவ்விடை ஞான்றுமாத்திரம் எங்ஙனம் இருப்பெனப்படும்? இருக்கின்றதேயெனின், சுயம்பாக விருக்கின்றதா? விகாரமாக விருக்கின்றதா? சுயம்பாகவே யிருக்கின்றதெனின், சிறிது சிறிதாகக்கலையா திருக்கட்டும். கலைகின்றதால் இருப்பன்றோவெனின், அங்ஙனங் கலையத்தக்க அணுப்பொறிகளின் சேர்க்கையில்லா திருக்கட்டும். இதனால் மகத்துருவம் இன்றெனப்படுமோவெனின்,உண்டென்பது ஷை சேர்க்கையையன்றி யிருக்கட்டும். சேர்க்கையன்றியே யிருக்கின்றதெனின்,தோற்றமாகவா? பொருளாகவா? பொருளாகவேயெனின், சுயம்புப் பொருளாகவா? விகாரப் பொருளாகவா? விகாரப்பொருளென்பது, ஷை அணுப்பொறிகளின் சேர்க்கையாகிய ஒன்றன்கூட்டத் தோற்றமென்றாகிறது. இத்தோற்றத்திற்கு முன்ஞான்றும், பின்ஞான்றும், இடைஞான்றும் இருப்பாயுள்ளவை அணுப்பொறிகளாதலின், அவ்வணுப்பொறிகளையன்றி மகத்துருவத் தோற்ற மிருக்கட்டும். இன்றெனின், அவ்வணுப்பொறிகளா இத்தோற்றம்? அன்றெனின், இதனாலிது இன்றெனவும், அன்றெனவு மாகின்றது.

ஆகின்றதால், இதற் கெதிர்மறையாக உண்டெனவும், ஆமெனவு மிருப்பது யாது? ஷை அணுப்பொறிகளின் கிர

ட்சியன்றோ? இங்ஙனமாகிய அவ்வணுப்பொறிகளை இருப்பாக நாடுவது அறிவுடைமையா? அறியாமையா? அறிவுடைமைதானெனின், அறியாமையென்பது யாதெனப்படும்? இன்றெனவும், அன்றெனவுமாகிய இம்மகத்துருவை உண்டெனவும், ஆமெனவும் நாடுகின்றதன்றோ? ஆகலின், நமது நாட்டம் அறிவுடைமையாயிருக்கவேண்டுமா? அறியாமையாயிருக்கவேண்டுமா? அறிவுடைமையாகவேயிருக்கவேண்டுமெனின், அறிவுடைமையாகிய அவ்வணுப்பொறிகளுள் ஒவ்வொன்றும் இருப்புடையதா? அன்றா? இருப்புடையதுதானெனின், அவ்விருப்பு கட்புலனுக்குக் கிஞ்சித்துந் தோன்றாமற்போகுமாறு கலைவானேன்? கலையுங்காறும் அவ்வணுப்பொறி தூல வணுப்பொறியாதலினஃதின்றோவெனின், கட்புலனுக்குத் தோன்றாவாறு கலையும் பொறிகளென்னபொறிகளெனப்படும்? சூக்குமபொறிகளெனப்படுமன்றோ? அச்சூக்குமபொறிகள் ஒன்றோடொன்று சேர்க்கையுறுதற்கு முன்னொன்று தூலபொறியென்பதுண்டா? இன்றெனின், அவைகள் கலந்த பின்னொன்றேனுமுண்டா? அஞ்ஞான்று மின்றெனின், முன்னொன்றும், பின்னொன்று மில்லாத தூலவணுப்பொறி எஞ்ஞான்றுள்ளது? இடைஞான்றுள்ளதெனின், அஞ்ஞான்றுள்ளதும், கட்புலனுக்குத்தோன்றாத அதிருட்டமாகியசூக்குமவணுப்பொறிகளின் சேர்க்கையன்றோ? இதனால், தூலவணுப்பொறி யென்பதேது? இருக்கின்றதேயெனின், தோற்றமாகவா? ஒவ்வோர் முதலாகவா? முதலாகத்தானெனின், முதலாயிருப்

பது விகாரமெனப்படாதிருக்கட்டும். விகாரமென்பதெங்ஙனமெனின், இது சூக்கும வணுப்பொறிகளின் சேர்க்கையாகிய ஒன்றன்கூட்ட விகாரமாதலி னென்க. இவ்விகாரத் தோற்றமா முதலென்பது? அன்றியும், ஷ சூக்குமபொறிகள் பிரியத்தக்கதாகலின், பிரிந்தகுன்றாம் இத்தூல வணுப்பொறிகளென்பதேது? இன்றெனின், அச்சூக்கும வணுப்பொறிகளையன்றி யில்லாத விது சூக்கும பொறிகளா? அன்றெனின், இதனால்,

இத்தூல வணுப்பொறிக ளொவ்வொன்று மின்றென்பதற்கும், அன்றென்பதற்கு மியைந்தன. இவையயே, இவற்றிற் கெதிர்மறையாக ஆமெனவும் உண்டெனவுமாயிருப்பதியாது? அச்சூக்குமவணுப் பொறித்திரட்சிதானெனின், அத்திரட்சியை உண்டெனவும், அன்றெனவும் நாடுகின்றது அறிவுடைமையா? அறியாமையா? அறிவுடைமைதானெனின், அறியாமையென்பது யாதெனப்படும்? இன்றெனவு மன்றெனவுமாகிய தூலவணுப் பொறிகளை உண்டெனவும், ஆமெனவுமயங்கி நாடுகின்றதன்றோ? இதனால் இஞ்ஞான்றிருப்பெனப்பட்டது யாது? அச்சூக்குமவணுப் பொறித்திரட்சிதானெனின், அப்பொறிகள் சூக்கும கருவிகளுக்கு அதிருட்டமாக விளங்குகின்றன வாகலின், அங்ஙனம் விளங்கு மவற்றுள் ஒவ்வொன்றும் இருப்பென்பதா? அன்றென்பதா? இருப்பென்பதுதானெனின், அவை ஷ கருவிகளுக்குந் தோன்றாது போவானேன்? அங்ஙனம்போ

வது பின்னும் அதிநுட்பமாகக் கலந்துபோவதனு லன்ரோ? அஃதும் எத்துணையாகக் கலந்து போகின்றன? பரமாணுக்களாகவன்ரோ? இதனுல் அப்பரமாணுக்கள் ஒன்ரோடொன்று சேர்க்கையுறுமுன்ஞான்று சூக்குமபொறிகளுண்டா? இன்றெனின், அப்பரமாணுக்கள் கலந்தபின்ஞான்றேனுமுண்டா? இன்றெனின், இவ்விருஞான்றுமில்லாத அச்சூக்குமபொறிகள் எஞ்ஞான்றுள்ளன? இடைஞான்றுள்ளனவெனின், அவ்விடைஞான்றும் ஷை பரமாணுக்களின் சேர்க்கையில்லாதிருக்கட்டுமே. இருக்கின்றதெனின், சூக்குமவணுப்பொறிகளென்பதேது? இருக்கின்றதேயெனின், தோற்றமாகவா? ஒவ்வோர்முதலாகவா? முதலாகத்தானெனின், முதலாயிருப்பதுவிகாரமெனப்படாதிருக்கட்டும். விகாரமென்பதெங்ஙனமெனின், பரமாணுக்களின் சேர்க்கையாகிய ஒன்றன்கூட்டவிகாரமாதலினென்க.

இவ்விகாரத் தோற்றமாமுதலென்பது? ஷை காரண (பரமாணு)ப்பொறிகள் பிரியத்தக்கன வாதலின், பிரிந்தஞான்று சூக்குமவணுப்பொறிக ளென்பவை யேது? இன்றெனின், காரணப்பொருள்களையன்றி யில்லாதசூக்கும்பொறிகள் காரணப்பொருள்களா? அன்றெனின், இதனுல் இச்சூக்குமவணுப்பொறிக ளெவ்வொன்றும் இன்றென்பதற்கு மன்றென்பதற்கு மியைந்தன. இயையவே இவற்றிற் கெதிர்மறையாக ஆமெனவு முண்டெனவுமிருப்பதியாது? அக்காரணப்பொறிகளின் திரட்சிதானெனின், அத்திரட்சியை உண்டெனவும், அன்றெனவும் நாடுகின்றது

அறிவுடைமையா, அறியாமையா? அறிவுடைமைதானெ னின், அறியாமையென்பது யாதெனப்படும்? இன்றெனவு மன்றெனவுமாகிய சூக்குமவணுப்பொறிகளை உண்டென வும், ஆமெனவு மயங்கிநாடுகின்றதன்றோ? இதனால், இஞ் ஞான்று இருப்பெனப்பட்டவையாவை? பரமாணுப்பொறி கள் தானெனின், இவை அதிசூக்குமமாகிய எக்கருவிகளுக் கும் புலப்படாதிருப்பவையன்றோ? இங்ஙனமாகிய பரமா ணுக்கள் உண்டென்பனவா? இன்றென்பனவா? உண்டென் பனவெனின், காண்டலளவையினாலேயா? கருதலளவையினா லேயா? காண்டலளவையினாலன்று; கருதலளவையினாலெ னின், கருதலளவை அநுமானவளவை யெனப்படுமாகலின், இவ்வநுமான வளவைக்கு ஏதுவாயிருப்பதியாது? பரமா ணுக்களின் சேர்க்கையாகிய சூக்குமவணுத்திரட்சிகளும், அவற்றின் சேர்க்கையாகிய தூலவணுப்பொறித் திரட்சிக ளும், அவற்றின் சேர்க்கையாகிய கடி குளிர்முதலியவை களைப்போக்கும் மகத்துருவமுந்தாமெனின், இங்ஙனங் கூறியவிவைகள்தோற்றன்மாத்திரமாகிய கற்பனைகளன்றோ? இக்கற்பனைகளைக்கொண்டா அநுமானிக்கிறது? அங்ஙனம் அநுமானிப்பது தோற்றநுமானமன்றோ? தோற்றநுமா னத்தால் பொருள்சித்திப்பதுமுண்டா? கண்கூடாயிருக்கி னும் இருப்பை ஏதுவாகக்கொண்டு அநுமானிப்பதன்றோ யதார்த்தாநுமானமென்பது? யதார்த்த அநுமானத்தாலன் றோபொருள் சித்திக்கும்? தோன்றாப்பரமாணுப்பொறிகள் இல்லாவிடில், குளிர்முதலியவைகளை யெல்லாம்போக்கும்

அநுபவ மென்பதேதெனின், அநுபவமென்பது யதார்த்த மாயும், விபரீதமாயுமிருக்கின்றது. அவற்றுள் விபரீதமென்பது கற்பனை. அதாவது ஒன்றின் அநுபவம் மற்றொன்றினதாகத்தோன்றுவது. அது கண்டது பாம்பு, கடித்தது மாங்கொட்டையெனும் பழமொழிக்கிணங்கியது. குளிர் முதலியவற்றைப் போக்குதலும் இதுபோன்ற விபரீத அநுபவமன்றோ?

எங்ஙனமெனின், அவ்வநுபவம் பொருள்களல்லாத இத்தோற்றங்களைப் பொருள்களாக மயங்கிய அறியாமையினுடையதாயிருக்க, (மற்றோர்கற்பனைகளாகிய) பரமாணுப்பொறிகள்முதலியவைகளினதெனச்சொல்லுவதனாலென்க. அன்றியும்,அப்பரமாணுக்களென்பவற்றைப்பற்றி யின்னும் யூகிக்குதும். எங்ஙனமெனின், வேயாதிவிருட்சக்குழாங்களும், காந்தமாதியகற்குழாங்களும், இன்னுமிவைபோல்வனவும் தத்தம் இனங்களோடு தாக்குற்றுறையுஞான்று அவைகளினின்றும் உட்டணமுண்டாகின்றது. அவ்வுட்டணமே செம்மையொளியோடு கூடிய தோன்றூ (பரமாணு)ப்பொறிகளாக எழுகின்றது. அதாவது, ஷை வேயாதிவிருட்சக்குழாங்கள் முதலியவைகள் எத்துணை யெத்துணைபலமாகத் தாக்குற்றுத் தாக்குற்றுத் தேய்கின்றனவோ, அத்துணையத்துணை அணுக்களாக அவ்வேயாதியுபாதிகள் கலைகின்றன. அங்ஙனங் கலையுமுபாதிகள் சகிதமாக ஷை உட்டண முதலிய தர்மங்கள் ஒவ்வொன்றுந் தனித்தனி வேற்று

மையுருது அபேதமுற்று அவ்வேயாதிகளையே தகிக்கும் படியான நுட்பங்களாக வெளிப்படுகின்றன. அங்ஙனம்வெளிப்படும் நுட்பதர்மங்களன்றோ மேற் கூறிப்போந்த பரமாணுப்பொறிகளெனப்படுவன? ஆமெனின், ஷை உட்டண முதலியனவாகிய தர்மங்கள் குணங்களாகின்றன வாதலால் அவை எந்த முதலினையுடையன? ஷை வேய்முதலிய வுபாதிகளை யுடையனவெனின், அவ்வுபாதிகள் அக்கினி யென்பது வெளிப்படுவதற்குச் சகாய காரணமாயிருக்கின்றனவேயன்றி, ஷை தர்மங்களுக்குரிய முதலன்றே? அதனோடு காற்றென்கிற பொருளினது சகாயத்தையின்றியும் ஷை குணங்கள் வெளிப்படுகின்றதில்லை. அக்காற்றின் சகாய காரணத்தைத் தீபத்தின்கண் நன்குகாணலாம்.

எங்ஙனமெனின், காற்றெழுச்சியையன்றி தீபவுருவம், உருட்சி நீட்சியாயிருக்கவும், அந்நீட்சியும் அதோமுகமாகவும், பக்கமாகவும் எழுச்சியுறாது ஊர்த்தமுகமாகவிருக்கவுஞ்செய்து பிரகாசிப்பிக்கின்றது. ஏனெனின், காற்றென்பது எஞ்ஞான்றும் ஊர்த்தஎழுச்சியையுடையதாயிருக்கின்றது. இருக்கும் இக்காற்றுப் பொருளையன்றி ஷை உருவமுதலியவைகளின்றென்பதாமென்க. அன்றியும் காற்றுச்சகாயத்துடன், வேயாதி யுபாதிகள் சகிதமுமின்றாயின், ஷை அக்கினியென்பது உட்டண முதலியனவாக உருக்கொள்ளுதற்கியையாது. இயையாதாயினும் அக்கினியென்பதுண்டன்றோவெனின், இக்குணங்கள் எந்த குணியாகிய முதலை

யுடையன? அக்கினியாகிற குணிப்பொருளை யுடையதெனின், அக்குணிப்பொருள் யாதெனப்படும்? உட்டண முதலியனவாக விருப்பதெனின், அங்ஙனமிருப்பது யாது பொருளெனப்படும்? இக்குணங்களாலன்றி அதைக் குறிப்பிக்க முடியாதெனின், இதனால் குணங்களைத் தவிர வதற்குப் பொருளின்றென்று சொல்லவேண்டிய தாகின்றதன்றோ? ஆகுமாயின், அக்கினி யென்பது குணபேதமேயன்றி வேறுமுத லின்றெனப்படுமே? படுமாயின், ஷெ வேய்முதலியவுபாதிகளிட்டத்து அக்கினியென்கிறஓர்முதல்இல்லாவிடின், அவ்வவ்வுபாதிகளிலிருந்து அவ்வவ்வுபாதிகளின் சகிதமாக குணபேதங்களாய் வெளிப்படுமா? குணபேதங்கட்கு முதலாகிய குணியென்பது அவ்வுபாதிக ளன்றென முன்னான்றே முடிந்தாயிற்று. ஆயினும் உபாதிகள்தோறும் அக்கினியென்கிற ஓர் முதல் இருக்கின்றதன்றோ? இருக்கின்ற அவ்வக்கினியென்பது என்னவெனப்படும்? அருவமாயிருக்கும் பொருளெனின், அருவமென்பது ஓர்முதலா? சூன்யமென்றாகுமே. சூன்யமாயின், சூன்யம் ஷெ சகாய காரணங்களாகிய வுபாதிகளாலும், காற்றுப் பொருளினாலுங் குணபேதப்படுமா? படுகின்றதால், அவ்வக்கினி யென்பது ஓர் முதலென்பதன்றோ? முதல்தானெனின், அம்முதலியாதென விந்துகாறு மெட்டினதுண்டா? இல்லையே: மட்பொருளையும், நீர்ப்பொருளையும் எட்டாவிடினும், இப்பொருளையேனும் எட்டவேண்டுமே? இதனையு மெட்டாவிடின் மிக்க அவமானமன்றோ? இங்ஙனம் அக்கினியென்பதைப் பொரு

ளாக ஏலாது குணமாக வேற்கின்றதாயின், ஏனைய காரிய ரூபங்களேயே பலனுக நாடி நாடித் திரிந்துகொண் டிருக்க லாமே. அவ்வக்கினி யென்பது பொருளெனக்கொண் டிருக்குங்காறும் நாம் வாளா விருக்கலாமா? இருக்கின்ற தால், அவ்வக்கினி யென்பது பொருளுடைமை யென்னுது குணமுடைமையென இருப்பதுநன்மையெனப்படுமே. குண முடைமைதானெனின், அக்குணமும் எந்தமுதலையுடைய தெனவருமே. இங்ஙனமாக பொருளெனின் எட்டவேண்டு மெனவும்,குணமெனின் எந்தமுதலினதெனத்தேடவேண்டு மெனவுமான இவ்விருநிலைமையை இனியேனுங்கருதிக்கருதி நிலத்திருப்பது உத்தமர்க் கழகாமென்க.

## (4 - வது) வாயுபூத ஆராய்ச்சி,

தீப்பூதப் பொருள் நிச்சயம்வெளிப் படாவிடினும், வாயுபூதப்பொருள் நிச்சயமேனும் இனி வெளிப்படவேண்டு மன்றோ? ஆகலின், வாயுவென்பது யாதெனப்படும்? அஃ தோர் பொருளா யிருக்கின்றதெனின், என்ன பொருளா யிருக்கின்றது? சத்த பரிச மென்கிற குணங்களுக்கு முத லாகும் பொருளா யிருக்கின்றதெனின், அக்குணியாகிற முதல் யாதெனப்படும்? அது தொக்கேந்திரியத்திற்கும், செவி யிந்திரியத்திற்கும் அநுபவப்பட்டு வருகின்ற முத லெனின், அது எத்துணையாயிருந்து அநுபவப்பட்டு வரு கின்றது? மகத்துருவமாக விருந்து அநுபவப்பட்டு வரு கின்றதெனின்? மகத்துருவ மென்பது பெருங்காற்றெனச்

சொல்லப்படு மாகலின், இப்பெருங்காற்ருகிய மகத்துருவ மானது சுயம்பா? விகாரமா? சுயம்புதானெனின், நிலையா மைக்கு இடந்தரா திருக்கட்டும். இடந்தருவதால் சுயம் பென்ப தன்ருேவெனின், அது கலந்துபோகா திருக்கட்டு மே கலந்து போகின்றதுதானெனின், அங்ஙனங் கலவ தும், எத்துணை எத்துணையாகக் கலகின்றது? சிறிது சிறிதா கக் கலகின்றதெனின், அவைக ளன்ருே சிறிய காற்றுப் பொருள்க ளெனப்படுவன? அச்சிறு காற்றுப் பொருள்கள் ஒன்ருெடொன்று சேர்க்கையுறுதற்கு முன்ஞான்று பெரு ங்காற்ருகிய மகத்துருவமுண்டா? இன்றெனின், அச்சேர் க்கை சிறிது சிறிதாகக் கலந்த பின்ஞான்றேனு முண்டா? அஞ்ஞான்று மின்றெனின், மகத்துருவம் எஞ்ஞான் றுள் ளது? இடைஞான் றுள்ளதெனின், அவ்விடைஞான் று சேர்க்கையுற்றிருக்குஞ் சிறிய காற்றென்பவைகளின்ருே? இன்றெனின், முன்ஞான்றும், பின்ஞான்றுமுள்ள சிறிய காற்றுப்பொருள்கள் இவ்விடைஞான்று எங்கேபோயின? அழிந்துபோயினவெனின், அழிவெய்திய பின்ஞான்று உண் டாவதற்கேதுவென்னே? உண்டாகின்றனவேயெனின், இல் லது வாராதென்னும் நியாயநெறிக்கு விருத்தமாகின்றதே? அன்றியும் இல்லது வருகின்றதாயின், உள்ளதென்பதும்போ குமன்ருே? அங்ஙனமின்ருகலின் உள்ளது உள்ளதே, இல் லது இல்லதேயாமென்க. இங்ஙனமிருக்க அழிவையெய்து தலில்லாதவைகள் மீண்டும்உண்டாகுமென்பது எங்ஙனம் பொருந்தும்? ஆகலின், இச்சிறியகாற்றென்பவைகள் மாரு

த்தகைமையனவும் மகத்துருவமென்பது மாறுந்தகைமை யதுமா யிருக்கின்றன. இருக்கினும், மாறுத்தகைமைய னவாகிய சிறியகாற்றென்பவைகளே யன்றி மாறுந்தகைமை யதாகிய மகத்துருவமென்பதேது? மாறுந்தகைமையதா யினும் மகத்துருவமிருந்து அநுபவப்படுகின்றதேயெனின், அச்சிறியகாற்றென்பவைகள் இல்லாதிருக்கட்டும். அவைக ளும் இருக்கின்றனவேயெனின், இவ்விரண்டும் ஒரே இடத் தில் ஒரே ஞான்றிருக்கின்றனவா? இருக்கின்றமையாலன் றோ மகத்துருவம் அநுபவப்படுகின்றதும், சிறியகாற்றென் பவைகள் அநுபவப்படாதனவுமா யிருக்கின்றனவெனின், சிறியகாற்றென்பவைகள் ஒருங்கே சேர்வதற்குமுன்ஞான்று இம்மகத்துருவமென்பதிருந்து அநுபவப்பட்டுக்கொண்டி ருந்ததா? இன்றெனின், அச்சேர்க்கை கலந்தபின்ஞான்றே னுமிருந்து அநுபவப்பட்டு வந்ததா? இன்றெனின், இடை ஞான்றுமாத்திரம் அச்சிறியகாற்றென்பவைகளோடு எங்ங னம் இம்மகத்துருவமென்பது ஓர்முதலாகவிருந்து அநுபவ ப்படும்? மகத்துருவம் பொருளன்றாயின் அச்சிறியகாற்றெ ன்பவைகள்மாத்திரம் அநுபவப்படட்டுமேயெனின், அவை கள் ஒன்றோடொன்று சேர்ந்து மகத்துருவமானவிடத்து பெருங்காற்றாக அநுபவப்படுகின்றனவேயன்றி மகத்துருவ மென்பது ஓர் முதலாகவிருந்தநுபவப்படுகின்றதன்று. இங் ஙனமிருக்கின்றதால் மகத்துருவமும், சிறியகாற்றென்பவை களுமென்ன வெனப்படும்? ஒன்றுபூர்வபட்சமும் மற்றொ ன்று சித்தாந்தமுமாகின்றனவன்றோ? எங்ஙனமெனின், சிறி

யகாற்றின் திரட்சிகளையன்றிப்பெருங்காற்ருகிய மகத்துருவ மென்பது உண்டா? இன்ரு? (இத்துணை ஆராய்ந்துவந்த தால்) இன்றெனின், அச்சிறியகாற்றென்பவைகளா இம்மக த்துருவம்? அன்றெனின், இதனுல் இம்மகத்துருவம் இன் றெனவும் அன்றெனவுமாகின்றது. ஆகவே இவற்றிற்கெதிர் மறையாக அச்சிறிய காற்றென்பவைகள் என்னவெனப்ப டும்? உண்டெனவும் ஆமெனவும்படுமென்ரு? படுவதால் அச்சிறிய காற்றென்பவைகளைப் பொருள்களாகத்தெளிந்து நாடுவது அறிவுடைமையா? அன்ரு? அறிவுடைமைதானெ னின் இன்றெனவும் அன்றெனவுமாகிய மகத்துருவத்தை உண்டெனவும் ஆமெனவும் மயங்கிநாடுவது என்னவெனப் படும்? அறியாமை யெனப்படுமெனின், இவ்வறியாமையே பூர்வபட்சமும், சிறியகாற்றுப் பொருள்களை ஆமெனவும் உண்டென்வுந்தெளிந்த அறிவுடைமையே சித்தாந்தபட்ச முமாமென்க. இம்மட்டில் இவைகள் சித்தாந்தமாயினும் பூர்வபட்சப்படாதிருக்கின்றனவா, படுகின்றனவாவெனச்சற் றுவிசாரித்துப்பார்ப்போம். எங்ஙனமெனின் சிறியகாற்றெ ன்பவைகளுள் ஒவ்வொன்றும் பொருள்களா? அன்றிக்கற் பனைகளா? இதுகாறுமாராய்ந்துவந்ததில் பொருள்களாகத் தேரப்பட்டனவேயெனின், சுயம்புப்பொருள்களாகத்தேர ப்பட்டனவா? அன்றி விகாரப்பொருள்களாகத் தேரப்பட் டனவா? சுயம்புப்பொருள்களாகவேதேரப்பட்டனவெனின், சுயம்பென்பது கலைவதுமுண்டா? இவைகள்கலைகின்றனவே. கலைகின்ற இவைகள் எத்துணை எத்துணையாகக் கலைகின்

றன? ஷை இரண்டிந்திரியங்களினது அநுபவத்திற்குந்தோன்றாவாறு கலைகின்றனவன்றோ? அங்ஙனந்தோன்றாவிடினும் அவைகள் அதிநுட்பமாகவேனும் இருக்கின்றனவா? அன்று? இருக்கவேண்டுந்தானெனின், இருக்கின்ற அவைகள் என்னவெனப்படும்? பொருள்களெனப்படுமெனின், என்ன பொருள்களெனப்படும்? பரமாணுப் பொருள்களெனப்படுமெனின், அப்பரமாணுப்பொருள்களின் சேர்க்கையன்றோ இச்சிறிய காற்றென்பவைகள்? அப்பொருள்களின் சேர்க்கையாயினும் இச்சிறியகாற்றென்பவைகளின்றோவெனின், அப்பரமாணுப் பொருள்கள் சேர்க்கையுறுதற்கு முன்னுள்ள தோன்றிவைகளுண்டா? இன்றெனின், அவைகள் தோன்றாமற் போகுமாறு தனித்தனி கலந்த பின்னுள்ளனவா? அவையுண்டா? இன்றெனின், இவைகளெஞ்ஞான்றுள்ளன? இடைஞான்றுள்ளனவெனின், அவ்விடைஞான்று தோன்றாஅணுப்பொருள்களின்றோ? இருக்கின், ஷை இரண்டு இந்திரியங்கட்கும் இச்சிறிய காற்றென்பவைகளையன்றி அநுபவப்படட்டுமே யெனின்,அத்தோன்றாஅணுப்பொருள்களையன்றி இச்சிறியகாற்றென்பவைகளுண்டா? இருக்கின்றனவே யெனின்,தோற்றன் மாத்திரமாக விருக்கின்றனவா? அன்றி இருப்பாகவிருக்கின்றனவா? இருப்பாகவேயிருக்கின்றனவெனின்,பரமாணுக்களாகித்தோன்றாமற் போகவேண்டுவதின்றே. போவதால் இச்சிறிய காற்றென்பவைகள் இருப்பெனப்படுமோ? படாததால் அப்பரமாணுப் பொருள்களையன்றி சிறியகாற்றென்பவைகளுண்டா? இன்றெனின், அப்

பரமாணுக்களா இச்சிறியகாற்றென்பவைகள்? அன்றெனின் இதனால் இவைகள் இன்றெனவும் அன்றெனவு மாகின்றன. ஆகவே இவற்றிற் கெதிர்மறையாக அத்தோன்று வணுக்களென்னவெனப்படும்? உண்டெனவும் ஆமெனவும்படுமெனின், இதனால் இவைகள்என்ன வெனப்படும்? அறிவுடைமையெனப்படுமெனின், அன்றெனவும் இன்றெனவுமாகியசிறியகாற்றென்பவைகளென்ன வெனப்படும்? அறியாமையெனப்படுமன்றோ? இங்ஙனம் இவைகள் அறியாமையாயும், பரமாணுக்கள் அறிவுடைமையாயும் இருக்கின்றமையால்நமதுஉள்திருஷ்டியானது எவற்றைப்பொருள்களெனத் திருஷ்டித்துக்கொண்டிருக்கவேண்டும்? அத்தோன்றுப்பரமாணுப்பொருள்களையெனின், அத்தோன்றுதவைகள் உண்டென்பவைகளா? அன்றி இன்றென்பவைகளா? உண்டென்பவைகளேயெனின் என்ன அளவையினால் உண்டென்பவைகள்? கண்கூடன்றுகலின் கருதலளவையினாலெனின், எவற்றை எதுவாகக்கொண்டு அவற்றை உண்டெனக்கருதுகின்றது? அவற்றின் காரியமாகிய சிறியகாற்றென்பவைகளையும், அவற்றின்காரியமாகிய பெருங்காற்றெனப்படும் மகத்துருவத்தையும் எதுவாகக்கொண்டு கருதுகின்றதெனின், இக்காரியபேதங்களனைத்துந் தோற்றன்மாத்திரக்கற்பனைகளா? அன்றிப்பொருள்களா? ஞாயப்படிபார்க்கின் கற்பனைகள் தாமெனின் கற்பனைகளை எதுவாகக்கொண்டு கருதுவது என்னவெனப்படும்? கற்பனைகளெனப்படுமன்றோ? அவைகள் கற்பனையாகுமாயின், அவற்றின் காரியபேதங்களாகிய சிறியகாற்றுப்

பொருள் முதலியவைகள் விளங்குமோவெனின், இதனால் அப்பரமாணுக்கள் யதார்த்தமாகின்றன. யதார்த்தமாகின்ற அவைகள் சிறிது சிறிதாயிருக்குங் குணபேதங்களா? அன்று? குணபேதங்களன்றெனின், அவைகள் பொருள்களெனப்படுகின்றன. பொருள்களாயின், பொருள்கள் சிறிதுசிறிதாயிருக்கும் பேதங்களாகத் தானிருக்கின்றனவோ? இருக்கின்றனவேயெனின், அவைகளுள் ஒவ்வொன்றும் என்ன பொருள்களெனப்படும்? சொல்லப்படாத பொருள்களெனின், அவைகள் மலடிமைந்தன்போன்றவைகளா? அன்றெனின், இன்னபொருள்களென நிச்சயிக்கவேண்டுமே. நிச்சயிக்கப்படாமையால் அவைகள்பொருள்களென்பனவைகளா? பொருள்களன்றாயின், என்னவெனப்படுமெனின், குணபேதங்களேயன்றி வேறன்றென்க. அன்றியும், குணபேதமெனப்படுவதும் எந்தமுதலினதென் வினாவெழும். குணங்களன்று; பொருள்களெனின், திருஷ்டிக்கேனும் இன்ன பொருள்களென் அர்த்தங்களால் விளக்கிவைக்கவேண்டும். அங்ஙனமுங் கூடாதெனின், இவ்விருபட்சத்திற்கு மியையாத அவைகளென்னவெனப்படும்? அதிருட்டமாகியசத்திகளெனின், அச்சத்திகளென்னவெனப்படும்? சலிக்கின்றவைகளெனின், அச்சலித்தல் தொழிற் குணமெனூப்படுமே. தொழிற்குணங்க ளாதலின், காரியபேதங்களாகவிரிகிறதும், நிகழ்கிறதும், மீண்டும் ஒடுங்குகிறதுமா யிருக்கின்றன. இங்ஙனம் நிகழ்கிற இவைகள் எதன்கண் நிகழ்கின்றன? வெளி

யின்கணெனின், அவ்வெளி யென்பதைப்பற்றிச் சற்று யூகிக்குதும்.

(5 - வது.) வெளிப்பூத ஆராய்ச்சி.

வெளியென்பது என்ன வெனப்படும்? அஃதோர் பொருளெனப்படுமெனின், யாது பொருளெனப்படும்? அருவப் பொருளெனின், பொருளென்பவைகளெல்லாம் சுட்டித்துணர்க் கியைந்ததாகலின், இஃதும் ஓர் பொருளாயின் சுட்டி யுணர்த்தலாமே. இதோ விருக்கின்றதேயெனின், எவ்வாறிருக்கின்றது? நிறைவா யிருக்கின்றதெனின், பொருள் நிறைவென்பதா? சூன்ய நிறைவென்பதா? பொருள் நிறைவுதானெனின், சுட்டி யுணர்த்தலாமே; சுட்டியுணர்த்தக் கூடாதெனின், இதனால் சூன்யமெனலாமே. சூன்யமுமன்றெனின், வேறு யாதெனப்படும்? யாவற்றிற்கும் இடமாயிருப்பதெனப்படுமெனின், எதுபோன்று இடமாயிருக்கின்றது? மண்முதலிய சதுர்ப்பூதங்களானவை அவ்வவற்றின் காரியங்களுக் கிடமாயிருப்பதுபோன்று இச்சதுர்ப் பூதங்களுக்குமிடமாயிருக்கின்றதெனின், இவ்விடமென்பதுநாமிருக்கும் இடைக்கண் இருக்கின்ற வெளியென்பதன்றோ? வெளியாகிய இவ்விடம் என்ன வெனப்படும்? தோன்றவில்லையேயெனின், தோன்றாதது சூன்யமாதற் கிழுக்கென்னை? தோன்றும்பொருள் நாமரூபங்களாயின் தோன்றாததுசூன்யமென்று எத்திறத்தருஞ் சொல்லாமற்றீராது.

ஆதலின் சூன்யமாகிய இவ்வெற்றவெளியில்லடை வாயுவென்கிற சலனசத்தியானது எங்ஙனம் விரிந்துநிகழ்கின்ற

தோ, அங்ஙனமே தீயென்கிற வுட்டணசத்தியும், சலமென்கிற நெகிழ்ச்சிசத்தியும், மண்ணென்கிற கடினசத்தியும் கணக்குமிதமின்றி விரிகின்றனவும், நிகழ்கின்றனவுமாயிருந்து பின்னொன்று (சூன்யமாகின்ற) அச்சத்தியிலேயே ஒடுங்குகின்றனவன்றோ? அன்றியும், இச்சூன்யத்துவம் ஆகாயமென்கிறசொல்லையேற்கினும், கற்பிதமாகிய குணத்திரயத்துளொன்றாகிய தாமதகுணவிகாரமெனும் விக்ஷேபசத்தியின் விகாரமாயிருக்கின்றதால், இவ்விகாரத்தினது விகாரமாகச் சலனசத்தியாகிற காற்றென்பதும், இவ்விகாரத்தினது விகாரமாக உட்டணசத்தியாகிற தீயென்பதும், இவ்விகாரத்தினது விகாரமாக நெகிழ்ச்சிசத்தியாகிற சலமென்பதும் இவ்விகாரத்தினது விகாரமாகக் கடினசத்தியாகிற மண்ணென்பதுமாகின்றனவன்றோ? இங்ஙனம் அனைத்தும் விகாரமாகின்றமையால், பிருதிவிமுதலிய நான்கு மென்ன வெனப்படும்? பொருள்களெனப்படுமா? படுமெனின், இவைகள் மற்றோர் விகாரமாகியவெளியென்னுஞ் சூன்யமாய் முடியாதிருக்கட்டுமே. அன்றியும், சலனசத்தி பரிசாநுபவமாத்திரமாயும், ஏனையஉட்டண சத்திமுதலியமூன்றும் பரிசாநுபவத்தோடு உருவாநுபவமாயும், இரசாநுபவமாயுங், கந்தாநுபவமாயும் நிகழ்கின்றனவாகலின், இவைகள் எதன்கண் நிகழ்கின்றன? வெளியின்கண்ணன்றோ? இவ்வெளியென்பது சூன்யத்துவமாகலின், இதில் நிகழுமனைத்து மென்னவெனப்படும்? விசாரிக்குஞான்று பொருளின்றிப்போவதால் சூன்யமென்பதற்குமுரணென்னை?

அன்றியும், சூன்யசத்தி, சலனசத்தி, உட்டணசத்தி, நெகிழ்ச்சிசத்தி, கடினசத்தி ஆகியவிவ்வைந்தும் எந்தமுதலின்பாலனவோ, அந்தமுதலன்றோ முன்ஞான்று அறிவானுக்கயலாகவிருப்பதெனக்கூறியது? அவ்வயலை இஞ்ஞான்றும் ஐம்பூதப்பொருள்களென மயங்கிக்கொண்டிருக்கலாமோ? அங்ஙனம் மயங்கிக்கொண்டிருப்பது ஷை சத்திகளையுடைய சத்தென்பதுயாதென விசாரித்து எட்டாமையினலன்றோ? அன்றியும், அச்சத்து அறிவானுகிய தன்னையன்றியுண்டென்பதா? இன்றென்பதா? உண்டென்பதுதானெனின், அது சடமெனற்பாலதா? அன்றிச் சித்தெனற்பாலதா? சித்தெனற்பாலதெனின், அறிவானுகிய தான் என்னவெனப்படும்? தானுஞ் சித்தென்பது தானெனின், தானுந் தன்னுலறியப்பட்ட அயலுஞ் சித்தென்பதாயின்; இவ்விரண்டு சித்துக்களாலும் அறியப்படும் சடமென்பதியாது? அன்றியும்; அறிவென்பதும் அயலென்பதுமான விவ்விரண்டில்அறிவுக்கயலும், அயலுக்கறிவு மெதிர்மறையா யிருக்கின்றபடியினுல் அவற்றினது தன்மைகளும் எதிர்மறையாயிருக்கவேண்டுமென்றே? அங்ஙனம் பார்க்குஞான்று, அயலென்பது சித்தாயின், அறிவென்பது சடமாகவேயிருக்க வேண்டுமன்றி இரண்டுஞ்சித்தாக விருப்பதெங்ஙனம்? அயலென்பது சித்துதானெனின், இதனுல் அறிவானுகிய தான் மற்றென்றினுலறியப்படுஞ் சடமாகவேண்டுமே! இங்ஙனமறிவென்பது சடமும், அறிவுக்கயலென்பது சித்துமாயிருக்கின்றவநுபவம் எவ்வுயிர்பாலும் எஞ்ஞான்றுமில்லையே! ஆனலெங்

ஙன மிருக்கின்றதெனின், அறிவாகுகியதன்னுல் அயலானது அறியப்படுகின்றபடியினுல் அறிவாகுகிய தான் சித்தும், அயலென்பது சடமுமாகின்றனவென்க. என்னை,

"உணர்விய லாமுயி ரொன்று மொழித்த
வுடன்முத லனைத்து முயிரல் பொருளே"

என்றுபிறருங் கூறியிருக்கின்றன ராகலினென்க.

அன்றியும், திருக்கெனவுந் திரிசியமெனவுஞ் சொல்லப்படு மிவ்விரண்டுள், திருக்கென்பது அறிவெனவுந் திரிசியமென்பது அறியப்படுவ தெனவுமாம். திருக்கென்பது அறிவாகின்றபடியினுல், அஃதெஞ்ஞான்றுஞ் சித்தாகவும், திரிசியமென்பது அறியப்படுகின்றபடியினுல் அஃது சித்தாகவுஞ், சடமாகவு மிருக்கின்றனவென்க. திரிசிய மென்பது சித்தாயுஞ், சடமாயு மெங்ஙன மிருக்கக்கூடும்? திருக்கு சித்தாகின்றதனுல் அதற்கெதிர்மறையாகின்ற திரிசியமென்பது சடமாகவன்றே யிருக்கவேண்டும்? அன்றியும், திருக்காகிய சித்தினுல் திரிசியத்தின் ஓரம்சமாகியசித்தென்பது அறியப்படுவதெங்ஙனம்? சித்துசிருச்சித்து அறியப்படுவது ஞாயவிருத்தமன்றோவெனின், இங்ஙனம் திரிசியத்தில் சித்தெனக்கூறியது முன்ஞான்று (ஆராயுமுன்ஞான்று) சித்துபோன்றிருந்து ஆராய்ந்தஞான்று சடமாய் முடிகிற சித்துப்போலியையென்க. ஆராயாஞான்று சித்துபோன்றிருப்பதனுல் அத்திரிசியத்தை உபசாரமாகச் சித்தெனச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆனுல், திரிசியம் யாவும் உண்மையில்

சடமென்பதே துணிபென்க. நிற்க, முற்கூறிய திருக்கென்பதுதான் யாதெனில், அது பொருளைப் பொருளாக அறிவதாகிய மெய்யுணர்வு. திரிசியமோவெனின், பொருளல்லவற்றைப் பொருளாக அறிவனவாகிய சீவேஸ்வராந்தக்கரணேந்திரியங்களுந், தேகமுதலியனவாகத் தோன்றும் வியட்டி, சமட்டி உபாதித்திரயக் காட்சிகளுமாம். இவ்வுபாதித்திரய முதலியவைகள், உருவம், உருவாருவம், அருவமெனமூன்று விதங்களாயிருக்கின்றன. அஃதெங்ஙனமெனின், சாக்கிரம், சொப்பனம், சுழுத்தியென்னு மிம்மூன்றவஸ்தைகளில் முதலாவதாகிய சாக்கிராவஸ்தையின்கண் துலோபாதி முதலிய காட்சிகள் உருவமும், இரண்டாவதாகிய சொப்பனவஸ்தையின்கண் சூக்குமோபாதி முதலிய காட்சிகள் உருவாருவமும் (அதுவே சாயையெனப்படுவது), மூன்றாவதாகிய சுழுத்தி யவத்தையின்கண் காரணமாகிய அவித்தையோபாதி காட்சி அருவமாகவு மிருக்கின்றனவென்க. [அருவமென்பது பாழ்வடிவமென்பது.]

[பௌதிக ஆராய்ச்சி.]

சீவன் முதலியனவாகிய திரிசிய பேதங்களனைத்தும் விசாரியாஞான் றுள்ளனவாயும், விசாரித்தஞான் றில்லனவாயு மிருக்கின்றமையால் அறிவாகிய சித்துப்பொருள் இவ்விருஞான்றும் இடைவிடாது இருந்தபடியேயிருக்கின்றது. இங்ஙன மிருப்பதால் ஷை அறமென்பது எதற்கு எதனையளிப்பது? நிற்க, பிரமன்முதல் பிபீலிகமிறுதியாக நிகழு

முயிர்களுள் ஒன்றை ஆராய வேண்டியவாறு ஆராயுமி அஃது எந்த அறிவாக முடிகின்றதோ அந்த வறிவாகவே மற்றுள்ள கோடாகோடி உயிர்களு முடிகின்றனவன்றோ? அஃதெங்ஙனமெனின், சொப்பனுவத்தையின்கண் நிகழ்கின்ற சேதனுசேதன பிரபஞ்சக்காட்சியில் ஒன்றை ஆராயுமி அஃதெழுவதற் காதாரமாகிய ஓர்மனதின்கண் ஒடுங்குமாறு மற்றையவும் எங்ஙனம் அதேமனதில் ஒடுங்குகின்றனவோ, அங்ஙனமே ஈங்கும் ஷை எல்லாவுயிர்களும் ஓர்அறிவாகவே முடிகின்றனவென்க. அன்றியும் அச்சொப்பனத்தின்கண் பல்கோடி உபாதிகளாகத் தோன்றும் மனமாகிற ஓர் தெரிவே அவ்வவ் வுபாதிகடோறும் நான் நானென்கிற உயிர்ப் பேதங்களாயிருப்பதுபோல ஷை பிரமன் முதலாகச் சொல்லப்பட்ட எல்லா வுயிர்களுக்கும் அறிவென்ப தொன்றே உபாதானமாயும் ஆதாரமாயு மிருக்கின்றதென்க. இதுவே அறிவினது சர்வாத்மகத் தன்மை என்பதாம்.

இங்ஙனமிருக்கும் அறிவன்றோ மெய்யுணர்வெனப்பட்டது? பல வுயிர்களும் ஓர் மெய்யுணர்வாயின் நான், நீ முதலிய பேதங்களாயிருக்கலாமோவெனின், அங்ஙனமிருப்பதும் பிறவிகளாகிய வுபாதி பேதங்களால் நிகழ்வதுபோலன்றி உண்மையிலன்றென்க. அஃதெங்ஙனமெனின், ஆகாயமென்பதொன்றாயிருந்தும், கடம், கடாரகம் (அதாவது கொப்பரை) முதலான வெவ்வேறுபாதிகளினால் வேறுவேருக வழங்கப்படுவதுபோல அறிவென்பதொன்றே உபாதிக

னிருல் ஷெ நான், நீ, முதலியனவாக வழங்கப்படுகின்றதெ ன்க. உபாதிகளோடு உயிர்கள் பேதமுற்றிருத்தலால் அவ் வவ் வுபாதிகளைப்போல உயிர்களும் பலவென்று லென்னை யெனின், இதனுல் உபாதிகளே உயிர்களெனப்படுமே. அங் ஙனமாயின், எந்த உபாதி எந்தவுயிரெனப்படும்? உயிர்கள் சித்தென்பனவும், உபாதிகள் சடமென்பனவுமாயிருக்கின்ற மையால், எங்ஙன மிரண்டு மபேதமெனப்படும்? அன்றியும், உபாதிகள் நாட்டந் தவிர்ந்து அறிவுநாட்டம் பெறுவோ மாயின் அறிவு பல வுயிர்ப்பேதங்களா யிருக்கட்டும். பல வுயி ர்கள் பேதமாயிருப்பது உபாதிகள் நாட்டத்தாலாதலின் உபாதிகளுள் ஒவ்வொன்றும் கயிற்றரவு முதலியனபோன்று சொன்மாத்திரமும், தோற்றன்மாத்திரமுமாக விருப்பன வா? அன்றி உண்மைப்பொருள்களாகவிருப்பனவா? உண் மைப்பொருள்களாகவே யிருப்பனவெனின், இவ்வுண்மை யும் எதுகாறு மிருப்பெனப்படும்? என்ஞான்றுமேயெனின், ஆராய்ந்த ஞான்று இன்மையாகின்றனவே? இங்ஙனம் உண் மையென்பது இன்மையெனப்படலாமா? படுமெனின், உள் ளது போகாதென்பதற் கிது மாருயிருக்கின்றதே.

ஆராய்ச்சியா லங்ஙனமாயின் அவை பொருள்களன் ருேவெனின், பொருளாக விருக்கின்றனவென எங்ஙன மேற்கின்றது? அநுபவமே சாலுமானதெனின், இவ்வநுபவ மெதற்கியைந்ததெனப்படும்? ஒன்றுக்கொன் றியைந்ததெ னின், அவையனைத்துஞ் சடமாகலால் ஒன்றையொன்று அறி

யவும், அநுபவிக்கவும்; ஒன்றுக்கொன்று அறியப்படவும், அநுபவப்படவும் எங்ஙனங்கூடும்? அற்றேல், அறிவுதானறிகின்றதெனின், அவ்வறிவுக்கன்றோ இச்சரீராதிகள் அநுபவப்பட வேண்டும்? ஆமெனின், அறிவென்பது தஸ்மரணையாயிருக்குஞான்றா? அன்றி விஸ்மரணையாயிருக்குஞான்றா? தஸ்மரணை, விஸ்மரணை என்பவை யாவையெனின், தஸ்மரணை என்பது ததாகாரமெனப்படுவது. அகமாகார விர்த்தியென்பது மிதுவேயாம். விஸ்மரணையென்பது இதராகாரமெனப்படுவது. இதமாகார விர்த்தியென்பது மிதுவேயாம். அன்றியும் ததாகாரமென்பது தற்பாவமாய்அதாவதுஅறிவு நானாக விளங்குவது. அதுவே தானேதானா யிருத்தல். இதராகாரமென்பது அயல்பாவமாய் அதாவது உபாதித்திரய அயல் நானாகவிளங்குவது. அதுவே தானல்லது தானாயிருத்தல். ஆகலின், இங்ஙனம் வகுத்துக்கூறிய எந்தவவசரத்தில் அநுபவப்படுகின்றன? விஸ்மரணையாகின்ற இதராகாரமாயிருக்கு ஞான்றுதான் ஷெ சரீராதிகள் அநுபவப்படுகின்றனவெனின், அவ்வநுபவத்தை யேற்பது சடமெனற்பாலதா? அன்றிச் சித்தெனற்பாலதா? சித்தெனற்பாலதெனின், அது தன்னை யறியவேண்டும். அவ்வெதிராகாரம் அங்ஙன மறியக்கூடிய யோக்கிய முள்ளதா?

சடமெனற்பாலதெனின், மற்றவற்றை யறியாதிருக்க வேண்டுமென்றோ? அங்ஙனமின்றெனின், எங்ஙனம் அநுபவித்தற் கியையும்? அங்ஙனமுமின்றிச் சிற்சடமாயிருக்

கின்றதெனின், சித்துக்குச் சடமும் சடத்திற்குச் சித்து மெதிர்மறை யாகின்றபடியினால் இங்ஙன மொன்றுக்கொ ன்று எதிர்மறையா யிருக்குஞ் சிற்சட தர்மங்கள் ஒன் றாயிருத்தல் கூடாதே. எதுபோலெனின், ஒளியு மிருளும் ஒன்றுக்கொன் றெதிர்மறையா யிருப்பதனால் இரண்டும பேதமுறாது பேதமுற்றே யிருப்பதுபோலா மென்க. ஆத லின் சிற்சடமென்று கூறுவதும் வழுவென்பதாயிற்று. இங்ஙன மிருக்கினுஞ் சரீராதிக ளநுபவப்பட்டுக்கொண்டு வருகின்றனவே யெனின், எதற் கநுபவப்படுகின்றன? அறியாமைக்கெனின், அது சொப்பன நாமரூபக் காட் சிகள் அநுபவப்படுகின்றனபோ லாகின்றதே. இங்ஙன மாகிய வறியாமைக் கநுபவப்படும் நாமரூபங்க ளனைத்தும் என்னவெனப்படும்? தோற்றன் மாத்திரமாகிய போலிகளெ னப்படுமன்றோ? இப்போலிகளை மெய்ப் பொருள்களென நாம் மருண்டிருப்பதால், அவைகள் பலவாகக் காணப்படு கின்றனவன்றோ? ஒன்றென்பது பலவாவ தெங்ஙன மெனின், சொப்பனவத்தையின் கண் ஓர்மனமே அநந்த வுயிர்ப் பேதங்களாக விருப்பது போல இம்மெய்யுணர் வொன்றே பலவுயிர்களாக் ஆரோபப்பட்டிருக்கின்றதென்க. இதனால் இம்மருட்சி துக்கவிர்த்திக்கிடமன்றோ? இஃதகலா க்காறும் நாமென்னகதியுற்றிருக்கின்றது? அன்றியும், ஒன்று மற்றொன்றை யறியவேண்டுமானாலும், அநுபவிக்கவேண்டு மானாலும் அதற்குத் தான் வேறாயிருந்தன்றோ அறியவு மநு பவிக்கவும்வேண்டும்? அஃதன்றோ அறிவுடைமையென்பது?

திருஷ்டாந்தமாகக் கண்ணானது ஓர் பொருளை அறியுஞான்று அதற்குத்தான் வேருயிருந்தன்ருே அறிகின்றது? அது போல தாஷ்டாந்தமாக அறிவானது வுபாதிகளை யறிகிறதும், அநுபவிக்கிறதுமாயின் அவைகட்குத் தான் வேருயிருந்தே அறியவும் அநுபவிக்கவுங் கூடும். இங்ஙனமில்லையெனின், அதுவழுவாகுமன்ருே? இதுநிற்க.

சரீராதிகளொவ்வொன்றும் தோன்றுகின்றனவாயினும் அவைகளோர் ஞான்று யதார்த்தமாயும், மற்ருேர்ஞான்று கற்பனையாயுந் தோன்றுவானேன்? நாம் ஆய்ந்துணராமடித்தன்மையுள்ளவர்களென்றறிந்து யதார்த்தமாகவும், மடித்தன்மைநீங்கி ஆய்ந்துணரு முழைப்பாளரென்றறிந்து கற்பனையாகவுந் தோன்றுகின்றனவா? அங்ஙனந்தோன்றுவதற்கு இவற்றைவிடவேறே யாது காரணமெனச்சொல்லுவது? நாமேகாரணமென்பதன்ருே? எங்ஙனமெனின், அவற்றை நாம் உண்மையாகப்பார்க்கில் உண்மையாகவும், கற்பனையாகப்பார்க்கில் கற்பனையாகவுந் தோன்றுகின்றனவாகலினென்க. இங்ஙனங் கூறுவதையார் ஏற்பார்கள்? ஒருவருமேலாரேயெனின், ஏலாதவர்களெல்லாம் உயர்ந்தோரா? இழிந்தோரா? உயர்ந்தோர் தானெனின், ஏற்கிறவர்கள் எங்கேயோ சிலர் அருமையாயிருக்கினும் அவர்கள் இழிந்தோராக்கும்! அங்ஙனமாயின் ஷ ஐயவெழுச்சி அகல்வதெங்ஙனம்? உண்மையை ஆய்ந்துணரா நமதுமடித்தன்மையும், அஃதின்மையாகிய உழைப்புமின்றி வேறுகாரணமிருக்கின்

தெரிவிக்கலாம். அங்ஙனம் யாதுமின்றன்றோ? அனைத்து முண்மையென எத்திறத்தரு மதித்தற்கு அநுபவமே சாலு மானதாயிருக்க இத்துணைப்பலங்கட்டி மயக்குவானேனெனின், இங்ஙனமாகிய அநுபவமேசான்றதெனக்கூறுபவர்கள் கல்லாதவர்களா? அன்றிக்கற்றவர்களா? இருவகுப்பினருந் தானெனின், இவ்விருவகுப்பினருள் உயர்ந்தோ ரிழிந்தோ ரென்கிற வித்தியாசமில்லாதிருக்கட்டும். எட்டிக்கொட்டை, வேப்பங்கொட்டை முதலியவைகள் கைப்புற்றிருக்கின்றன வென்றும், கன்னல், பலா முதலியவைகள் இனிப்புற்றிருக்கின்றனவென்றும் இன்னுமிவைபோல்வனபிறவும் எங்ஙன மெங்ஙன மிருக்கின்றனவோ, அங்ஙனமங்ஙனமாகவே கல்லாதவர்கள் சொல்லுவதுபோலக் கற்றோர்களுஞ் சொல்லுகின்றார்களேயன்றி உயர்வுதாழ்வென்கிற வித்தியாசம் இவர்களில் காணப்படவில்லையே யெனின்,

“விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்”

எனப்பிறந்துள்ள திருக்குறள்மகாவாக்கியத்தில், கல்லாதவர்களை விலங்குகளாகவும் கற்றவர்களை மக்களாகவுஞ்சொல்லியிருப்பானேன்? விலங்குகள் ஐயுணர்வடைந்து உண்ணல் உறங்கலாதி விவகாரங்களைப்புரிந்து வருவனபோல், கல்லாதவர்களும் பொருளல்லாதவைகளைப் பொருள்களாகமயங்கித் தேகபோகங்களுக்கே யுழன்றுவருவதனு லிவர்களை விலங்குகட்கு நிகராகவும்,

"கானனீர் கிளிஞ்சல் வெள்ளி கந்தர்ப்ப நகர்க ளூர்
வானமை கயிற்றிற் பாம்பு மலடிசேய் முயலின் கோடு
மீனமாந் தறிபு மாணிற் பிரபஞ்ச மெல்லாம் பொய்யே"

என்று கைவல்லிய திருச்செய்யுள் கூறுகிறபடி தேகாதிபிரபஞ்சங்களை அசத்தாதிகளாக அயலேடாகிய சாத்திரங்கள் கூறியவண்ணம் தன்னேடாகிய தத்துவவிசாரணையில் யுக்திபூர்வமாகத்தெளிந்து நிற்றலினால் கற்றோரை மக்களாகவுஞ் சொல்லியிருக்கின்றதன்றோ? அன்றியும் "கற்றீண்டு மெய்ப்பொருள்கண்டார் தலைப்படுவர் மற்றீண்டுவாராநெறி" என்னும் வாக்கியத்தினால், கற்றவர் (இம்மையிலேயே) மெய்ப்பொருளைவிசாரித்துத் தெளியவேண்டுமென்றும், அங்ஙனம் விசாரித்துத் தெளிந்தோரே மீண்டும் பிறவித்துன்பத்தையடையாரென்றும், யாவரும் (உண்மைநூலைக்) கற்றல் வேண்டுமென்றும் இத்தியாதி தாற்பரியங்களைக் காட்டிக் கற்றவரது சிறப்பை விளக்கியிருக்கின்றதன்றோ? இங்ஙனமிருக்கக் கற்றவர்களும், கல்லாதவர்களும் வித்தியாசமின்றியிருக்கிறார்களென்று கூறுவதெங்ஙனம்? ஆயினும் கற்றவர்களெல்லாரும் இங்ஙனமுண்மையை விசாரித்துணர்ந்தவர்கள் தானோவெனின்,

"கற்கக் கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக"

வெனப்பிறந்துள்ள வாக்கியத்தின்படி, படித்துணர்ந்தவர்களில் பெரும்பான்மையோர் கற்றவளவுநில்லாமல் மற்ற

வர்போலவே யிருக்கின்றனர். ஆதலிலிங்ஙனமாய நிலைமை யுடையவர்கள் கல்லாதவர்களென்றும், அதிலும் அறிவினாற் தாழ்ந்தவர்களென்றும்எண்ணப்படுகின்றனரென்க. என்னை,

திருக்குறள்.

"ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்"

என்று கூறியிருப்பதுணர்க. அன்றியும் முன்ஞான்று (சரீராதிகள் ஒவ்வொன்றும் தோன்றுகின்றதாயினும் ஓர் ஞான்றுள்ளனவாயும், மற்றோர்ஞான்று கற்பனைகளாயுந் தோன்றுவானேனென) வினாவியஐயவெழுச்சியுண்டானது யாதுக்காக? அவற்றை யுக்திபூர்வமாக விசாரித்து அவற்றினது பொருள்நிச்சயம் விளக்கிவைத்தற்கே யன்றி, அவற்றின் குணபேதங்களைச் சொல்லிக்கொண் டிருப்பதற் கல்லவே. ஆதலின் பொருள்நிச்சயந்தெரிந்துவிளங்கவுரைப் பவர்கள் உயர்ந்தோராகிய கற்றவர்களாயும், அங்ஙனமின் றிக் குணபேதங்களையெல்லாம் பொருள்களாகமயங்கியுரை ப்பவர்கள் இழிந்தோராகிய கல்லாதவர்களாயும் பேதித் திருக்கின்றனர். இதனால் இரண்டாவதாகக்கூறப்பட்டகல் லாதவர்கள் மூடர்களாகஏற்படுகின்றனரன்றோ? இம்மூடர் களுக்கறிவுறுத்தற் காகவன்றோ

"பல்லார் முனியப் பயனில சொல்லுவா
னெல்லாரு மெள்ளப் படும்" என்றும்,

"பொருடீர்ந்த பொச்சார்ந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
மாசறு காட்சி யவர்" என்றும்

"பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்"

என்றுங் கூறுமிம் மகாவாக்கியங்கள் திருக்குறளின்கண் பய னில்சொல்லாமை யென்னும் அரியவதிகாரத்தில் வந்திருக் கின்றனவே? அன்றியும்,

"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணாப் பிறப்பு"

என்றும் ஓர்வாக்கியம் மெய்யுணர்வென்கிற வதிகாரத்தில் பிறந்திருக்கின்றதால், இங்ஙனம் பொருளல்லாதவைகளை (அதாவது குணபேதமுதலியவைகளை)ப் பொருளெனமய ங்கியமருட் செயல் யாருடையதெனப்படும்? மூடர்களினத ன்றோ?

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்று மிவ்வதிகாரத்திலேயே வந்திருக்கின்ற தெருட்செயல் யாருடைய தெனப்படும்? கற்றவர்களினதென்பதற்குச் சந் தேகமென்னை? அன்றியும் இவ்வாக்கியங்கள் வேதவாக்கியங் களன்றோ? அதிலும் முடிவான மகாவாக்கியங்களன்றோ? இங்ஙனமிருக்கக் கற்றவர், கல்லாதவராகிய இருவகுப்பின ரையும் ஷை பொருள்நிச்சயத்தில் சமத்துவமாக்கலாமா?

கூடாதே. கற்றவர்களது பெருமை அளவுக்கடங்காததாயிரு ப்பதால், அன்னோர் அருமைக்கெல்லாம் அருமையினராயிரு க்கவேண்டியது. அங்ஙனமின்றி நாமோவ்வொருவருங் கற்றவ ர்கள் தாமென்கிற வுயர்ச்சியை நாமே யேற்றிக்கொண்டிருக் கின்றனமே? இங்ஙனமிருப்பதால், பொருள்நிச்சயந்தோ ன்றுமாறு இஞ்ஞான்றெழுந்த வினாவுக்குத்தக்க விடைய ளிப்பது நமது கடமையாயிருக்கின்றதன்றோ? ஆமெனின், இதுகாறும் பதிலளிக்காதிருப்பதேன்? தோன்றாததின்லெ னின், இதனால் விடையென்பதின்றெனப்படுமோ? உண்டா தலால் அதனைச் சற்று ஆழ்ந்து சிந்திக்க வேண்டுமென்க. எங்ஙனமெனின், ஓர்புருடனுக்குச்சன்னிதோடவிகாரந்தோ ன்றியஞான்று, வேறேசிலபுருடர்கள்வந்து தன்னை அடித்திழு த்துப் பலவாகிய இம்சைகள் செய்வதாயும், வேறுபல வடி வங்கள் காணப்பட்டு அவற்றின்சம்பந்தமாய்த்தான்யாதோ அநேக காரியங்களைப் புரிவதாயும் தோற்றப்படும்விவகாரம், அப்புருடனுக்குக் கண்கூடாநுபவமாயிருப்பினும், இம்சை யாதிகளும் அவற்றைச் செய்வதற்குக் காரணமா யிருந்த புருடராதிகளும் கற்பிதார்த்த மெனப்படுமா? அன்றியதார் த்தமெனப்படுமா? கற்பிதார்த்த மெனப்படுமெனின், அங் ஙனஞ் சொல்லுவதேன்? சன்னிதோஷ முடையவனுக்கு அந்நோயின் கடுமையால் புத்தி விகாரமடைய, அவ்விகார மாகிய மயக்கத்தினால் புருடர்கள் காணப்படுவதாயும், இம் சைகள் செய்வதாயும், (அவைகளுண்மையிலில்லாதிருந்தும்) தோற்றுகிறதினாலும்; சன்னிதோஷ விகாரந் தீர்ந்தஞான்று

அப்புருடனுக்கு முன்னொன்றுகண்ட விபரீதாநுபவத்தோற் றங்களும் விகாரங்களு மில்லாமையினாலுமெனின், இங்ஙன மே சரீராதி நாமரூபங்கள் உண்மையாகக் காணப்படுவதும், அநுபவப்படுவதுமா யிருப்பது அவற்றைக் குணபேதங் களேயன்றிப் பொருளன்றென விசாரித் துணராததோஷ மாகிய மருளாலென்றும், மற்றோர்ஞான்று கற்பனையாகக் காணப்படுவது அவற்றைப் பொருளின்றிக் காணப்படுங் கற்பனைத் தோற்றமேயென்று விசாரித்துத் திடபாவமுற் றிருக்குந் தெருளாலென்றும் விளங்குகின்றதன்றோ? ஆத லின் சரீராதி தோற்றங்கள் கற்பிதார்த்த மென்பதே துணி பென்க. இவைகள் கண்கூடாயிருந் தநுபவப்படுகின்றபடி யினால் எங்ஙனங் கற்பிதார்த்தமென்று துணியலாமெனின்,

திருக்குறள்.

"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணாப் பிறப்பு."

என்று கூறியது உயிர்களாகிய நமக்காகவன்றோ? (அதி லும் ஜீவகாருண்யத்தை முன்னிட்டன்றோ?) எங்ஙனமெ னின், மெய்ப்பொருள்க ளல்லாதவைகளையெல்லாம் மெய்ப் பொருள்களாக மயங்கி யுணர்வதும், அதனால் கொடியதா கிய பிறவியை யெடுத்துத் துன்புறுவதும் நாமன்றோ? ஆத லின் நமக்கே கூறியதென்க. அன்றியும் அவ்வாக்கியத்தில் "பொருளல்லவற்றைப் பொருளென் றுணர்தல் மருளென' வந்திருப்பதனா லிது சாக்கிராவத்தா விலட்சியாநுபவத்

தைக் குறிப்பித்ததா? சொப்பனவத்தா விலட்சியாநுபவத்தைக் குறிப்பித்ததா? சொப்பனவத்தா விலட்சியாநுபத்தையேயெனின்; அவ்வவத்தையை ஏன் குறிப்பித்தது? அதில் திணை, பால், இடமுதலியனவாகிய சாயாவடிவங்கள் மெய்ப்பொருளாகத் தோன்றுகின்றதும், தோன்றிய அவ்வவற்றையும் நாம் மெய்ப்பொருளென்றே யுணர்கின்றதுமாயிருப்பதாலெனின், விழிப்பாகிய இச்சாக்கிராவத்தையில் தோன்றும் திணை, பால் இடமுதலிய நாமரூபங்க ளனைத்தும் உண்மைப் பொருள்களாக்கும்! இவைகளை நாம்பொருள்களாக வுணர்கின்றன மாக்கும்! ஆனபடியினால் மருளெனக் குறிப்பித்த வாக்கியம் சொப்பனவத்தைக் கெழுந்ததெனவே நாம் கொள்ளவேண்டு மாக்கும்! இங்ஙனமேஷை மருளகலுமாறு "எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள், மெய்ப்பொருள்காண்பதறிவு" என்றுபிறந்துள்ள வாக்கியத்தையுஞ் சொப்பனவத்தைக் கெனவே கொண்டு, அச்சொப்பனத்தில் காணப்படுமொவ்வொன்றிலும் மெய்ப்பொரு ளெதுவெதுவென விசாரணை வாயிலாய் உழைத்துழைத்துத் தெளியவேண்டு மாக்கும்! இங்ஙனம் சொப்பனவத்தையில் ஷை வாக்கியங்களைக்கொண்டு உழைத்துத் தெளியவேண்டிய நாம் இச்சாக்கிராவத்தையி லென்னசெய்துக்கொண்டிருப்பது? தேகபோகங்களைப் பந்தித்துக்கொண்டு திரிவதாக்கும்! இது விந்தையினும் மிக்கவிந்தையாயிருக்கிறது! சொப்பனவத்தையானது பொருளல்லாதவைகளைப் பொருள்களாக வுணரும் மருள் நிலையென்று முன்

ஞான்றே கூறப்பட்டிருப்பதனால், இந்நிலை மீண்டும் விழிப்பாகிய சாக்கிராவத்தை வருமளவும் மருள்நிலையாகவன்றோ விருக்கும்? இங்ஙனமிருக்கும் மருள்நிலையின்கண், ஒவ்வொருபொருளையும் விசாரித் துணர்தலாகிய தெருள்நிலையும் விசாரணையாகிய வுழைப்பு மெங்ஙனமுண்டாகும்?

அன்றியும் இச்சாக்கிராவத்தையானது பொருளைப்பொருளாகவுணரும் தெருள்நிலையாகுமா? ஆகுமெனின், பிரபஞ்சமென வழங்கப் படுவதற்குப் பொருளேதுவென விசாரித்த ஞான்றும், வியட்டிகளாகிய பிருதிவியாதிக்குப் பொருளேதுவென விசாரித்த ஞான்றும் இவையனைத்திற்கும் பொருள்விளங்கிற்றா? இன்றே. குணந்தொழில்களாக முடிந்தனவன்றோ? அக்குணந் தொழில்களையன்றோ ஷை பிரபஞ்சமாதிப் பொருள்களாக நாம் மயங்கி யிருக்கின்றனம்? இங்ஙனம் மயங்கியிருப்பதனால் இது தெருள்நிலையாகுமா? ஆகாதாகலின் மருள்நிலையென்பதே சித்தாந்தமென்க. இத்துணை நியாயங்களால் சாக்கிராவத்தையே பொருளல்லவற்றைப் பொருளென் றுணரும் மருள் நிலையென்று தீர்மானமானதால் இவ்வவத்தையிலேயே,

"எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்று பிறந்துள்ள வாக்கியத்தினைக் கொண்டு நாம் ஒவ்வொருபொருளையும் விசாரித்துத் தெளியவேண்டு மென்க. அன்றியும் சொப்பனவத்தையின்கண் பொருளல்லாதவை

கள் பொருள்களாகத் தோன்றினும் ஆங்கு நிகழுமநுபவம் எங்ஙன முண்மையாக விருப்பதுபோல் காணப்படுகிறதோ, அங்ஙனமே இச்சாக்கிராவத்தையில் பொருளல்லாதவை பொருள்களாகத் தோன்றி யதனால் நிகழுமநுபவங்களும் உண்மைபோல் காணப்படுகின்றன. இதனாலேயே இச்சாக்கிராவத்தையையுஞ் சொப்பனாவத்தையென்று ஆன்றோர் கூறியிருக்கின்றனரென்க. எங்ஙனமெனின்,

"இந்திரஜா லங்கனவு கானலினீ ரெனவுலக மெமக்குத்தோன்ற" எனத்தாயுமானவரும்,

கைவல்லியத்தில்

ஞானங் காரண மறிவுகாண் காரிய நாமரூ பப்பேர்க, ளான தெப்படி யழிந்ததெப் படியென வாய்குதல் பயனன்றே, மாணி மைந்தனே தீர்க்கசொப் பனசகம் வந்ததும் பாராமல், போன துநினை யாமலுன் போதமாய்ப் பூர்ணமா யிருப்பாயே.

எனத் தாண்டவராய சுவாமிகளும் திருவாய் மலர்ந்தருளி யிருப்பதை யறிக.

ஆயினும் சாக்கிராவத்தாநுபவம் நீடித்ததா யிருக்கின்றமையால் தீர்க்கசொப்பனமென்று கூறியதென்க. அன்றியும் இச்சாக்கிராவத்தை மருள் நிலையாகின்றதால் உறக்கமெனப் பெயர்பெறுகின்றது. ஆதலால் நாம் இதினின்றும் விழிக்க வேண்டியவர்களா யிருக்கின்றனமன்றோ? சொப்பனஞ், சுழுத்தியினின்றும் விழித்த இச்சாக்கிராவத்தையே அறிவுடை

மையான விழிப்பாயிருக்க இதினின்றும் வேருக விழிக்க வேண்டுவதேன்? விழிப்பதாயின் அரைத்தமாவை மீண்டும் அரைக்கவேண்டியது போலாகின்றதே யெனின்,இச்சாக்கிர மானது தீர்ந்தவிழிப்பாயின் வேறுவிழிப்பு வேண்டுவதவசிய மின்று. அங்ஙனமின்றி இவ்வவத்தை யானது (பொருளல்லாத வற்றைப் பொருள்களாகவுணரும்) மருள்நிலையாகிய சொப்பனமென்று யுக்தி அநுபவமாக முடிந்தபடியினுல், உறக்கமெனப் பெயர்பெற்றிருக்கிறது. இதனுலிவ்வுறக்கத்தினின்றும் வேறுவிழிப்பை யடையவேண்டியது அவசியமன்றோ? அவ்விழிப்பென்பது யாதெனின்,

[சதுர்விழிப்புநிலை.]

அது (1 - வது) மித்தையாநுபவமாகவும், (2 - வது) துவிதாநுபவமாகவும், (3 - வது) விசிட்டாத்துவிதாநுபவமாகவும். (4 - வது) அத்துவிதாநுபவமாகவுமிருக்கின்றது. இதுவே சதுர்விழிப்பெனச் சொல்லப்படுகிறது. ஆதலால் நாமோவ்வொருவரும் இச்சதுர்விழிப்பு மயமாகத் தெளிந்திருக்க வேண்டுமென்க. இதனுள் முதலாவதாகிய மித்தையாநுபவ விழிப்பென்பதுயாதெனின், அகத்தும் புறத்துங் காணப்படுவனவாகிய வனைத்துங் கற்பனைகளாகத் தோன்றுமாறு(அதத்துவாவிருத்தி,தடத்தமென்னுமிரண்டு லட்சணுவாயிலாக) ஆராய்ந் தாராய்ந்து திடபாவமுற்றிருத்தலாமென்க. இரண்டாவதாகிய துவிதாநுபவ விழிப்பென்பது யாதெனின், முதல்விழிப்பில் அனைத்துங் கற்பனைத்தோற்றமென முடிந்ததால் இதற்கெதிர்மறையான

யதார்த்தமா யிருப்பதொன்றுண்டன்றே? அஃதன்றே அறிவெனப்படுவது? அவ்வறிவானது மலடிமைந்தனைப் போல வெறுஞ் சொன்மாத்திரமாக அறிவு அறிவென வழங்கப் படாது உண்மையாகவே இலட்சியாநுபவப்படவேண்டுமன்றே? அங்ஙனம் இலட்சியாநுபவப்படும் அறிவின் விளக்கம் யதார்த்தமாகுமன்றே? அதனாலது அதிட்டான இலட்சியா நுபவமாகிறதன்றே? ஆகவே, அயலனைத்துங் கற்பனைத் தோற்றமாய் விளங்குவதால் இது ஆரோப இலட்சியாநுபவ மாகுமன்றே? இங்ஙனம் புறநோக்கின்கண் அயலனைத்து மாரோப இலட்சியாநுபவமாகவும், அகநோக்கின்கண் அறிவாகியதான் அதிட்டான இலட்சியாநுபவமாகவும் மாறிமாறி விளங்கிக் கொண்டிருப்பதனால் இவ்விரண்டுந் துவிதாநு பவமா? ஏகாநுபவமா? துவிதாநுபவமாகின்ற தாதலின், இவ்விலட்சியாநுபவமாகவே விசாரித்துத் தெளிந்திருத்த லாமென்க.

மூன்றாவது விசிட்டாத்துவிதாநுபவ விழிப்பென்ப தியாதெனின், ஆரோபமாகியவனைத்துந் தோன்றியஞான்று அதிட்டானமாகிய அறிவு தோன்றாமலும், அறிவுதோன் றியஞான்று ஷை அனைத்துந் தோன்றாமலுமா யிருக்கும் இத்துவிதாநுபவமின்றி, அறிவாகிய அதிட்டானமும், அனை த்துமாகிய ஆரோபமும்; சமுத்திரமும், அதன்கண்தோன் றிய அலைதிவலையாதியும்போல ஆதார, ஆதேய பாவமாய் ஒருங்கே தோன்றுமாயின் அஃதென்னவெனப்படும்? விசி

ட்டாத்துவித மெனப்படுமன்ஞே? விசிட்டம் என்ஞல் கூடியதென்றும், அத்துவிதமென்ஞல் பிரியாததென்றும் பொருள்படுகின்றதனுல் எதனேடு எதுகூடியது, எதைவிட்டு எது பிரியாதது, எனவினுவ வருகின்றதன்ஞே? இவ்வினுவுக்கு அறிவாகிய அதிட்டானத்தோடு ஆரோபமாகியவனைத்தும் அவ்வறிவையே ஆதாரமாகக்கொண்டு கூடியிருக்கின்றனவெனவும், ஆதாரத்தைவிட்டு ஆதேயமாகியவிவை பிரிவுபடாதிருக்கின்றனவெனவும் விடைவருமன்ஞே? இதனுல் ஆதாரமாகிய அறிவு வியாபகமும், ஆதேயமாகியவனைத்தும் வியாப்பியுமாக விருக்கின்றனவன்ஞே? ஆதலால் இங்ஙனம் வியாபகமாகிய அறிவென்னுந் தற்பிரகாசத்தில் அனைத்துங் கற்பனுசொரூபங்களாக விளங்குமாறுஷை வியாபக வியாப்பிய லட்சியானுபூதியாகவே தெளிந்திருத்தலாமென்க.

நான்காவது அத்துவிதாநுபவ விழிப்பென்பதியாதெனின், கடபடங்கள் தோன்றுஞான்றே அவற்றை மட்பொருள், நூற்பொருள்களாகப் பார்ப்பதற்கும், மீண்டு மத்தோற்றங்கள் தோன்றிக்கொண்டிருப்பினும் மட்பொருள் நூற்பொருள்களையன்றிப் பரமாணுத்துணையு மின்றென அவற்றை ஷை பொருள்களி லொடுக்கிப் பார்ப்பதற்குங் கூடுமாறு அறிவாகிய தன்னிடத்தில் ஆரோபங்களனைத்தும் விசிட்டபாவமாய்த் தோன்றுஞான்றே அவற்றைத் தற்சொரூபமாகப் பார்த்தலும், மீண்டுமவைதோன்றின் அவற்றை

த்தற் சொரூபமாகக் கரைத்துக் கரைத்துத் தற்போதமாய் விளங்கப் பார்த்தலுமாகிய விவ்வனுபூதி யென்னவெனப்படும்? அத்துவிதாநுபவமெனப்படுமன்றோ? அத்துவிதமென்றிதனைச் சொல்லுவானேனெனின், துவிதமாகிய இரண்டாவதிறந்து நிற்றலாலென்க. அதாவது திருஷ்டாந்தத்தில் மண், நூல் ஆகிய விவற்றைத்தவிர இரண்டாவதாகத் தோற்றப்பட்ட கடம், படம், ஆகியவிவைகள் எங்ஙனமில்லையோ, அங்ஙனமே தாட்டாந்தத்தில் தானாகிய அறிவைத் தவிர இரண்டாவதாகிய ஆரோபங்களனைத்து மின்றெனத் தெளிந்திருத்தலா மென்க. இங்ஙனமிருக்கு மனுபூதியாகத் தெளிந்திருப்பதே அத்துவிதவிழிப்பெனச் சொல்லப்படுகின்றதென்க.

தெளிவாகிய இச்சதுர்விழிப்புக ளிங்ஙனமிருக்க, தோன்றுந் தோற்றங்களையெல்லாம் பொருள்களென்றுணரும் மருளாகிய விழிப்பை மயக்கமென்றுணராது, இதுவே தீர்ந்த தெருள்விழிப்பென மோசம்போய்க்கொண்டிருப்பது எத்துணையறியாமையெனப்படும்? இதனாலன்றோ மெய்யுணர்வென்கிற வதிகாரத்தில் "பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு மருள்" என்று கூறப்பட்டிருக்கின்றது? அன்றியும் "எப்பொருளெத்தன்மைத்தாயினு மப்பொருள் அப்படிக் காண்பதறிவு" என்னாது, அவ்வப்பொருள்கள் தோறுமுள்ள மெய்ப்பொருளைக் காண்பதறிவென்றுங் கூறப்பட்டிருக்கின்றதே. இதனால் ஒவ்வோர் பொருள்கடோறும்

மெய்ப்பொருளென்பதிருக்கின்றதென விளங்குகின்றதால், மெய்ப்பொருளிருத்தற் கிடமாயுள்ள அவ்வப்பொருள்களு மென்ன பொருள்களெனப்படும்? பொய்ப்பொருள்களென ப்படுமன்றோ? மெய்ப்பொருள்களென்றால் தோடமென்னை யெனின், மெய்ப்பொருளின்கண் மற்றோர் மெய்ப்பொருளி ருத்தல் விருத்தமாதலினென்க. அன்றியும் "எப்பொரு ளெத்தன்மைத் தாயினும்" என்றதனால் பொருளெல்லாம் தன்மையினவா யிருக்கின்றனவென் றாகின்றதன்றோ? தன் மையாவதுகுணம், அல்லது பண்பென்று சொல்லப்படுமாத லின், பொருளாகத் தோற்றுவதெல்லாம் குணபேதங்களே யன்றி முதல்களன்றென்பதென்க. இங்ஙனங் குணபேதமா யிருப்பவைகளெல்லாம் பொருள்பேதமேயெனவும், இதற் குமேல் அவைகள் யதார்த்தாநுபவப் பொருள்களெனவும் மயங்கி மயங்கி முழுதும் மோசம்போய்விட்டிருக்கின்றோ மே? இதனைச் சிறிது ஞான்றேனும் நாம் கவனித்ததுண்டா? இன்றே, இங்ஙனமிருக்குங் குணபேதங்களை யெல்லாம் பொருள்களாக மயங்குதலும்,பின்ஞான் றுசுகசாதனங்களா கப் பற்றுதலுமாகிய விவ்வநுபவ மென்னவெனப்படும்? இதுவன்றோ சொப்பனத்தைப்போன்ற விபரீதாநுபவமென ஆன்றோரால் கூறப்பட்டிருக்கின்றது? அன்றியும், இங்ஙன மாகிய விபரீதாநுபவத்தை யதார்த்தமென மயங்கித் தோற் றுகின்றன வெல்லாம் பொருள்களெனத் திடபாவமுற்றுத் திரிந்துக்கொண்டிருப்பதனாலன்றோ அறிவுடையோர் மூகர் களுக்கு மூத்த சகோதரர்களாயிருக்கின்றனரென நன்கு மதித்தற்கு நாமியைந்திருக்கின்றனம்? இது நன்று நன்று!

அதிலும் மிகவும் நன்று! பின்னும் நம்மை யறிவுறுத்தற் கன்றோ,

"கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவ
னற்றாள் தொழாஅ ரெனின்"

என்று ஓரரிய மகாவாக்கியம் கடவுள் வாழ்த்தென்கிற அதிகாரத்தில் முதற்குறளுக் கடுத்து வந்திருக்கின்றது? இதை யேனுஞ்சற்று கண்ணுறக்கூடாதா? அன்றியும்,

"விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்"

என்று மற்றோர் அரியவாக்கியமுங் கல்லாமையென்கிற அதிகாரத்தில் பிறந்திருக்கின்றதே. இதனையும், அயலனைத்தும் அநார்த சட துக்கமா யிருத்தலைத் தெரிவித்தற்கு வாசிட்டத்தில்,

"மாளாத காதலெனும் வர்ச்சநா பிக்கொடியின் வனத்தைச் சுட்டு, நீளாசை யனைத்துமறுத் தவர்க்கன்றோ இப்பயன்றான் நேரா நிற்கும், கோளான பொருளனைத்தும் முன்பொடுபின் பினிமையிலாக் குற்றங் கண்டு, மீளாத பாவனையாற் கட்டுண்பார் வேசரியே வேறென் றன்றால்."

என்றும் பிறந்துள்ள இதனையுஞ் சற்றுக்கண்ணுற்று இவைகள் யாதுகாரணம்பற்றிப் பிறந்திருக்கின்றனவெனச் சிறிது ஞான்றேனு மாழ்ந்து யோசிக்கக்கூடாதா? அல்லது அத்துணைச் சாவகாசங்கிடையாதா? கிடைக்கவில்லையேயெனின், பொருளல்லவற்றையெல்லாம் பொருளென மயங்கி வதை

வுற் றலைவதற்கு மாத்திரஞ் சாவகாசங் கிடைக்கின்றதா? அன்றியும், ஷெ வாக்கியங்கள் பிறந்திருப்பது நமக்காகவா? அன்று? நமக்காகவேயெனின், இங்ஙனம் நமக்காகப்பிறந்த தெனத்தெரிந்தும் வீண்திருப்தியுற்றிருப்பானேன்? இதுகாறும் சென்றுவிட்ட விவர்த்தமனைத்தும்போக இனியேனும் நிதானித் தொழுகவேண்டியவா றெழுகவேண்டுமென்றோ? அதற்காக இச்சரீர முதலியனவாகிய நாமரூபங்கள் ஆயாஞான் றுண்மையாயும், ஆய்ந்தஞான் றின்மையாயு மிருப்பானேனென முன்ஞான்றெழுந்த வினாவெழுச்சிக்கியைந்த விடை யீதென எட்டிற்று? இன்றெனின், ஏனின்று? யோசித்துத்தா னெட்டவேண்டுமெனின், எஞ்ஞான்று யோசிப்பது? இஞ்ஞான்று யோசிப்போமெனின், எங்ஙனம்யோசிக்கிறது? தோன்றவில்லையேயெனின், அதைப்பற்றிச்சற்றாகிக் குதும்.

எங்ஙனமெனின், பிராதிபாஸிகம், வியாவகாரிகம், பாரமார்த்திகமெனச் சத்து மூன்றுயிருக்கின்றது. இம்மூன்றுக்கும் சத்துத்திரயமெனப்பெயர். இவற்றுள் பிராதிபாஸிக சத்தென்பது முன்ஞான்றும், பின்ஞான்றுமின்றி இடைஞான்றுமாத்திரம் சொன்மாத்திரமாயுந், தோற்றன்மாத்திரமாயு மிருப்பது. அது, கயிற்றின்கண்தோன்றிய அரவு, கானலின் கண்தோன்றியநீர், கட்டையின்கண்தோன்றியகள்ளன் முதலியனபோல்வது. வியாவகாரிகசத்தென்பது பிராதிபாஸிக சத்தைப்போல் முன்ஞான்றும், பின்ஞான்று மின்றெனப் பட்டு இடைஞான்று தோற்றன்மாத்திர குணபேதங்களாக

க்காரியப்பட்டு விவகாரிகாநுபவத்திற் கியைந்ததுபோலிருப்பது. அது, மண்ணின்கண் காரியப்பட்டகடம், பொன்னின் கண்காரியப்பட்ட பணி, நூலின்கண் காரியப்பட்ட படம் முதலியனபோல்வது. பாரமார்த்திகச்சத்தென்பது பிராதிபாஸிகம், வியாவகாரிகம் ஆகிய இவ்விருசத்துக்கும் உபாதனகாரணமாயும், சொல்லும் பொருளுமொத்ததாயும், திரிஞான்றும் மாறுதிருந்தபடியே யிருப்பது. அது அரவுக்குபாதானமான கயிறு, நீருக்குபாதானமானகானல், கள்ளனுக்குபாதானமான கட்டை, கடத்துக்குபாதானமான மண், பணிக்குபாதானமான பொன், படத்துக்குபாதானமான நூல் முதலியனபோல்வது.

இங்ஙனமிருக்கும் * சத்துத்திரயங்களுள் ஷ்டி விஞ வெழுச்சிக் கியைந்த சரீராதி நாமரூபங்களை எந்த சத்தா

---

* சத்தென்றால் என்று முள்ளதற்கே சொல்லவேண்டுமாயினும், சத்தென்பதற்கு இருப்பது எனவும் பொருளிருக்கின்றதாதலால், கயிற்றரவாதி, மலடிமைந்தனைப்போல வெறுஞ்சொன் மாத்திரமா யில்லாமல் தோற்றன் மாத்திரமாகவாவ திருக்கின்றது. அதனு லிதுபோன்றவைகள் பிராதிபாஸிக சத்தெனச்சொல்லப்படுகின்றன. (பிரதீதி என்றால் தோற்றம், பாஸிகம் என்றால் விளங்குவது, இதனால் பிராதிபாஸிக மென்பதற்குத் தோற்றன் மாத்திரமாக விளங்குவது என்பது பொருள்) இங்ஙனமே மட்கடமாதியும், தோற்றத்தோடு வியகாரத்திற்கும் பயன்பட்டுக்கொண்டிருக்கின்றபடியினு லிதுபோன்றவைகள் வியாவகாரிக சத்தெனச் சொல்லப்படுகின்றன வென்க. அன்றியும், தனியே சத்தெனக்கூறிய ஞான்று பரமாத்திர சத்தையேகுறிக்கும். அதனுலேயே வியாவகாரிகம், பிராதிபாஸிகமென அடைகொடுக்கப் பட்டிருக்கின்றனவென்க.

கத் துணிவது? பாரமார்த்திக சத்தென்பாமேயெனின், அவைகள் காரணகாரியமாகவிசாரிக்கும் விசாரக்கியானமில்லாமலே கற்பனையெனப்படும் யோக்கியதையுள்ள பிராதிபாஸிக சத்தெனவும், காரணகாரிய விசாரணையாகிய அறிவுடைமையினால் கற்பனையெனப்படும் யோக்கியதையுள்ள வியாவகாரிக சத்தெனவு மாகாதிருக்கட்டும். முன்ஞான்று சொன்ன இலக்கணப்படி சொல்லும் பொருளுமொத்ததாய் திரிஞான்று மாறாதிருந்தபடியேயில்லாததினால் பாரமார்த்திகசத்தெனச் சொல்லற்கியையாவிடினும், அநுபவத்துக் கியைந்ததா யிருக்கின்றபடியினால் வியாவகாரிக சத்தெனச் சொல்லற் கியையாதோ? இதனோடு பிராதிபாஸிக சத்தெ றுஞ் சொல்லுவானேனெனின், அவை மண்ணாதிபூதங்களையன்றி யநுபவப்படட்டும். அநுபவப்படுகின்றனவேயெனின், மண்ணாதிபூதங்க ளிங்ஙனம் உருப்படுவதற்கு முன்ஞான்றும், பின்ஞான்று மிருந்தநுபவப்படுகின்றனவா? இல்லாமலநுபவப்படுகின்றனவா? இருந்தே யநுபவப்படுகின்றனவெனின், மண்ணாதிகளிருக்கின்ற விருப்பில் அஞ்ஞான்றே இவைகளெங்ஙன மிருக்கக்கூடும்? அல்லது முன்ஞான்றும், பின்ஞான்றுமின்றி இடைஞான்று மாத்திரமிருக்கின்றனவெனின், அவ்விடைஞான்றும் பொருளாயிருக்கின்றனவா? தோற்றமா யிருக்கின்றனவா? பொருளாயிருக்கின்றன வெனின், மண்ணாதிகளையன்றி யிருக்கட்டும். இருக்கிறனவேயெனின், மண்ணாதிகளின் மேல், கீழ், பக்கமாதி தசபுறத்தில் எந்தபுறத்திலுண்டு? எங்குமில்லையாதலால் தோற்றமாகவேயிருக்கின்றன வென்க.

இங்ஙனம் முன்ஞான்றும், பின்ஞான்றுமின்றி இடைஞான்றுமாத்திரம் வெறுந் தோற்றன்மாத்திரமாகத் தோன்றுபவைகளுக்கு ஓர்சத்தெனக்கூறுவதும் அறிவுடைமைதானோ? இடைஞான்றேனும்பொருளாகவில்லாமலா சரீராதிகள் அநுபவப்படுகின்ற வியாவகாரிக சத்தெனவழங்கப்படுகின்றனவெனின், இடைஞான்று தோற்றுவதுங் காரியப்பட்டவைகளா? அன்று? காரியப்பட்டவைகளேயெனின், காரியப்பட்டிருப்பவைகள் பொருள்களெனப்படுமா? பொருள்கள்தானெனின், தனித்தனிப்பொருள்களா? அன்றி மட்பொருளாகிய உபாதானகாரணத்தைத்தழுவிய பொருள்களா? தனித்தனிப்பொருள்களன்று? உபாதானகாரணத்தைத் தழுவியபொருள்களெனின், இதனால் அநுபவப்படுகின்றது மட்பொருளாகிய வுபாதானகாரணமா? அன்றிச் சரீராதியாகிய வுபாதேயகாரியங்களா? இரண்டுந் தானெனின், இவ்விரண்டுந் தொந்தமுற்றிருக்கினும் பெயர்களினாலுஞ், சொரூபங்களினாலும் வேற்றுமையுற் றிருக்கின்றனவன்றோ? அங்ஙனமிருக்கின்றமையால் இவ்விரண்டினுடைய வநுபவங்களும் வேற்றுமையுற்றிருக்க வேண்டுமன்றோ? அதாவது காரியத்தினநுபவத்தைக் காரணமும், காரணத்தினநுபவத்தைக் காரியமுமாக ஒன்றினநுபவத்தை மற்றொன்றேலாதிருத்தலாம். அஃதெங்ஙனமெனின், உருப்படல், வளர்தல், வெளிப்படல், கவிழ்தல், தவிழ்தல், நிற்றல், நடத்தல், ஓடல், ஆடல், திரிதல், உண்ணல், உறங்கல், விழித்தல், சாதல், பிணமாதல், புதைக்கப்படுதல், ஈற்றில்

உபாதானகாரணமாய்விடுதலாகிய இப்பலகிருத்தியாநுபவங் களுமெற்றின்பாலது? சரீராதிகளின்பாலதன்றோ? ஆதலின் இவையனைத்துங் காரியாநுபவங்களென்றாகின்றன. இவ்வ நுபவங்கட்கியைந்த பலகோடிச் சரீராதிகளும் உற்பத்தியா வதற்கு முதற்பொருளாயும், உற்பத்தியானபின்ஞான்று நிக ழ்வதற்கிடமாயும், நிகழ்ந்தபின் ஒடுங்குஞான்று இவற்றைத் தனதுருவாகக்கிரகிப்பதாயும், ஆங்காங்கும் பலகருவிகளால் கெல்லப்படுவதாயும்; கெல்லிய பின்ஞான்று கேணி,குளம், ஏரி, கால்வாய், முதலியனவாகவும்; மேடைமாளிகை யாதி யாகவும்; இவைபோல்வன பிறவுமாகிய அநுபவங்கட்கியை வதாகவு மிருப்பது யாதெனப்படும்? காரியரூபங்களாகிய சரீராதிகளா? காரணமாகிய மட்பொருளன்றோ? இங்ஙன மிருபேதங்களாகிய வநுபவங்களும் அததற்கு மியைந்தன வாயிருக்க, ஒவ்வோர் விவகாராநுபவங்கட்கு மியைந்தவை காரிய காரணமிரண்டுமென முன்ஞான்று கூறியதென்னை?

அன்றியும், காரியகாரணமிரண்டுந் தனித்தனி யநுபவ ப்படுகின்றனவென்று கூறப்படினும், காரியமாகிய சரீராதிக ளநுபவப்படுஞான்று காரணமாகிய மட்பொருளையன்றியநு பவப்படுகின்றனவா? அநுபவப்படுகின்றனவெனின், அவ்வநு பவம் மட்பொருளுக் கியையாதிருக்கட்டும். அங்ஙனமா யின், காரியகாரணமிரண்டுந் தனித்தனியநுபவப்படவேண்டு மெனமுன்ஞான்று கூறியதென்னையெனின், விவகாராநுப வங்கட்குக் காரியகாரணமிரண்டும் இயைந்ததெனக் கூறின

மையா லங்ஙனம் பிரித்துக்கூறினதேயன்றி அதுவே சித்தாந்தபட்சமன்றென்க. அன்றியும் காரியத்துவமாகின்றஇச்சரீர முதலிய நாமரூபங்கள் அநுபவப்படுகின்றனவென்றும், அதனலவை யதார்த்தமென்றுங்கூறியதைப்பற்றிப் பின்னுஞ்சற்றாகிக்குதும். எங்ஙனமெனின், ஒவ்வொன்றுந்தோன்றுவது நாம் ஆமெனவு, முண்டெனவுங்கருதிப் பந்தித்தற்கா? அன்றெனவு மின்றெனவுங்கருதித் தள்ளுதற்கா? ஆமுண்டாதியான விந்நான்கின் பாகுபாடுகள் யாதெனின்,

[சதுர்வழக்குவகை.]

ஆமென்பது ஒருருவத்திற் கியைந்தபெயரை ஏனைய ரூபங்களுள் ஒவ்வொன்றின்மீதும் ஏற்றி யேற்றி அப்பெயருக்கியைந்த பொருள் இதுவா, இதுவாவெனச் சுட்டிச்சுட்டிப் பார்க்குஞான்று அதுவும், அன்று, அன்றெனக்கழிந்துகழிந்து போகுமன்றே? போகுமாயின் பின்ஞான்று சுட்டிப்பார்ப்பதற்கியைந்த பொருள் யாது? முன்ஞான்று பல ரூபங்களின்மீதும் ஏற்றப்பட்டு ஏற்றப்பட்டு நழுவிய அந்த பெயருக்கியைந்த பொருள் யாதோ அதனைக் கண்டு சுட்டினலன்றோ அது விளங்கும்? அங்ஙனம் விளங்குவதும் யாதென விளங்கும்? ஆமென்பதாகவா? அன்றென்பதாகவா? ஏனையவெல்லாம் அல்ல வல்லவெனக் கழிந்துபோயினவாகலின் இஃது ஆமென்பதாகவே விளங்குமெனின், அப்பொருள் இன்னுமென்னவென விளங்கும்? அநுபவங்கட்கியைந்ததாகலின், ஆமென விளங்குவதோடு உண்டெனவும் விளங்குமெனின், இங்ஙனம் ஆமெனவு முண்

டெனவுமாக வியைந்தது பூர்வபட்சமென்பதா? அன்றிச்சித்தாந்தமென்பதா? சித்தாந்தமென்பதேயெனின், இஞ்ஞான்று சித்தாந்தமெனக்கூறிய இந்நாவானது மற்றோர்ஞான்று இதற்கெதிர்மறையாகப் பிறழாதிருக்குமாறு பாதுகாக்கவேண்டுமன்றோ? ஆமெனின்,

ஈது ஆமெனற்கு முண்டெனற்கு மியைகின்றதோ அதீ,தனக்குபாதானகாரணமாயிருந்து முப்போதுமிலங்குகின்ற முதற்பொருளைப் போன்றதா? அன்றெனின்,காரியப்பட்டனவெல்லாம்இடைஞான்றாகிய ஓர்ஞான்றனவாகலின் இவ்விடைஞான்றும் பொருளின்றித்தோன்றும்அக்காரியத்துவம் தனதுபாதானகாரணமெனப்படுமா?படுமெனின்,அவ்வுபாதானம் பொருளின்றித் தோற்றமாகத்தா னிருக்கின்றதோ? இன்றாதலின்,காரியத்துவம் உபாதானகாரணமன்றெனப்படுமன்றோ?அன்றியும்,அன்றென் றியைந்தகாரியத்துவம் தனதுபாதானகாரணத்தையன்றி இன்றெனப்படுமா?அன்றி உண்டெனப்படுமா? உண்டெனப்படுமெனின், தனிப்பொருளா யிருக்கவேண்டுமே. இல்லையாகலின்,இன்றெனப்படுமன்றோ? இங்ஙனம் அன்றென்பதற்கும், அதற்குத் தொந்தமாகிய இன்றென்பதற்கும் இக்காரியத்துவமியைந்ததன்றோ? ஆமெனின்,முன்ஞான்று இக்காரியத்துவம் ஆமெனவும், உண்டெனவுமாகிய சித்தாந்த பட்சத்திற்கே யியைந்ததெனவும், இதற் கெதிர்மறையாக நாவானது பிறழாதிருக்கப்பாதுகாக்கக்கூடுமெனவுங் கூறிவிட்டு,இஞ்ஞான்றுஅதற் கெதிர்மறை

யாக அன்றெனவு, மின்றெனவுமாகிய பூர்வபட்சத்திற் கியைந்ததென்று பிறழ்ந்து கூறியதென்னை? இங்ஙனம் அந் நாவானது பிறழ்ச்சியுறச் செய்துக்கொள்ளலாமா? இதற் காகத்தானே கற்றோரெனவும், அதிலும் அறிவுடையோ ரெனவும் பிறர்மதிக்கத்திரிந்துகொண்டிருப்பது? இத்துணை மதிப்புக்கும் இதனால் தளர்ச்சி வருகின்றதன்றோ? இங்ங னந் தளர்ச்சி வருவதற்குச் செய்துகொள்ளலாமா? தளர்ச் சிவராமலன்றோ பாதுகாத்துக் கொள்ளவேண்டும்? இது நமது குற்றமன்று; நாவினது குற்றமெனின், முன்னொன்று நாமிம் மதிப்பைப்பற்றி நன்கு யோசித்திருந்தால் அன்றெ னவும், இன்றெனவு மிருக்கும் ஒவ்வோர் தோற்றத்தையும் ஆமெனவும், உண்டெனவு மிருக்குஞ் சித்தாந்தபட்சமே யென்று நாவானது கூறுதன்றோ? இதுநிற்க,

சரீராதி நாமரூபங்கள் ஓர்ஞொன்று ஆமெனவும், உண் டெனவுமாகிய ஓர் வகுப்புக்கும்; மற்றோர்ஞொன்று அன்றெ னவும், இன்றெனவுமாகிய மற்றோர் வகுப்புக்கு மியைந் திருக்கின்றனவன்றோ? இங்ஙன் மியைந்திருப்பானேன்? அன்றியும், ஆமெனவும், உண்டெனவுமாகிய வகுப்பின்கண் அன்றெனவும், இன்றெனவுமாகிய வகுப்பும்; அன்றென வும், இன்றெனவுமாகிய வகுப்பின்கண் ஆமெனவும், உண் டெனவுமாகிய வகுப்பும் ஒன்றிலொன்றில்லாமல் அந்நி யோந்நியா பாவத்தை யேற்பானேன்? இவ்விருவகுப்பு மிங்ஙன மேற்கினும் இதற்கு விலட்சணமான பாவமாயிருப்

பவையெவை? (விலட்சணமென்பது வேறுபட்டது.) சரீர மாதி நாமரூபக் குழாங்களன்றோ? இங்ஙனமிருக்குமிந்நாம ரூபக்குழாங்க ளென்ன வெனப்படும்? இதைச்சற்று கவனிக்கவேண்டுமே! அன்றியும் இவைகள் ஆமெனவு, முண்டெனவுந் தோற்றுகின்றன வென்பது யாதினாலெனப்படும்? ஆராய்ந் துணராததாலெனின், அவ்வாராயாமை யென்ன வெனப்படும்? அவிவேக மெனப்படுமெனின், பின்ஞான்று அன்றெனவு, பின்றெனவுந் தோற்றுவது யாதினாலெனப் படும்? ஆராய்ந்துணர்தலினாலெனின், இவ்வாராய்தலென்ன வெனப்படும்? விவேகமெனப்படு மெனின், விவேக மென்பதுஅறிவுடைமையும், அவிவேக மென்பது அறியாமையு மாகின்றனவன்றோ? ஆகவே, இவ்விரண்டில் நாமெதனைத் தழுவவேண்டியது? விவேகமாகிற அறிவுடைமையை யெனின், அறிவுடைமையை ஆங்காங்குந் தழுவுகிறவர்கள் கற்றோர்களும், அறியாமையைத்தழுவுகிறவர்கள் மூடர்களு மாகின்றனரன்றோ? கற்றோர்களென நம்மையே நாம் மதித்திருப்பதால் அன்றெனற்கு, மின்றெனற்குமியையாது ஆமெனற்கு, முண்டெனற்கு மியைகின்ற முதலென்பது யாதோ அதனையன்றோ நாம் தடையின்றிப் பந்திக்கவேண்டியது?

இதுகாறும் நாம்பந்தித்துக்கொண்டு வந்தவெதுவற்றை? சரீராதி நாமரூபங்களைத்தா னெனின், இவை வகுப்புகளிரண்டில் எந்தவகுப்பாகப்பந்தித்துக்கொண்டுவந்தோம்? ஆமெனவும்உண்டெனவுமாகிறவகுப்பாகவெனின், அவைஅன்றென

வும் இன்றெனவுமாகாதிருக்கட்டும். நாம் எத்துணைச் சேய்மை சென்றுசென்று ஆமெனவும், உண்டெனவும் பந்திக்கினும் அத்துணைப்பந்திப்பும் அன்றெனவு, மின்றெனவுமாய் முடிகின்றதே. முடிகின்றதால், அன்றெனற்கும், இன்றெனற்கும் பின்ஞான்றியையாது ஆமெனற்கு, முண்டெனற்குமேயியைந்திருக்கும்பொருளையன்றோ விடாது நாம்பந்தித்திருக்கவேண்டியது? அப்பொருள் அகத்தும் புறத்துங் காணப்படுவனவற்றுளுண்டா? அதிலு மணுத்துணையேனு முண்டா? அதிலும் நுட்பவணுத் துணையேனும் அல்லது பரமாணுத்துணையேனு முண்டா? இல்லையே. பின்னர் நாம் பந்திக்கவேண்டியதெதை? அஃதின்னதெனக் கிஞ்சித்துந்தோன்றவில்லையேயெனின், இங்ஙனங் கிஞ்சித்துந் தோன்றவில்லையேயெனக் கிஞ்சித்துந் துன்புறாது திருப்தியுற்றுத் திரிந்துகொண் டிருப்பதனாலன்றோ "கற்றதனாலாய பயனென்கொல்" எனவும், "பொருளல்ல வற்றைப் பொருளென்றுணருமரு" ளெனவும் வாக்கியங்கள் பிறந்திருக்கின்றன? அன்றியும், "எப்பொருளெத்தன்மைத்தாயினு மப்பொருள் எப்படிகாண்பதறி" வென்றது "மெய்ப்பொருள் காண்பதறிவு" எனப் பிறந்திருப்பானேன்? இவற்றையெல்லா முணராது பின்னரெவற்றை யுணர்ந்திருக்கிறதாகப் பாடுபட்டுத் திரிந்துக்கொண்டிருக்கின்றனம்? இங்ஙனந் திரிந்துக்கொண் டிருப்போமாயின், திருக்குறளில், நீத்தார்பெருமை யென்கிற வதிகாரத்தில்,

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்."

என்றிறந்துள்ள மகாவாக்கியங் குறிப்பித்தபடி நாம் செயற்கரியவைகளை யெங்ஙனம் செய்யப்போகின்றனம்?

இதனால் நமக்கு இலச்சையென்பது இல்லைபோலும். (இலச்சையென்பது - வெட்கம்.) யோசிக்கின் நாம் உடலை வளர்ப்பதற்காளானோமேயன்றி, நாமாகிய வுணர்வைக்கண்டு அவ்வனுபூதி வளர்வதற்காகச்சிறிதேனும் முயல்கின்றோமில்லையே. இதற்குநா மென்னசெய்குதும்? இனியேனும்யோசித்துணரவேண்டுமன்றோ? அன்றியும், சரீராதிநாமரூபங்கள், ஆமெனவு, முண்டெனவுந் தோற்றுகின்றனவே, அங்ஙனந் தோற்றுந்தோறும் அவைகள்அன்றெனவும், இன்றெனவு முடியுமாறு விசாரித்துத்தெளிந்து இதற்குமேல் ஆமெனவு, முண்டெனவும் விளங்கிநிற்பதுயாதோவென அதனையுந்தெளியவேண்டுமன்றோ? இங்ஙனம் ஆமுண்டாதிநான்குவிதவழக்குகளைக்கொண்டு விசாரித்துத்தெளிவதனால் வாய்க்கும் நயங்களியாவை யெனின், முதலாவது (இல்லைஎன்பது) இன்றென்னும் வழக்கைக்கொண்டு நாமரூபங்களனைத்துங் கயிற்றின்கண் அரவுபோல ஆரோபமாகத் தோன்றுவதுமாத்திரமேயன்றி உண்மையி லின்றெனத் தெளிவதனால், அறிவானாகிய தனக்குப் பலவுயிர்களாகிய * (1) சுசாதிபேதங்க

* (1) சுசாதி - தன்சாதி, இது ஓர்மாத்துக்கு மற்றோர்மரம் தன்சாதி அதாவது தன்னினமாக விருப்பதுபோன்றது.

ளும் அவ்வவ்வுயிர்களுக்கும் உபாதியாதியாகவுள்ள * (1) விசாதி பேதங்களும் தோற்றன்மாத்திரமாய் விளங்கும் கற்பனையே யென்று திடபாவம் வருதலால் அவற்றைப் பொருள்களெனக் கொண்டுழலும் மருளானது நீங்குமென்க. அதுவே மருணீக்கம்வாய்த்தலென்பதாமென்க. இரண்டாவது (அல்ல என்பது) அன்றென்னும் வழக்கைக்கொண்டு இங்ஙனமாகிய நாமரூபங்கள் தோற்றன்மாத்திரமாகவேனு மிருப்பினும் அவையனைத்துந் தானன்றெனத் தெளிவதனால் மரத்தின்கண்தோன்றும் (2) சாகை, இலை, பூ முதலியவற்றிற்கு மரத்தைத்தவிர ஆதாரமெங்ஙனமில்லையோ, அங்ஙனமே அறிவாகிய தன்பால்தோற்றும் சகசீவபரங்களாகிய ஆதேயங்களுக்குத் தன்னைத்தவிர ஆதாரமில்லையாயினும் ஆதேயமாகிய வவை சதுர்ஞான்றும் பொருளின்றிப்போகுங் கற்பனையாகவுங், ஆதாரமாகியதான் அச்சதுர்ஞான்றும் பொருளாயிருக்கும் யதார்த்தமாகவு மிருப்பதனால் கற்பனையாகிய அவை யதார்த்தமாகிய தானன்றெனும் நிச்சயஞான மேற்பட்டு அதனாலிச் * (3) சுவகதபேத நாட்ட விழப்பு வாய்க்குமென்க. மூன்றாவது உண்டென்னும் வழக்கைக்

---

* (1) விசாதி = அந்நியசாதி, இதுமரத்துக்குக்கல் அந்நியசாதி அதாவது அந்நிய வினமாகவிருப்பது போன்றது. (2) சாகை = கிளை. (3) சுவகதம் = அவயவங்கள், இது மரத்துக்குத் தன்கண்தோன்றிய கிளை, இலை, பூவாதி தன்னைவிட்டுப் பிரியாமல் அவயவசகிதமா யிருப்பது போன்றது. இச்சுசாதி, விசாதி, சுவகதபேதங்கள் ஸஜாதீய, விஜாதீய, ஸ்வகத பேதங்களென்றும் வழங்கப்படும்.

கொண்டு அகத்தும், புறத்துங் காணப்படும் நாமரூபங்களை விசாரிக்குஞான்று யாவுங்கற்பனையென்று முடிவதனால் இக் கற்பனைகளுக்கெதிர்மறையான யதார்த்தமாகவும், அவற்றை மாறுதிருந்துணருஞ் சாட்சியாகவு மிருக்கும் அறிவாகிய தான்மாத்திர முண்டெனத் தெளிவதனால் ஷை சுசாதிக, விசாதிக, சுவகதபேதங்களாகிய வவை அபாவபதார்த்தங்க ளென்றும்; ஆனால் சதுர்ஞான்றும் பாவமாயிருக்கக்கூடிய முதல்தானேயென்றுந்தேர்ந்திருக்குந்தேர்ச்சியென்னும் வாச்சியார்த்தமாகிய நிச்சயக்கியானம் வாய்க்குமென்க. நான் காவது ஆமென்னும்வழக்கைக்கொண்டு சக, சீவ, பரங்களாகிய ஆரோபங்கட் கதிஷ்டானமாகவும், அவைகள் நிகழ்வதற்காதாரமாகவும், அவைகள் தோற்றன்மாத்திரமாகவாவது விளங்குவதற்கு விளக்கமாகவும், அவைகளை மாறுதிருந்துணர்வதற்கு உணர்வுவடிவமாகவு மிருப்பது தானேயாமென்றுதெளிவதனால் இத்தெளிவாகிய * வாச்சியார்த்தமட்டாகத் தேர்ந்திருக்குந் தன்னை ஷை சுசாதிமுதலிய விடயங்களை ஆரோபதசைக்கண் சுட்டிச்சுட்டி யுணருஞான்று அதாவது, இதுவீடெனச் சுட்டுஞான்று ஆமெனவும், இங்ஙனமே இது கடமெனவும், இது படமெனவும், இது தேகமெனவுஞ் சுட்டியுணருஞான்று ஆம் ஆமெனற்கியைந்து இலட்சியாநுபவப்படுவதுபோல சமாதிகூடியநுபவமுதிர்ந்த அவ்வதிட்டானதிசைக்கண் சுயம்பிரகாச சைத

* வாச்சியார்த்தம் = சுருதியுக்தியினால் சொல்லளவாகத்தேர்வது, அல்லது சுருதி யுக்தியளவாகத் தேர்வதெனவும்படும்.

ன்யமாயுணர்ந்து அவ்விளக்கம் விளங்குந்தோறும் தானெ ன்பதற்குப் பொருளென்பதெதுவெனக் கருதின் இதுவே யா மிதுவேயாமென * இலட்சியார்த்தமாகத் தெளிந்திருக் கும் இலட்சியாநுபவம் வாய்க்குமென்க. இங்ஙனம் அகத் தும், புறத்துங் காணப்படும் நாமரூபங்களை இந்நான்குவித வழக்குகளைத் துணையாகக்கொண்டு விசாரித்துத் தேர்ந்திரு ப்பதே அறிவுடைமையாகுமென்க. அன்றியும் சகசீவபர மாகிய கற்பனைகளொவ்வொன்றும் இந்நான்குவித வழக்கு மயமாகவே யிருக்குமென்பதற் குதாரணம்,

சீவகாருண்ய விளக்கம்.

உண்டில்லை யாமலவென் றோர்நான்கு மேலாமற்
கண்டபொரு ளொன்றேனுங் காட்டாதார்க்—குண்டோ
குருத்துவந்தான் வல்லீர் குளறிவழி தற்கோ
பெருத்தகுரு வென்றுகொண்ட பேர்.

என்பதனாலுணர்க. இஃதிங்ஙனமிருக்க ஷை புருஷார்த்தம் நான்கனுள் அறமென்பது எதனையெதற்களிப்பதென முன் ஞான்றெழுந்த வினாவெழுச்சிக்கியைந்தவிடை இஞ்ஞான்று

* இலட்சியார்த்தம்=பொருளாகத்தேர்வது. அல்லது சுருதி யுக்தி யநுபவத்தால் தேர்வதெனவும்படும். அதாவது மரையென் கிற பெயரா லப்பெயருக் கியைந்த பொருள் பசுப்போன்றிருக்கும் ஓர் மிருகமெனச் சொல்லளவாகத்தேர்வது வாச்சியார்த்தமென வும், அப்பொருளைக் கண்ணிந்திரியவாயிலாக நேரேயறிவது இல ட்சியார்த்த மெனவும்படும்.

ஏற்பட்டதா? ஏற்பட்டதாயின், அவ்விடையின்படி எதனை யெதற்களிக்கவேண்டியது? அறிவாகுகிய தானன்றோ இருப்புப்பொருளாக நிலைத்துநின்றது? இஃதிங்ஙனமிருக்க, காண்டலளவையினால் இழிந்தோர்க்கு உண்மையநுபவமாகத் தோற்றப்படு முலகையேனும், கருதலளவையினால் இவ்வுலகவிரக்தியுற்ற பரிபாகிகள் வழிபடுதற்கோரிறையொன்றிருக்கவேண்டுமென்று அநுமானிக்கப்படுவதற்கியைந்த பரத்தையேனும் அளிக்கலாமா? இதுகாறுமாராய்ந்து வந்ததில், அயலாகிய உலகுபரமிவைகள் கிஞ்சித்து மிருப்பாகத் தேரப்பட்டனவா? இல்லையன்றோ? அறிவாகியதானன்றோ இருப்புப்பொருளாகத் தேரப்பட்டது? இதிலையமுளதேல் இன்னுஞ் சற்றுராய்குதும். எங்ஙனமெனின்,

காணப்படுவனவாகிய நாமரூபங்க ளொவ்வொன்றும் ஆராய்தலின்கண் நாம் காரணகாரியநெறித்தாகச்செல்ல இடங்கொடுக்கின்றதன்றோ? கொடுக்கின்றதுதானெனின், அந்தத்தில் எங்ஙனமாக முடிகின்றது? சூன்யமாகமுடிகின்றதெனின், எதுசூன்யமாக முடிகின்றது? சூன்யமே சூன்யமாக முடிகின்றதெனின், இச்சூன்யதோற்றம் நாமரூபங்களை யாராய்வதற்கு முன்னுான்றோ? அன்றி ஆராய்ந்தபின்னுான்றோ? ஆராய்ந்தபின்னுான்றுதானெனின், அப்பின்னுான்று தோன்றுஞ்சூன்யம் ஆராயப்பட்ட நாமரூபங்களா? அன்றி மற்றொன்றென்பதா? நாமரூபங்களன்று; மற்றொன்றாகிய சூன்யந்தானெனின், இச்சூன்யம் முன்னுான்றேயிருந்து

இம்முடிவில் தோற்றுவதா? அன்றி நூதனமாக உண்டாகித்தோற்றுவதா? நூதனமாகவுண்டாகியதன்று; முன்னொன்றிருந்தே தோற்றுவதெனின், ஆராய்தலுக்கு முன்னொன்றுஏன்தோற்றவில்லை? நாமரூபங்களால் மூடப்பட்டிருந்ததெனின், ஆராய்தலுக்கு முன்னொன்று நாமரூபங்களாகத் தோற்றியதுயாது? இந்நாமரூபங்களே யெனின், இந்நாமரூபங்கள் முன்னொன்றிருந்து தோன்றினவா? அன்றி நூதனமாகவந்து தோன்றினவா? நூதனமாகவந்து தோன்றினவன்று; முன்னொன் றிருந்தே தோன்றினவெனின், ஆராய்ச்சிமுடிவில் தோன்றலாமே; ஏன் தோன்றவில்லை? அச்சூன்யத்தால் மூடப்பட்டிருந்ததெனின், இவற்றினால் அச்சூன்யமும் இந்நாமரூபங்களு மிருப்பெனப்பட்டன. அங்ஙனமிவைகளிரண்டும் இருப்பென்பதாயின், ஆராய்தலின்கண் காரண, காரியமாகக் கலந்துகலந்துபோகின்றது எது? ஷை உருவங்களன்றோ? அன்றெனின், உருவங்கள் கலந்துபோகாதுழி அருவமெனப்படும் சூன்யமாகத் தோன்றுமா? தீபாபாவமே இருளென்பதுபோல, நாமரூபாபாவமே சூன்யத்தோற்ற மென்பதன்றோ? அச்சூன்யமிருந்துதான் தோன்றியதெனின், உருவபேதங்கள் காரணகாரியங்களாகக் கலந்துப்போகாதிருக்கட்டும். அங்ஙனம் கலந்தகலவே சூன்ய இலட்சியார்த்த மென்பதற்கு விருத்தமென்பதின்றென்க. ஆராய்தலின்கண் உருவநாசமே சூன்ய இலட்சியார்த்தமாயின், ஆராய்தலின்மையில் சூன்ய நாசமே உருவ இலட்சியார்த்தமாக வேண்டுமேயெனின், ஆராய்ச்சியில் சூன்யமா

யும், அவ்வாராய்ச்சியின்மையில் நாமரூபமாயும் தோன்றுவது யாதெனப்படும்? ஆராய்ச்சியில் நாமரூபநசிப்பே சூன்யமாதலால், ஆராய்ச்சியின்மையில் அச்சூன்யத்திரிபே நாமரூபங்களென்பதாயிற்றன்றோ? சூன்யம் நாமரூபங்களாகத் திரிந்துகாண்ப தெங்ஙனமெனின்,

அக்கினியானது வேயாதிவிருட்ச வுபாதிசகிதங்களாலும், காந்தமாதிய வுபாதிசகிதங்களாலும் செம்மையொளி வெப்பமாக வுருவப்பட்டதனாலன்றோ மீண்டும் அக்குணபேதங்கள்மாறி அருவமாகின்றது? அதுபோல் ஆராய்ச்சியில் தேரப்பட்ட சூன்யமே தன்னிடத்திருக்கின்ற ஓர்வித விர்த்தியினால் நாமரூபங்களாகத் திரிந்தமையால் மீண்டும் இவைகள் மாறி சூன்யமாகத் தேய்ந்துபோகின்றது. இவற்றால் சூன்யமே நாமரூபங்களாயும், நாமரூபங்களே சூன்யமாயுமாகின்றனவென்பதாயிற்று. ஆகவே ஆராய்தலின்மையாலும் அஃதுண்மையாலும் மாறிமாறிக்காண்பது எதுவெனப்படும்? இந்நாமரூபங்களும், அச்சூன்யமுந்தானெனின், ஆராய்ந்திருப்பவர்க்கு நாமரூபம் சூன்யமாய்விடுமாயின், ஆராயாதார்க்கும் நாமரூபம் இல்லாதிருக்கவேண்டுமே. இருக்கின்றதன்றோ? அன்றியும் ஆராய்தலில்லார்க்கு அச்சூன்யமே நாமரூபங்களாய்த் திரிந்து தோன்றுமாயின் ஆராய்ந்திருப்பவர்க்கும் அச்சூன்யமென்ப தில்லாதிருக்க வேண்டுமே. இருக்கின்றதன்றோ? இருப்பதால் மாறிமாறித்தோன்றுவது யாதெனப்படும்? அன்றியும் நாமரூபங்களும் சூன்யமும் சடங்களாயிருக்கின்றனவா? அன்றிச் சித்தாயிருக்கின்றனவா?

இரண்டும் அறியப்படுவனவாகலின் சடங்களாகவே யிருக்கின்றனவெனின், இவ்விரண்டுசடங்களும் தம்மையு மற்றொன்றையும் அறியாதிருக்கின்றனவன்றோ? மற்றொன்றெனச் சொல்லியது எதையெனின், இவைகளை இடைவிடாதிருந்தபடியே யிருந்தறிகின்ற நாமாகிற அறிவென்பதென்க.

ஆராய்ச்சியிலும் அஃதின்மையிலும் சூன்யமாகவும் நாமரூபங்களாகவும் மாறிமாறித்தோற்றுவது நாமெனப்படுமா? அன்றி வேறெனப்படுமா? வேறெனப்படுவது அஷ்ட நாமரூபங்களுஞ், சூன்யமுமாகின்ற சடபேதங்களென்பன. ஆகலின் இவைகள் மாறிமாறித்தோற்றுவதன்று; நாமென்பதாமெனின், நாம் நாமரூபங்களாக மாறினோமாயின் அந்நாமரூபங்கள் யாருக்குத்தோற்றுகின்றன? அன்றியும் நாம் சூன்யத்துவமாகமாறினோமாயின், அச்சூன்யத்துவம் யாருக்குத் தோற்றுகின்றது? இவ்விருதோற்றங்களும் சடபேதங்களெனமுன்னுான்றே நாம் ஒப்புக்கொண்டிருக்கின்றோம். இங்ஙனமிருக்க, இவ்விருசடங்களையும் மாறாது இருந்தபடியே யிருந்தறிகின்றது யாரெனப்படும்? நாமெனப்படுமன்றோ?. படுமெனின், இங்ஙனமாறிமாறித்தோன்றுவது நாமா? நாமல்லவே. ஒவ்வொரு பூதங்களுக்கு முதலென்பது இது, இதுவென எட்டுதற்குச் சக்தியின்றாயினும் இதுகாறுங் கூறிவந்த இரகசியங்களையேனும் சிந்தித்துத் தெளியவேண்டுமே. இங்ஙனமாயிருக்கின்ற இந்த இரகசியங்களையெல்லாமெடுத்துணர்த்தித் தெளிவிப்பது எந்த மரபெனப்படும்?

சுசாதியாதிக ளிறந்தொளிரும் தானாகிய ஏட்டை விடாது கண்டு கண்டுணர்ந்து சுகோதயமாயிருக்கும் ஆன்றோர் மரபேயன்றி, அயலாகிய ஏடுகளைப் புரட்டிப் புரட்டித் தடவிக் கொண்டிருப்பதோடு உணவுஏப்பமும் விடாதுவிட்டுக்கொண்டிருப்பவரது மரபென்பதன்றென்க. இவ்வரிய இரகசியங்களனைத்தும் தோன்றாக்காறும் ஐயமாகத்தானே யிருக்கும்? இவ்வரிய ஐயத்தைவிட இதற்குயர்வாகவேனும் ஒப்பாகவேனும் வேறு ஐயமிருக்கின்றதா? இன்றாதலினன்றோ,

ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து.

எனக் குறள்மகாவாக்கியம் பிறந்திருக்கின்றது? இவ்வையம் எஞ்ஞான்றகலுவது? இப்பிறப்பின் கண்ணேயன்றோ? இப்பிறவியிழந்தபின்ஞான்று என்செய்வது? மீண்டுமிதுபோன்ற பிறவிவாய்க்கு மென்பதற்குத் திடமென்னை? திடமின்மையினாலன்றோ "இப்பிறவிதப்பினா லெப்பிறவிவாய்க்குமோ" "தடுத்துமேலு மிவ்வுருவமாயினும் பெறல்சற்றரிது"என்றாரான்றோர்? இப்பிறவிபோன்றபிறவிவாய்க்கினும் அஞ்ஞான்று விசாரித்துத் தெளிதற்கியைந்த அந்தக்கரணமென்பது ஒத்திருக்குமா? இருக்குமெனின், திடமென்னை? இஞ்ஞான்று உழைத்திருந்தாலன்றோ இவ்வுழைப்பு இவ்வந்தக்கரணத்தை அஞ்ஞான்று அவ்வுழைப்பிலிழுக்கும்? இஞ்ஞான்று முழுதும் உலகபராக்கிலிருக்குமாறு மழுக்கிக் கொண்டிருந்தால் அஞ்ஞான்று நாம் என்னசெய்கின்றது?

இங்ஙனமிருக்க "செயற்கரியசெய்வார் பெரியரென்" றுணர்த்திய அவ்வரியசெயல் யாதெனப்படும்? சதுர்விதமாயுள்ள புருஷார்த்தங்களுள் முதலாவது புருஷார்த்தம் அறமென்பதன்றோ? அவ்வறம் அளித்தலாகலின், எதற்கு எதனையளித்தல்? அறிவாகிய தன்னையன்றோ தனக்களிக்கவேண்டியது?

தானிதுகாறுமிருந்த வியல்பின்படியே யிருக்கட்டுமே. இருப்பாயிருக்கின்றதன்னைத் தனக்களிக்கவேண்டுமென்பதென்னவிந்தை! இதை யெவர்தானேற்பார்கள்? அன்றியும், நாம் யாதொரு கிர்த்தியமு மில்லாமலா வாளாவிருக்கின்றனம்? விழிப்பாகிய சாக்கிராவத்தையுள்ளளவும் நமக்குத் தீர்க்கையென்பதனுத்துணையேனு மெங்கேயிருக்கின்றது? இன்றாகலின், தனக்குத் தன்னை யளிக்கவேண்டுமென்பதை, யாதொரு கிர்த்தியமுமின்றி வாளா திரிந்துகொண்டிருப்பவர்கள் மாத்திரந்தா னொருவாறு கவனித்தால் கவனிக்கலாம். நாம் கவனிக்க அத்துணை வாளாவிருக்கும் வீணர்களா? இங்ஙனம், தன்னைத் தனக் களிக்கவேண்டுமென்பதைக் கவனிக்கவே தீர்க்கையில்லாதபோது, இதற்குமேல்,தன்னைத் தனக்களித்துக்கொண்டிருப்பதற்குத்தீர்க்கை யெங்கிருந்துவரும்? அன்றியும் இஃதெஞ்ஞான்றுமெங்கணுங் கேள்விப்படாத வோர்நூதனமான விஷயமாயிருக்கின்றதே! இருந்தாலுமிருக்கட்டும். தனக்குத் தன்னையேனளிக்கவேண்டுவதெனின், இதுகாறு மாராய்ந்துவந்ததில், நாம் கற்பிதபாவமென்பதின்றி, யதார்த்தபாவமா யிருக்கி

ன்றோமென்று விளங்கினதா? இல்லையன்றோ? அவ் யதார்த்த பாவமானது நன்குவிளங்கி அத்திடபாவமாகவே யிருத்தற்குத் தன்னைத்தனக்களிக்கவேண்டுவ தவசியமாமென்க.

யதார்த்தபாவம் விளங்குவ தெங்ஙனமெனின், நாமொவ்வொருவரும் சுகத்தின் அபேட்சையுள்ளவர்களா? அஃதில்லாதவர்களா? சுகத்தினபேட்சையேயுள்ளவர்களெனின், அதுகாரணமாக ஒவ்வொருவரும் இச்சா, ஞானக், கிரியை யியற்றி நிகழ்கின்றனமா? அன்று? இச்சா, ஞானக், கிரியை யியற்றியே நிகழ்கின்றனமெனின், அங்ஙனம் நிகழ்வதும் நான், நீயென்பதாகவா? அன்றாகவா? நான், நீயென்பதாகவேயெனின், நான், நீயென்பதும் இலட்சியாநுபவமாகவா? அஃதன்றாகவா? இலட்சியாநுபவ மாகவேயெனின், அஃதென்ன விலட்சியாநுபவமாகவோ? உபாதியிலட்சியாநுபவ மாகவெனின், உபாதியான தொன்றாயில்லாமல் தூலம், சூக்குமம், காரணமென, மூன்றுவிதமா யிருக்கின்றமையினால்,இம்மூன்றுள் எந்தவுபாதி யிலட்சியாநுபவமாக நிகழ்கின்றனம்? சாக்கிரம், சொப்பனம், சுழுத்தியென்னு மிம்மூன்றவத்தைகளி லெந்தவவத்தைக்கெந்தவுபாதி யுரியதா யிருக்கின்றதோ. அந்தவுபாதி யிலட்சியாநுபவ மாகவே யெனின், சுழுத்தியவத்தையின்கண் காரணோபாதி சகிதமாகநிகழுஞான்று,ஆங்கு இச்சா,ஞானக், கிரியையாக நிகழ்வதுமுண்டா? ஆங்கு, இச்சை, கிரியையெனுமிரண்டு புடைபெயர்ச்சி யில்லையாயினும்,.சாக்கிரமாகிய விழிப்புக்கு

வந்தனுன்று நான் ஒன்றுமறியாமல் சுகமாயுறங்கினேனெ ன்று சொல்லுவதனுல் சாக்கிர, சொப்பனத்தில் காணப்ப டும் நாமரூபங்களுக்கு வேருன பாழையுணர்ந்திருந்ததாக வேற்படுகிறது. அப்பாழுணர்வாகிய அந்தகார விர்த்தியே அவ்வவத்தைக் கியைந்த ஞானமாயிருக்கின்றது. இதனுல் ஷை இச்சையாதி மூன்றுள் ஞானமாகிய வொன்றிருப்ப தாகத் தெரிகின்றது.

அன்றியும் சுகமாயுறங்கினேனென்பதனுல், சுகத்தை யுணர்ந்திருந்த சுகாகார விர்த்தியும், இறந்தகாலமாகிய சுழூத்தியின்கண் இருந்தேனென்னும் அநுபவ நிச்சயமு மேற்படுகின்றது. ஆதலின் இத்திண்ணய்நோக்கியே உபாதி தித்திரய பாவமாகவிருந்து நிகழ்கின்றனெனக் கூறினதெ னின், இதனுல், நாம் தூலம், சூக்குமம், காரண மென்னு மிம்மூன்றையுமே இலட்சியாநுபவமாகக்கொண்டு நான், நா னென நிகழ்கின்றனமென்ருகின்றது. ஆகவே இவ்வுபாதி களி லெந்த வுபாதிநான், அறிவானுகிய நானென்பதற்குப் பொருளாகின்றது? தூலோபாதியாகிய நானே, அறிவா னுகிய நானென்பதற்குப் பொருளாகின்றதெனின், மற்றை ய சூக்கும காரண மிரண்டும், நானென்பதற்குப் பொருள ல்லவென்ருகின்றனவே. இங்ஙனம் ஷை ஈருபாதிகளையும் நானன்றென விவகரிக்கின்றனமா? அல்லது சூக்குமோபா தியாகிற நானே நானென்பதற்குப் பொருளெனின், மற் றைய தூல காரணமிரண்டையும் நானன்றென விவகரி

க்கின்றனமா? இங்ஙனமே காரணோபாதியைக்கொள்ளினும், இத்தோஷம் அதற்கும் வாய்க்குமன்றோ? மூன்றனு ளொன்றைச் சொல்லின், தோடத்துக் குட்படவேண்டியதாகின்றதென மூன்றுபாதி நானுமே, நானென்பதற்குப் பொருளாகின்றன வென்னலாமா? அங்ஙனஞ் சொல்வதற் காட்சேப மியாதெனின், மூன்றுவித நானிருந்து விவகரிப்பதாக யாருக்கேனு மநுபவமுளதா? அன்றியும், தூலோபாதியுள்ள ஞான்று சூக்குமகாரணோபாதிக ளிரண்டு மில்லாமலும்; சூக்குமோபாதியுள்ள ஞான்று, தூல, காரணோபாதிக ளிரண்டுமில்லாமலும், காரணோபாதி யுள்ளஞான்று தூல, சூக்குமோபாதிக ளிரண்டுமில்லாமலும் இங்ஙனம் ஒன்றில் மற்றொன்றில்லையெனும் அந்நியோந்நியா பாவத்தை யெய்துகின்றனவே. இவைகளபாவத்தையெய்தினும், அறிவாகிய நானென்பது அபாவத்தை யெய்துகின்றதா? உபாதிகடோறும் நான், நானென பாவமுற்றிருக்கின்றதன்றோ?

நானென்பது மூன்றுபாதிகளினு மிருக்கின்றதாயினும் அவ்வவ்வுபாதிகளிலும் ஒருநானே வெவ்வேறு நானாயிருந்துவிவகரிக்கின்றதெனின், அங்ஙனம் வேறுவேறாயிருக்கும் நானென்பதி லெந்தநான் நானென்பதற்குப் பொருள்படும்? அன்றியும், அறிவாகிய நானென்பது அவத்தைகடோறு மொவ்வோருபாதியையும் நான், நானென மருவி விவகரிப்பானேன்? அங்ஙனம் மருவாவிடில் சர்வ கிருத்தியங்களும் நிறைவேறிக்கொண்டு வருவ தெங்ஙனமெனின்,

இதனுல் சர்வ கிருத்தியங்களு முபாதியைமருவிய நானெ ன்பதனுல் நிறைவேறவேண்டிய தவசியமோ? அங்ஙனம் சர்வகிருத்தியங்களையும் நானென்பது நிறைவேற்றிக்கொண் டுவருவது யாதுக்காக? அவ்வக் கிருத்தியங்களுக்குந் தக்க பயன்களை யநுபவித்துக்கொண்டு வருவதற்காகவெனின்? அப்பயன்களை யநுபவிக்குங்காறும் தான் என்னென்ன நா னுயிருந் தநுபவிக்கின்றது? அவ்வப் பயன்களுக்கியைந்த உபாதி நானுயிருந் தநுபவிக்கின்றதெனின், அங்ஙன மிருக் கின் அவற்று ளெந்தநான் அறிவானுக்கு நிலையுள்ளது? எந்த நானும் நிலையுற்றிராமல் மாறி மாறிப்போகின்றனவே. இங்ஙனம் நிலையற்ற நானென்பதனுல் வரக்கூடிய பயன்க ளும் நிலையற்றனவன்ருே? இந்நிலையற்றபயன்களுக்காகப் பாடுபடுகிறதற்குத்தானே சொந்தநானென்பது அனுத்து ணையுமின்றி நிலையற்ற அந்நியநானுயிருந்து விவகரிக்கின் றது? இதற்காகவன்ருே,

"நில்லாத வற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை."

என்று திருக்குறளின்கண் நிலையாமை யென்கிற வதிகாரத் தில் ஓரரிய மகாவாக்கியம் பிறந்திருக்கின்றது? அன்றியும், நிலையற்றிருக்கும்அந்நியநானை மருவிமருவி நானென்பதற்கு ப்பொருள் தோன்ருமலும், நிலையற்ற பயன்களைப்பெற்றுப் பின்னர் துக்கமுற்றும், இங்ஙனம் முழுதும் மோசம் போய் விட்டிருப்பது என்ன அவிவேகமெனப்படும்? இஃதறிவு

டையோர்களுக்கு மிகவும் நகைப்பைத் தருதற்பாலதாயிரு க்குமன்றோ? இங்ஙனமாகிய அவிவேகத்தைப்பற்றி யுண் டாகும் நகைப்புக்கு ஸ்தானம் வாக்கேந்திரியமாயிருக்கலா மா?குதேந்திரியம் போதாதோ? ஆ!ஆ!! நன்று! நன்று!! அதி னும் மிகவும் நன்று! அன்றியும், ஷை கிருத்தியங்கள் பல வற்றையும், அந்நியநாளுகவிருந்துதான் இயற்றவேண்டுமோ? சொந்தநாளுகவிருந் தியற்றக்கூடாதோ? கூடாதெனின், சுகர், வியாசர், வாமதேவர், சடபரதர், வசிட்டர், சடகோ பர், ஸ்ரீகண்ணர், சமயகுரவராகிய சம்பந்தர் முதலிய அநே கங்கண்ணுடையவர்களுஞ் சொந்தநாளுயில்லாது, அந்நிய நாளுக விருந்துதானோ இலௌகீக வொழுக்கத்தையும்,வை தீகவொழுக்கத்தையும் நிறைவேற்றிக்கொண்டு வந்தார்கள்?

அன்றியும், நிலையாமையாயும், கற்பனையாயுமிருக்கின்ற அந்நிய நாளுயிருப்பது அறியாமையா? அன்றி யறிவுடை மையா? அறிவுடைமையென மூடர்களன்றி விவேகிகளுள் யார்தானேற்பார்கள்? ஒருவரும் ஏலாராகலின், அஃதறியா மையென்பதற்குக் கிஞ்சித்தும் ஐயமென்ப தின்றென்க. நானென்பதல்லாத கற்பனைகளை நான்நானென மருண்டி ருக்கு ஞான்று சகல அறங்களையு மியற்றுதற்குக் கூடு மானதாயிருக்க அதிஷ்டானமாயும், நிலையுள்ளதாயு மிரு க்கின்ற தன்னை நானெனத் தெருண்டிருக்கு ஞான்று ஷை அறங்களை ஏனியற்றக்கூடாது? மருண்ட ஞான்றுதான் கிருத்தியங்களை யியற்றக்கூடுமெனின், ஷை சுகராதியோர்

மருண்ட ஞான்றுதானே அறமாதிகளை யியற்றிக்கொண் டிருந்தார்கள்? அங்ஙனமாயின், அவர்களு மஞ்ஞானியரெ னப்படுவார்களே. இங்ஙனமவர்களை அஞ்ஞானியரெனக் கூறியதனால் வரக்கூடிய மகத்தாகியதீயகருமத்தை யெங்கே போயொழிக்கின்றது? அயலாகாரமாகிய மருட்டிசைக்கண் பிரவிர்த்தி யிருக்கின்றபடியினால் கிருத்தியங்க ளியங்கும். ததாகாரமாகிய தெருட்டிசைக்கண் பிரவிர்த்தி யென்னும் புடைபெயர்ச்சி கிஞ்சித்தேனு மிருந்தாலன்றோ, அதற்கி யைந்தபடி கிஞ்சித்தேனுங் கிருத்தியங்கள் நிகழும்? புடை பெயர்ச்சியே யில்லையாதலின் கிருத்தியங்கள் நிகழாவே யெனின், அங்ஙனம் நிகழாதென்பதும் உண்மையேயாயி னும் ஒவ்வொருவரும் பிராரத்துவ கன்மத்தை யநுபவித் துக்கழிக்குமாறு, ததாகாரப்பட்டவர்களும், மேல்சனனத் துக்குரிய கன்மமில்லையாயினும் இஞ்ஞான்றெடுத்திருக்கும் சனனமிருக்குங்காறும் அநுபவித்தற்கு எஞ்சியிருக்குந் தத் தமது பிராரத்துவத்தை யநுபவித்துக் கழிக்கவேண்டுமென் றோ? அவர்க ளெங்ஙன மநுபவித்துக்கழிப்பார்களெனின், இச்சித்தும், இச்சியாமலும், பிறர்கருத்துக்கிசைந்துங் கிருத்தியங்களைப் புரிந்து புரிந்து அதனால் வரும்பயன்களை யநுபவித் தநுபவித்துத் தொலைப்பதனாலென்க.

இங்ஙனந் தொலைக்கப்பட்ட பிராரத்துவத்தில் தானே இச்சித்து, அதாவது புத்தி பூர்வமாக வோர் காரியத்தை யியற்றி அதனால்வரும்பயனை யநுபவித்தல் இச்சா பிராரத் துவமென்றும், இச்சிக்காமலே அதாவது அபுத்திபூர்வமாக

வோர்காரியத்தையியற்றி அதனுல்வரும்பயனை யநுபவித்தல் அநிச்சாபிராரத்துவ மென்றும், பிறரது கருத்துக்கிசைந்து ஓர்காரியத்தை யியற்றி அதனுல்வரும்பயனை யநுபவித்தல் பரவிச்சாபிராரத்துவ மென்றுஞ் சொல்லப்படும். இங்ஙன மநுபவிக்காவிடின் அப்பிராரத்துவம் எங்ஙனங் கழிந்து போம்? ஆதலின், பிராரத்துவ நசிப்புக்காகப் பரமாத்ம சொரூபிகளாயிருக்கும் அவர்களுக்குங் கிருத்தியங்கள் வேண்டுமென்க.

அன்றியும் அப்பரமாத்மாக்களுக்குக் கிருத்தியங்க ளநேகமாக அற்றிருக்குமென்க. அதாவது அவர்களுற்றிருக் கும்படியான சொரூபசமாதி, சகசசமாதியென்னு மிவ்விர ண்டில், சொரூப சமாதியாவது, அகத்தின்கண் விளங்கும் அறிவறியாமை கற்பனைகளுக் கெல்லாம் சாட்சியாயும், அக் கற்பனைகளால் மறைக்கப்பட்டு அணுவுக்கும் அணுபோன் றிருக்குந் தன்னைச் சிற்பிரகாசமாய் தரிசித்தலென்க. இச் சமாதிக்கண் மனோவிர்த்தியானது அற்றிருக்குமாதலால் அவ்விர்த்தியால் விளையக்கூடிய கிருத்தியங்களு மற்றிருக் கும். இரண்டாவதாகிய சகச சமாதியாவது, புறத்தின் கண் விளங்கும் அறிவறியாமைகட் கெல்லாம் சாட்சியாயும், மகத்துக்கு மகத்தாயும் விளங்குந் தன்னைச் சுயம்பிரகாச சைதன்னியமாய் அகண்டாகாரமாய்த் தரிசித்தலென்க. இச்சமாதிக்கண்ணும் மனோவிர்த்தியானது அற்றிருக்கு மாதலால் கிரியைகளு மற்றிருக்கும். ஆயினும், இச்சமாதி

கலையுஞான்று மனோவிர்த்தியானது உண்டாகி அதனல் கிருத்தியங்கள் புரிவதற் கேதுவாயிருக்கும். ஆனல் அச் சொரூபாநுபவிகளுக்குத் திரிசியங்கள் தோன்றினும் அவற் றை "மதுரமாங் கட்டி சுட்ட மாப்பணி யார மெல்லாம் மதுரமாக் கியவ தற்கு மதுரந்தான் சுபாவ மன்றோ, வது விது வெனுஞ்சடங்க ளறிவாக வறிவைத் தந்தே, யதுவிது விரண்டுமாகா வகம்பொரு ளறிவாய் நீயே." என்று கைவல் லியங் கூறுகின்றபடி தற்பிரகாசத்தினல் கரைத்துத் தற் சொரூபமாயுந் தானே சர்வத்தினு மிருக்குஞ் சர்வாந்தரி யாமியாயும், சம்பந்தமின்றியுணருஞ் சர்வசாட்சியாயுந் தரி சித்துக் கொண்டிருப்பார்கள். என்னை,

### திருக்கு திரிசிய விவேகம்.

தன்னிலனைத் துங்காணல் தன்னையனைத் திற்காணல்
தன்னைவே ருக்காணல் தானனைத்தாய்த்—துன்னி
விளங்கிச்சும் மாவிருத்தல் வேதாதிக் கொத்தல்
துளக்கமிலா மைத்தன் ஞெழில்,

என்று கூறியதையு முணர்க.

ஷ சொரூபாநுபவிகள் கற்பனைகளனைத்துந் தத்தந் திருஷ்டியிற்படாது நிலைத்திருப்பவர்களாதலின் அக்கற்பனை களைத் தம்பால் விவர்த்தமாயுள்ள ஆதேயமாகவுந், தாமவை கட்கு விவர்த்தவாதாரமாகவுமாய் விளங்கிக்கொண்டிருப்பா ர்கள். இங்ஙனம் ஆதார வாதேயமிரண்டையு மொருங்கே யுணரக்கூடிய விவர்கள் எக்கிருத்தியங்களைப்புரியினு மக்கிரு

த்தியங்களால் வரக்கூடியபயன் விடுதிகன்மமாயிருக்குமே யன்றிச் சிறிதும் பந்தகன்மமாயிராதென்க. என்னை,

**சொரூபசாரம்.**

ஏதேது வந்தாலு மேதேது செய்தாலு
மேதேதி லின்புற் றிருந்தாலும் - ஏதேதுந்
தானுகா வண்ணந் தனியே தெரிந்திருக்கும்
ஞானுகா ரந்தானே நாம். எனவும்,

**இதுவுமது.**

வேத விதியை வெறுத்துரையா ருள்ளளவு
மோத லுருக லொழிந்திரார்—சாதல்
மறவார் கருத்திளகி மண்ணுலகில் வாஞ்சை
பிறவார் பிறவாத பேர்.

எனவுங் கூறியிருப்பதையு முணர்க

இதுநிற்க, முன்ஞான்று தனக்குத் தன்னை யளிக்கவேடுமென்பதைக் கவனித்தற்குத் தீர்க்கையின்றெனவும், யாதொரு கிருத்தியமுமின்றி வாளாவிருப்பவர்கள் மாத்திரந் த்ான் கவனிக்கக்கூடும். நாம் கவனித்தற் கத்துணை வாளாவிருப்பவர்களாவெனவும் வினுவியதால், மற்றெவைகளைச்செய்வதற்கு மாத்திரம் நமக்குத் தீர்க்கை யிருக்கின்றது? தேகாதிபிரபஞ்சத்தைப் பார்த்துக்கொண்டிருப்பதற்கு மாத்திரம் தீர்க்கையிருக்கின்றதாக்கும்! அங்ஙனம்பார்ப்பதும், அததுவும் எப்படி, யெப்படித் தோற்றுகின்றதோ அப்படி,யப்படியே பார்த்துக்கொண்டிருக்கின்றதா? அன்றி வேறுவிதமா

கப் பார்த்துக்கொண்டிருக்கின்றதா?வேறுவிதமாகப்பார்ப்ப தெங்ஙனம்? கடமாகத்தோன்றினுல் படமாகவும், படமாகத் தோன்றினுல் கடமாகவும் பார்ப்பதா? அங்ஙனமின்றித் தோற்றும்வண்ண மப்படி, யப்படியே தான் பார்த்துக்கொண்டிருப்பதெனின்,

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறி"வென வாக்கியம் பிறந்திருப்பானேன்?

தோற்றுவனவெல்லா முண்மைப் பொருள்களாயின் அப்படிக்காண்பதறிவெனப் பிறந்திருக்குமன்றோ? உண்மைப்பொருள்களன்றிக் கற்பனையாக விருப்பதனுலன்றோ "மெய்ப்பொருள்காண்பதறிவு" என ஷை வாக்கியங்கூறுகின்றது?, அன்றியும், கடத்தைக்கடமாகவும், படத்தைப் படமாகவுமே பார்த்துக்கொண்டிருப்பதென்று கூறினமையால், முன்ஞான்று கடமென்பதற்குரிய பொருளின்னதெனவும், படமென்பதற்குரிய பொருளின்னதெனவும் விசாரித்துப் பின்ஞான்று அவற்றை யங்ஙனமே பார்க்கின்றனமாவென விசாரிக்குதும். கடம்கடமென வழங்கப்படுவது பொருளா? குணமா? பொருள்தானெனின், காரணப்பொருளா? காரியப்பொருளா? காரியப்பொருளெனின், அதற்குக் காரணமென்பது யாதெனப்படும்? மண்ணெனின், இதனுல், மண் காரணப்பொருளெனவும், கடம் காரியப்பொருளெனவுமாகின்றன. இங்ஙனமாயின், காரியப்பொருளாகிய

கடமென்பது எஞ்ஞான்று முள்ளதா? அன்றி ஓர்ஞான்றுள்ளதா? எஞ்ஞான்றுமே யுள்ளதெனின், மண்ணனது அடிசிறுத்து, இடைபெருத்து, வாயகன்றிராநின்ற வோர் விதவடிவமாக வுருப்படுதற்கு முன்ஞான்றும்; அவ்வடிவங்கலைந்த பின்ஞான்றுங் கடமென்பதுண்டா? இன்றன்றோ? இருப்பது மண்ணன்றோ? பின்னரெஞ்ஞான்று கடமிருப்பதாகக் கொள்வது? இடைஞான்றெனின், அவ்விடைஞான்றும், மண்ணென்பதில்லாது போயிற்றோ? இருக்கின்றதெனின், மண்ணிருக்குஞான்று கடமெங்ஙன மிருக்கக்கூடும்? இருக்குமாயின், ஒருபொரு ளிருக்குஞான்று மற்றோர்பொரு ளொரோவிடத்தி லிராதென்பதற்கு விருத்தமாய் முடியுமன்றோ? ஆதலின், கடமென்பது எஞ்ஞான்றும் பொருளென்ப தன்றென முடிகின்றதே. கடமென்பதின்றாயின் விவகாரத்திற்குப் பயன்படுமோவெனின், கடமெனப் பற்றி விவகரிக்குஞான்றும் நமது பிடிக்ககப்படுவது யாது? கடமா? அல்லவே, மண்ணென்பதன்றோ? கடமென்பதெங்கே? அது பொருளாயிருந்தால் நாம் பிடித்தஞான்று அப்பிடிக் ககப்படுமன்றோ? ஆதலின்காரணமாகியமண்ணென்பதே யெஞ்ஞான்றுமுள்ள பொருளெனவும், காரியமாகிய கடமென்பது முன்ஞான்றும் பின்ஞான்றுமின்றி, இடைஞான்றுமாத்திர முள்ளதுபோல் காணப்படும் (தோற்றன்மாத்திரக்) கற்பனையெனவும் படுகின்றனவென்க. இங்ஙனமே படமென்பதும், தோற்றன்மாத்திரக் கற்பனையென்றாகி அதன் காரணமாகிய நூலென்பது யதார்த்தமாக

முடிகின்றது. கடபடங்களின் நிலைமை யிங்ஙனமிருக்க அவைபொருளா யிருக்கின்றனவெனவும், அவற்றை யப்படி யப்படியேதான் பார்த்துக்கொண் டிருக்கின்றதெனவுங் கூறியதென்னமடைமை? தேகாதி பிரபஞ்சமு மிங்ஙனமே கற்பனை யென்பதற்கு முரணின்றுதலால் இக்கற்பனைகளை யெல்லாம் யதார்த்தமாகப் பார்த்துக்கொண்டிருப்ப தெத் துணை யறியாமை யெனப்படும்? இவ்வறியாமை யென்பத ற்குட்பட்டுப் பொருளல்லாதவைகளை யெல்லாம் பொருளா கப் பார்த்துக்கொண் டிருப்பதற்கு மாத்திரந் தீர்க்கை யிரு க்கின்றதுபோலும். இதற்காகவன்றோ,

"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணருமரு" ளென்றும் "பொருளலாப் பொருளை நாடும் வெய்யனேன் வெகுளியே" னென்றும் வாக்கியங்கள் பிறந்திருக்கின்றன? அன்றியும்,

அயலாகிய தேகாதி பிரபஞ்சத்தை யறிந்துக்கொண் டிருக்கின்ற அறிவாகிய தாள் யாரென்று யாராவது நிதா னித்ததுண்டா? அயலாயும், அறியாமையாயு மிருக்கின்ற தேகாதி பிரபஞ்சத்தைப் பார்த்துக்கொண் டிருப்பதற்கே நாம் அடிமைப்பட் டிருக்கின்றோமே; நமக்கெங்ஙனந் தான் யாரென நிதானிக்கத் தீர்க்கையிருக்கும்? இதற்குமேல் தன்னைத் தளக்களிக்கவுந் தீர்க்கை யெங்கிருந்துவரும்? ஐயோ விஃதெத்துணை அவிவேகமா யிருக்கின்றது! இங்ங னம் நாமிருப்பதனாலன்றோ நமக்கறிவுறுத்தற்கு,

தன்னைத்தான் தேடாச் சதிகார ரேன்பிறந்தார்
அன்னத்தால் வந்தவுட லார்தாமார்—முன்னம்
விடுத்தவுட லெத்தனையோ மீண்டுமீண் டின்பா
யெடுத்தவுடல் நூறு யிரம்.

எனச் சொரூபசாரத்தின்கண் கூறப்பட்டிருக்கின்றது? இதனைக் கண்ணுறக்கூடாதா? இங்ஙனமறிவுறுத்துகிறவர்களைப் பார்க்கின் க்ஷீணித்துப்போகத்தக்க அழுக்காறும், துவேஷமும் மேலிடுகின்றதன்றோ?

நிற்க ஷை திருவாக்கைக் கண்ணுற்றுச் சற்றாழ்ந்து யோசித்தால் அது தேகாதி பிரபஞ்சம் கற்பனையெனவும், அவற்றை யதார்த்தமாகக்கொண்டுழலுந் துணையுந் தாபத்திரயாக்கினியினால் தகிப்புற்றுத் துன்புறவேண்டியதாயிருக்கின்றதே; இங்ஙனம் நாமேன் அயலைப்பற்றி வதைவுறவேண்டுமென வுன்னி அவற்றின் யதார்த்த நாட்டமகலவும், அறிவாகிய தன்னை விசாரிக்கவுந், தன்னையேதனக்களித்துக்கொண்டிருக்கவுமான வுழைப்பை யெய்தற் கேதுவையுண்டாக்குமன்றோ? இங்ஙனமிருக்க, தன்னைத்தனக்களிக்கவேண்டுவானேனென்ன வினவலாமா? அயலாகிய சக பரங்களினிருப்பும், அவற்றை யுண்மையாகக்கொண்டு திரிவதனால் வருமனர்த்தமும், முன்னொன்றே விசாரிக்கப் பட்டபடியினால், நாமெதனை யெதற்களிக்கின்றது? தன்னையன்றோ? இதனாலன்றோ,

"தன்னால் விளையுஞ் சகசீ வபரந்
தன்னா லழியுந் தனதாம் விழியால்

என்னு லெலீனயென் னிலெனக் கருளும்
மன்னே யடியே னபய மபயம்,"

என்று தத்துவராயர்பாடுதுறையில் கூறப்பட்டிருக்கின்றது? அன்றியும், 'அன்னைபோல அருள்மிகுத்த மன்னுஞானவரதனே, என்னையே எனக்களித்த நின்னையானுநினைவனே' என்று தாயுமானர் கூறியிருக்கின்றதையு மறிக. தனது யதார்த்தசொரூபத்தை யெட்டியெட்டி அதில் நிலைத்திராக் காறுந் துக்கநிவர்த்தியுந், தடையற்ற வானந்தமு மெங்ஙன முண்டாகும்? ஆதலின், தனது சொரூபத்தையெட்டவேண் டியதன்றோ? எட்டவேண்டுந்தானெனின், தன்னைத் தனக் குக் கணந்தோறும் விடாதளித்துக்கொண் டிருந்தாலன்றோ தற்சொரூபநிலைப்பும் வாய்க்கும்? தானெங்ஙன மிருக்கின்ற தாகக்கருதித் தன்னைத் தனக்களிக்கின்றது? சீவப்பொருளா யிருக்கின்றதெனக் கருதி யளிக்கின்றதெனின், சீவனென் பதுபொருள்தானே? ஆமெனின், அஃதோர் தர்மமன்றோ? அன்றெனின், சீவத்துவமென்று வழங்குவதால், துவம், தன்மை, தர்மம், இவைகளெல்லாம் ஒருபொருட் கிளவிக ளாகித் தர்மமெனவே பொருள்படுகின்றதன்றோ? அங்ஙன மன்று, சீவனென்பது பொருளே; அதனிடத்தில் சீவத்துவ மென்கிற தர்ம மிருக்கின்றதெனின், சீவன் சீவனெனவழங் கப்படுவது அறியாமையாகின்ற சடத்திற்கா, அல்லது அறி வாகிறசித்திற்கா? அறிவாகிறசித்திற்கேயெனின், அறிவிற்கு வந்திருக்கின்ற சீவனென்னு மிப்பெயர் வித்தியாதத்துவங் களுளொன்றாகிய காலதத்துவத்தை உயர்திணை யாண்பா

லாக வுருவகப்படுத்திக் காலனென்று வழங்குவதுபோலவா? அன்று? அன்றெனின், அறிவானது சார்போதனைகலின், "அடுத்ததின் தன்மை யான்மா வாகுமென்று" ஆன்றோர் கூறியிருக்கின்றபடி, எவ்வெவ் வுபாதிகள் தன்பால் வந்துவந் தடுக்கின்றனவோ அவ்வவ் வுபாதிகளையும் நான் நானென மருவிமருவிச் சுகதுக்க வசமுற் றிருக்கின்றதன்றோ? இங்ஙனஞ் சுகதுக்கவசமுற்றுச் சீவிக்குங் காரணம்பற்றி அறிவிற்குச் சீவனெனக் காரணப்பெயர் வந்திருக்கின்றதன்றோ? சுகதுக்க வசமுற்றுச் சீவித்தலாகிய விது தர்மமன்றோ? அன்றியும்,

அறிவான் இங்ஙனஞ் சீவிக்குங்காரணம்பற்றி யுபாதிகளைத் தழுவாவிடத்துச் சீவனென்கிற அப்பெயரை யேற்பதற்கு ஞாயமின்றன்றோ? எங்ஙனமெனின், ஒரு புருடன் மற்றொருவனை யெதிர்த்து அவனைக்கொன்றகாரணத்தால் அவ்வவசரத்துக் கொலைஞனெனப்படினும் மற்றப்படியவன் கொலைஞனென வழங்கப்படாதவாறென்க. அன்றியும், சமாதிகூடி நிலைத்திருக்குஞான்று ஆங்கு உபாதிமுதலியவைகளைச் சாராது அறிவு மாத்திரமாயிருக்கின்றமையினால் சீவனென்கிற பெயரை யறிவானது ஏற்குமா? ஏற்காதன்றோ? ஆதலின் அந்நிலையில் அறிவை யாதெனச் சொல்ல வேண்டும்? தானே தானாகிய அகம்பொருளென்று சொல்ல வேண்டுமன்றோ? இங்ஙனம் சோபாதிகம் அதாவது உபாதி சகிதமாயிருக்கும் ஆரோபலட்சியாநுபவமும், நிருபாதிகம், அதாவது உபாதிரகிதமாயிருக்கும் அதிஷ்டானலட்சியாநு

பவமுமாக விரண்டுநிலை யேற்பட்டிருக்க, இவ்விரண்டவ சரத்திலும் அறிவானைச் சீவனென்றே வழங்கலாமா? அன்றியும் இவ்விரண்டு மறிவாகிய தன்னைத்தவிர விருக்கின்றனவா? இன்றெனின், அறிவாகிய தானெனப்படுகின்றனவா? அன்றெனின், இங்ஙனம், சோபாதிகம், நிருபாதிகமாகிய விரண்டும் அறிவாகிய தன்னையன்றி யின்றாகவுந், தானவைகளன்றாகவு மிருக்கின்றதால் அறிவாகியதான் என்னவெனப்படும்? சாக்ஷிசைதன்ய மெனப்படுமன்றோ? அன்றியும், சோபாதிகமென்பது, உருப்படல், வெளிப்படல், வளர்தல், மோகித்தல், குன்றுதல், பிணமாதல் ஆகிய இச்சட்பாவவிகாரமாயுள்ள உபாதி நாலுகைவிருந்து நிகழ்கின்றதனால், இது பொருளல்லவற்றைப் பொருளென் றுணரும் மருள்திசையா? அன்றிப்பொருளைப் பொருளாகவுணருந் தெருள்திசையா? மருள்திசையாதலால், இத்திசையுள்ளளவும், நாம் சீவனெனப்படுகின்றன மல்லவா? இம்மருள் திசைக்கண், நமக்கு சீவனென்பதுபெயராகுமாயின், சமாதிகூடித் ததாகாரமாய் விளங்குந் தெருள்திசைக்கண் என்னபெயரிருக்கவேண்டும்? ஆங்கு சீவனென்கிற பெயருண்டா? உண்டெனின், தத்துவங்களனைத்தையும் அன்றெனவு, மின்றெனவு முடியுமாறு ஆராய்ந்தாராய்ந்து கழித்துக் கழித்துச் சென்று நிருபாதிகமாகிய நிலையைத் தேடுவானேன்? அங்ஙனந் தெளிந்திருக்குஞான்று நாம் துண்டு, துண்டாகத்தானிருக்கின்றோமோ? துண்டு, துண்டாவது யாதெனின், அவ்வத் தேகத்துணைக் கண்டப்பட் டிருத்தலென்க. அங்ஙன

மிருப்பதும் இம்மருள் திசையிலன்றோ? சாக்கிராவத்தையில் எத்துணைச் சேய்மை கண்டத்துவமாக ஆரோபப்பட்டிருக்கின்றனமோ, அத்துணைச் சேய்மையும் நாம் அத்தியாசமாகச் சீவித்து வரவேண்டுமென்றோ? எங்ஙனமெனின்,

சொப்பனத்தின்கண் அத்தியாசமாகச் சுகதுக்கமநுபவித்துச் சீவிப்பதுபோ லென்க. சொப்பனத்தின்கண் சீவிப்பதுதா னத்தியாசமாகும்; சாக்கிரத்தின்கண் சீவிப்பதெங்ஙன மத்தியாச மாகுமெனின், சீவிப்பதற் கேதுவாயுள்ள வுபாதிகள் தோற்றன்மாத்திரக் கற்பனைகளெனப் படா திருக்கட்டும். கற்பனையாகின்றன வாதலின் அவ்வவ்வுபாதித்துணை நான்,நானென்றிருத்தலுங் கற்பனையன்றோ? இவ்விருநிலையுங் கற்பனையாயிருக்கச்சீவிப்பதுமாத்திரமேன் கற்பனை யெனப்படாது? கற்பனை யாதலால் இதுகாரணமாக வந்திருக்குஞ் சீவனென்கிற பெயருங் கற்பனையென்பதற் காட்சேப மியாதுளது? யாதுமின்றாதலால் இச்சீவன் வேதாதி கலைகளாலும், ஆன்றோராலும் சிதாபாசனென்று சொல்லப்படுகின்றதென்க. சிதாபாசனென்றால் பொருளென்னவெனின், சித்து அல்லது அறிவினது ஆபாசனெனவும், ஆபாச அறிவானெனவும் பொருளாகின்றதென்க. எங்ஙனமெனின், அறிவானது தானேதானாக (ச்சுயம்பிரகாசசைதன்னியமாய்) நிலைத்திராமல், கற்பனையாய் உபாதியாதியைத் தழுவிச் சார்போதனாகிச் சுகதுக்க வசமுற்றுழலுவதுபோ லிருத்தலாலென்க.

இங்ஙனமாகிய சீவத்துவம், அல்லது சீவதர்மத்தைச் சீவன், சீவனென உயர்திணையாண்பாற் பெயர்கொடுத்து உபசாரத்தினால் கூறியிருக்க இதனையறியாமல், சீவனென்பது பொருள்தானென்று மயங்கிக்கூறித்திரிவது எத்துணை மடமையாகும்? அன்றியும் சீவனென வழங்கப்படுவது உருவப்பொருளா? அருவப்பொருளா? அருவப்பொருளெனின், எங்ஙனமருவப் பொருளெனப்படும்? உருவமென்பது, இந்திரியத்திற்கு விஷயமாகின்ற நாமரூபங்களாயும், சடங்களாயு மிருக்கின்றதாயின், அருவமென்பது இவற்றிற் கெதிர்மறையா யிருக்கின்றதன்றோ? எங்ஙனமெனின், நாமரூபமற்றது சூனியமெனப் படுமன்றோ? அங்ஙனமன்று; சித்துருவாயிருக்கும் அருவப்பொருளெனின், அவ்வருவமாகிய சித்துப்பொருள் எத்துணையாயிருக்கின்றது? உபாதித்துணையாயிருக்கின்றதெனின், எழுவகைப் பிறவிப்பேதங்களாயுள்ள வுபாதிகளில் எந்தவுபாதித்துணையாயிருக்கின்றது? அவ்வவ்வுபாதித்துணையாயு மிருக்கின்றதெனின், உபாதிகளிலொன்றேனும் ஷெ அருவத்தை யுள்ளும், புறம்புமேலாது ஒவ்வோர் முதலாயிருக்கட்டும்? இன்முதலால் இங்ஙனந் தோற்றன்மாத்திரமாகவிருந்து நாசமெய்தற்கேற்ற வுபாதித்துணையாகவா அருவமென்று கூறப்பட்ட சீவனிருக்கின்றது? அன்றியும்,

திங்கள்தோறும் ஒவ்வோரளவாயிருக்கின்ற உபாதிகளுக்கியைந்த சுயவளவு யாதெனப்படும்? இங்ஙனம் உபாதிகளே வளர்தல், குன்றலாயும், ஒன்றுக்கொன்று சிறிது,

பெரிதாயும், முதற்பொருளல்லனவாயும், கண்டத்துவமாயு மிருக்க, இவ்வுபாதித்துணைச் சீவஅருவமென்பதெங்ஙனங் கண்டத்துவமுற்றிருக்கும்? ஆகாயமாகிய அருவம் எவ்வுபாதித்துணையாகவாவது கண்டிக்கப்பட்டிருக்கின்றதா? இன்றன்றே? இச்சீவஅருவமாத்திர மெங்ஙனங் கண்டத்துவத்தையெய்தும்? பின்னரெங்ஙன மிருப்பதாகக் கொள்ளுவதெனின், கடாகாயமாகிய அருவம் கடத்துணை கண்டிக்கப்பட்டிருப்பதாகத் திருஷ்டிமயக்கத்தால்தோன்றுவதுபோல, சீவஅருவமும் உபாதித்துணை கண்டிக்கப்பட்டதாகத் தோன்றுகின்றது மாத்திரமேயன்றி யுண்மையிலங்ஙன மின்றெனக்கொள்ளவேண்டு மென்க.

சீவனென்பது அருவமாயுங், கண்டத்துவமாயு மிருப்பதாகக்கொள்ளுவதில் இத்துணைத்தோட்ங்க ளிருக்கின்றமையினுல் அஃதென்னபொருளென்று சொல்லப்படும்? சிற்றறிவும், சிறுதொழிலுமாயிருக்கும் பொருளெனின், இவ்விரண்டும் புடைபெயர்ச்சியாகலான் இவைகளெந்த முதலினையுடையன? இவைகட்கோர் முதல்வேண்டிய தவசியமன்றே? அம்முதல் யாதெனப்படும்? அறிவாகிய அகம்பொருளன்றே? அவ்வகம்பொருள் சிற்றறிவுஞ், சிறுதொழிலுமாகத்தானிருக்கின்றதோ? அங்ஙனமிருப்பதாயின் சமாதிக்கண் சகலகற்பனைகளையுஞ் சர்வசாக்ஷியா யிருந்தினரும் பேரறிவுடையதாயும், அச்சகலகற்பனைகளுந் தனது சொரூபமாகுமாறு கரைத்துக், கரைத்திலங்கும் பெருந்தொழிலுடையதாயு மில்லாதிருக்கட்டும். இங்ஙனமிருக்கச், சிற்றறி

வுஞ், சிறுதொழிலுமா யிருக்கின்றதென்பதற்குப் பொருத்தமெங்குளது? இன்றாதலின், கண்டத்துவமா யிருக்கின்றவுபாதித்துணை அறிவாகிய தானுங் கண்டத்துவ முற்றிருப்பதாக மயங்கியவதனால் இவ்வாரோபதிசைக்கண் சிற்றறிவுஞ் சிறுதொழிலுமுடையதுபோ லிருக்கவேண்டியதே. இதனால் சீவனென்கிற பெயர் வந்திருக்கின்றதென்பதற்கும் முரணின்று. நிருபாதிகமாயும், அகண்டமாயுமிருக்கின்ற அதிஷ்டானதிசைக்கண் சிற்றறிவுஞ், சிறுதொழிலுமா யிருக்கின்றதெனக் கூறியதென்னை? ஆங்கு சீவனென்கிற பெயருமுண்டா? இன்றாதலி னென்னவென்று கூறவேண்டும்? ஆன்மாவென்று கூறவேண்டுமன்றோ?

ஆன்மாவெனினும், சிவமெனினும், பிரமமெனினுமொரேபொருளாதலால், ஆன்மாவென்று கூறுவதோடு சிவமென்றும், பிரமமென்றுங் கூறலாமன்றோ? ஆன்மாவென்றுமாத்திரங் கூறலாமேயன்றிச் சிவமென்றாவது, பிரமமென்றாவது கூறுவதற்கு ஞாயமென்னை? இன்றாகலின் சிவம், அல்லது பிரமமென்று கூறப்படுகின்ற பரம்பொருளானது ஆன்மாவாகுமாவெனின், சிவமென்பது ஆன்மாவாகிய அறிவாகாத பட்சத்தில் ஆன்மாவுக்கு அநான்மா எஞ்ஞான்றும் எதிர்மறையாகலின், அச்சிவமும் அநான்மாவென்றாகின்றது. அநான்மாவென்றால், சடமென்பது பொருளாதலின், சிவத்தைச்சடமென்று கூறவேண்டியதாகின்றதே! இங்ஙனம் அது சடமாயின், தன்னையு மற்றொன்றையு மறியாதுபோவதோடு

காரியமாயும்முடிகின்றதே!காரியமானவிது உற்பத்தியுடைய தென்றும், அவ்வுற்பத்திக்கு முன்னொன்றும், (காரிய)நாசத் திற்குப் பின்னொன்று மில்லாததென்றும்,இதனாலஃது அநித் தியமென்று மேற்படுகின்றதே! அன்றியுங் காரியப்படுவ தெல்லாங் கண்டத்துவமா யிருக்கு மாதலால் சிவமென்ப தும் கண்டத்துவமாகவிருப்பதாக வேற்படுகின்றதே! சிவம், அல்லது பிரமமென்பது ஆன்மாவாகாத பக்ஷத்தில் இத்தி யாதி தோடங்களை யெய்துகின்றதே! இங்ஙனமாய தோட ங்களைச் சிவத்தின்பேரி லேற்றிவைப்பதற்குத்தானோ அஃ தான்மாவன்றென்று கூறியது? நன்று! நன்று!! இவற்றைச் சற்று யோசித்தா லங்ஙனங் கூறுவதற்கு நாவெழாதன் றோ? அன்றியும் சிவமென்பது ஆன்மாவென்பதற்கு ஆன் றோர்களால் கூறப்பட்ட பிரமாணங்களுமநந்தமிருக்கின்றன வாதலால் அவற்றுட் சிலமாத்திரம் ஈங்குவரைவாம், என்னை,

சூதசங்கீதை.

மேவரு மறைக ளத்து விதமென விளம்பு மச்சொற்
றுவரும் பொருள்வே றன்மை தானென வுரைப்ப ரற்றற்
சீவர்கள் பலருந் தானாய் நிற்பனந் தேவ தேவன்
பாவனை துவிதங் கொள்ளிற் பவமொழி யாது நாளும்.

என்றும்,

ரிபுகீதை.

சருவபரி பூரணமா மான்மா வன்றிச்
சகசீவன் முதலியவை யணுவு மில்லை

பரவுசக சீவபர மனைத்து மென்றும்
பராற்பரமாம் பரமான்ம சொரூப மேயாந்
திரமதுவா யுரைசெய்த விவ்வர்த் தத்திற்
றினையளவு மையமிலைச் சந்தி யந்தா
னுரைதருமிவ் வர்த்தத்தை யொருக்கா லேனு
முரமாகக் கேட்டுணர்வோன் பிரம மாவன்.

என்றுங் கூறப்பட்டுள்ள திருச்செய்யுள்களால் சிவமென்பது ஆன்மாவெனக் கூறுவதற் காட்சேபமியாது? யாதுமின்றுதலால் நிருபாதிகமாகிய அதிஷ்டானதிசைக்கண் விளங்கும் ஆன்மா சிவமேயாமென்க.

இங்ஙனமாகிய ஆன்மா யதார்த்தமாயும், சர்வ சாட்சியாயுமிருக்கும் பொருளாகின்றதனால் அவ்வான்மாவின்கண் கற்பனையாயிருக்குஞ் சீவனென்பதுசொன்மாத்திரமாயிருக்கின்றதன்றோ? எங்ஙனமெனின், கடபடங்களை விசாரிக்குஞான்று மண்ணும், நூலும் யதார்த்தப்பொருள்களாயும், கடபடங்கள் சொன்மாத்திரக்கற் பனையாயுமுடிக்கின்றது போலென்க. அன்றியும், கடபடங்கள் மட்பொருளையும் நூற்பொருளையுமன்றி யில்லாண்மையும், இல்லாமையாகின்ற விவ்விரண்டும் ஷை மட்பொருள், நூற்பொருளல்லாமையுமாயிருக்கின்றன. இங்ஙனமே சீவனென்பது ஆன்மசொரூபத்தையுன்றி யின்றெனவும், அவ்வான்ம சொரூபமன்றெனவும் படுகின்றது. அன்றியும் இச்சீவன் கற்பனையென்றும் அஃதான்மாவைத்தவிர இன்றென்றுங் கூறியிருப்பதற்குதாரணமாக,

ஞான வாசிட்டம்.

சீவனென்கின்ற சொல்லும் பொருளுமாய்ச் செறிந்த வான்
பாவனை மனனத் தாலே பருத்தெழு மனம தாகும் [மா
மேவரும் பிரமந் தன்னில் வேலையி லலைபோல் வந்து
தாவுறுமுள்ளந்தானே நினைந்தவாசகங்கற்பிக்கும், என்றும்,

இதுவுமது.

சீவனைவ் வறிவி னாலே தெரிவுறு மதுப தார்த்தந்
தர்வுறும் விவித மான சங்கற்ப விகற்ப முற்று
மேவிய மயக்கந் தன்னால் விரிந்தநீ ரலையா மாபோல்
பூவல யங்க ளாகிப் பொலிந்தது புகன்றசீவன்.

என்றுங் கூறியவாற்றாற் காண்க.

அன்றியும், அச்செய்யுட்களில்சர்வசாட்சியாயும், வியாபகமாயுமிருக்குமான்மசொரூபத்தின்கண், கற்பனையாய் நிகழ்கின்ற சீவனது சங்கற்பமாகிய * விர்த்தியினாலேயே சமுத்திரத்தின்கண் அலையெழுச்சியினால் நுரை, திவலையாதி

* விஷயங்களின்மேல் பிரவேசமுற்று அவற்றையுணர்வதற்குண்டாகும் அந்தக்கரணத்தின் மாறுபாடே விர்த்தி யெனப்படும். அது சமுத்திரத்தின்கண் மாறிமாறியுண்டாகின்ற அலையைப்போல சீவசைதன்யத்தின்கண் பரிணாம வடிவமாயுண்டாகின்றது. அன்றியும் ஒருஏரியின்கணின்றும் நீரானது மதகு வழியாய்ப் புறப்பட்டு வாய்க்கால் வழிசென்று வயலாகாரமாக விரிகின்றது போலச், சீவசைதன்யத்தினின்றும் சங்கற்பமாகியவிர்த்தியானது இந்திரியவாயிலாகப்புறப்பட்டு இந்திரியத்திற்கும், விஷயத்திற்குமுண்டாகுஞ் சம்பந்தமென்னும் வாய்க்கால்வழியேசென்று விஷயாகாரமாகப் பரிணமிக்கின்றது. இவ்விர்த்தியானது அந்தக்கரணவிர்த்தியென்றும், அவ்வித்தியாவிர்த்தியென்று மிருவகைப்படும்.

பேதங்கள் தோன்றுமாறு தேகாதிபிரபஞ்சந் தோன்றுகின்றதன்றோ? இதுகாறுமாராய்ந்ததில் சீவனைதுபொருளாகத் தீர்மானிக்கப்பட்டதா? இல்லையன்றோ? வெறுஞ்சொன்மாத்திரக் கற்பனையாயிற்றன்றோ? இங்ஙனமாய சொன்மாத்திரக்கற்பனையையா அறிவாகிய தனக்களிக்கின்றது? தான் அறிவு சொரூபமென்றும், சகல கற்பனைகளையுஞ் சாட்சிமாத்திரமாயிருந்துணருஞ் சிவசொரூபமென்றும், * பிரபலசுருதிகள் கோஷ்டித்துக்கொண்டிருக்க அதனை யுணராது தான் பொருளல்லதைப் பொருளாகவுணர்வதும், ஆராய்ச்சியில் கற்பனைமாத்திரமா யிருக்கின்றதுமான சீவனென்று திடபாவங்கொண்டு விவகரிக்கின்றது எத்துணை மடமையெனப்படும்? இதற்காகவன்றோ,

பிரபுலிங்க லீலை.

தன்னைச் சிவமென் றறிந்தவனே அறிந்தான் தன்னை யுண்மையாய், தன்னைச் சிவமென் றறியாதான் அறியானென்றுந் தன்னுண்மை, தன்னைச் சிவமென் றென்றறிவ னன்றேபாசந் தனைநீப்பன், தன்னைச் சிவமென் றறியாதான் தனக்குப் பிறப்பே துணையாகும். என்றும்,

அத்துவித வுண்மை.

தன்னைச் சீவ னெனத்திரிவாய்த் தானின் றுணர்த லஞ்ஞானம், தன்னைப் பிரம மெனத்துணிவாய்த் தானின் றுணர்

* யுக்தி யநுபவங்களுக் கொத்ததாய் ஆத்மார்த்தத்தை விளக்குங்கலைகளுக்குப் பிரபல சுருதியென்றுபெயர். இதற்குமாறுபட்டதற்கெல்லாம் அற்பசுருதியென்று பெயர்.

த லேஞானம்,முன்னைத் தொடர்ச்சி விடயமது மூல வரவும் வாதனையும், பின்னை யொருங்கே யொழிந்துவிடும் பேணல் விடுத லவைவேண்டா. என்றும்,

ரிபு கீதை.

ஆகமிலா வறிவுருவாம் பிரம நானே
 யநுசூத மானபரப் பிரம நானே
மோகமிலா வறிவுருவாம் பிரம நானே
 முத்தாப ரகிதபரப் பிரம நானே
பாகமிலா வறிவுருவாம் பிரம நானே
 பரிச்சேத ரகிதபரப் பிரம நானே
சோகமிலா வறிவுருவாம் பிரம நானே
 சுயஞ்சோதி யானபரப் பிரமநானே.

என்றுங் கூறுகின்றன? இங்ஙனமிருக்க எஞ்ஞான்றுமுள்ள அறிவென்பதிருந்தபடியே யிருக்கட்டுமே? தனக்குத் தன்னையளிக்கவேண்டுமென்ப தேனென்றும், சீவப்பொருளாக வே மதித்தளிக்கவேண்டுமென்றுங் கூறியது கிஞ்சித்தும் பொருத்தமின்றிப்போயிற்றே, ஆகலின் இங்ஙனங் கூறற்க. இங்ஙனங் கூறவேண்டாமாயின் சாட்சித்துவம் முதலாகிய அரிய விலக்கணங்களையுடையது ஒப்பற்றதாகியபரம்பொருளென்று அறிவுடைமையுள்ள சகல மதத்தரும் நிச்சயஞ் செய்திருக்க அவ்விலக்கணங்களெல்லாம் அறிவாகிய அகம் பொருளினதென்று கூறுவதை யாரேற்பார்கள்? அங்ஙனம் நினைப்பதற்குமனமும், சொல்லுதற்கு நாவுங் கூசுகின்றன

வேயெனின், அவ்விலக்கணங்கள் அகம்பொருளுக்கின்றெனச்சொன்மாத்திரமாகச் சொல்லிக்கொண்டிராமல், அவ்வகம் பொருளின்பா லிருக்கின்றனவா, அன்றாவென யுக்தி அநுபவமாக ஆராய்குதுமே. ஆராய்தலின்கண் அங்ஙனமாக இருக்கும்பட்சத்தி லேற்குதுமே. ஆராய்தற்கும், ஏற்றற்கும் ஆட்சேபமியாதுமின்றாயின் அங்ஙனமே யாகட்டுமெனின், கூறுதும்.

[இதுசாட்சி யிலக்கணம்.]

அகம்பொருளானது சாட்சியாயிருக்கின்றதென்பது முன்னூன்று நாமரூபங்க ளனைத்துங் கற்பனையாகக் கழிக்கப்பட்டனவாயினுந் தோற்றுகின்றனவா? அன்றா? தோற்றுகின்றனவெனின், அங்ஙனந் தோற்றுகின்றவை வேறொன்றுக்கா? அன்றித் தமக்குத் தாமா? தமக்குத்தாமேயெனின், சுழுத்தியவத்தையில் இந்நாமரூபங்க ளுண்டெனப்படுமா? உண்டெனப்படுமெனின், உண்டெனப்படுகின்ற இவைகள் தமக்குத் தாமே தோற்றிக்கொண்டிருக்கலாமே? ஆங்கு இவைகள் தமக்குத் தாமே தோற்றிக்கொண்டிருப்பது உண்மையாயினும், விளங்குகின்றதில்லையெனின், எந்த முதலுக்கு விளங்குகின்றதில்லை? அறிவாகிய நமக்கெனின், நமக்கேன் விளங்குகின்றதில்லை?

கரணேந்திரியங்களாகிய கருவிக்குழாங்க ளின்றாகலினெனின், கரணேந்திரியங்களின்றாயினும் நாமின்றோ? இருக்கின்றோமே. அன்றியும், சாக்கிரசொப்பனாவத்தைகளில் ஷை

நாமரூபங்கள் தமக்குத்தாமே தோற்றிக்கொண்டிருக்கின்றனவென நமக்கு விளங்குகின்றதா? விளங்குகின்றதெனின், ஆங்குமாத்திர மேன்விளங்கவேண்டும்? கரணேந்திரியங்களிருக்கின்றதாலெனின், இது மிகவும் வியக்கத்தக்கதாயிருக்கின்றது! எங்ஙனமெனின், தோற்றிக்கொண்டிருப்பது சடமென்பதும், அறிந்துக்கொண்டிருப்பது சித்தென்பதும் சர்வப்பிரசித்தமன்றோ? ஆமெனின், நாமரூபங்கள் தமக்குத் தாமேதோற்றிக் கொண்டிருக்கின்றன வென்பானேன்? இதனாலவற்றை யறிந்துக்கொண்டிருப்பதும் தோற்றங்களாகிய அவைகளேயென்றாகின்றதே! இங்ஙனந்தோற்றுவதும், அறிவதுமாகிய (ஒளியு மிருளும்போன்ற) மாறுபட்ட இருதர்மங்கள் ஒரேபொருளின்கணிருக்குமா? ஒரேபொருள்தானும் ஷ்டி மாறுபட்ட இருதர்மங்களை யேற்றுக்கொண்டிருக்குமா? இராதே!

நாமரூபங்க ளொன்றென்ப தன்றிப், பலகோடிகளாயிருக்கின்றமையால் அவற்று ளொன்று தோற்றுஞான்று மற்றொன்றறிவதாயும், அம்மற்றொன்று தோற்றுஞான்று இன்னொன்றறிவதாயும் இங்ஙனமே ஒன்றுக்கொன்று தோற்றுவதாயும், ஒன்றையொன் றறிவதாயு மிருக்கின்றனவெனின், பலநாமரூபங்களில் ஒன்றை விசாரிக்குஞான்று அஃதறிவதாக முடிகின்றதா? அன்றித் தோற்றுவதாக முடிகின்றதா? அஃதுஒன்றையறிவதாயும், மற்றொன்றுக்குத் தோற்றுவதாயுமிருக்கின்றதெனின், "சுற்றிச் சுற்றிச் சுங்கன்சாவடி

யிலேயேவந்தா" னென்பதுபோல நாமரூபங்கள் தமக்குத் தாமேதோற்றிக்கொண்டிருக்கின்றனவென்றதனால், அவைகளொவ்வொன்றும் ஒளியுமிருளும்போன்ற மாறுபட்ட அறிவறியாமையாகிற இருதர்மத்தையும் ஏற்கின்றனவென்று கூறியதூஉன்றி, அங்ஙன மின்றெனவும், அவைகள் பலவெனவும், ஒன்றறியுஞான்று மற்றொன்று தோற்றிக்கொண்டிருக்கின்றதெனவுங்கூறி இறுதியில், ஒவ்வொன்றுந் தாம் ஒன்றையறிவதனாலும், மற்றொன்றுக்குத் தாம் தோற்றுவதனாலும் மாறுபட்ட அறிவறியாமைத் தன்மையையே பொருந்தியிருக்கின்றனவென முடித்துவிட்டது மிகவும் நகையாடற்பாலதா யிருக்கின்றதன்றோ? நாமரூபங்கள் தமக்குத் தாமே தோற்றுகின்றனவென்பது இங்ஙனந் தோஷத்துக்கிடமாகின்றமையால் வேறோர் முதலுக்குத் தோற்றுகின்றனவென்றல்லவோ கூறவேண்டும்? அம்முதல் யாதெனப்படும்? அறிவாகிய நாமன்றோ? நாம் எந்த அவத்தைக்கணில்லாமல் அபாவத்தை யெய்துகின்றோம்? சாக்கிரமாதி மூன்றவத்தைக் கண்ணும் பாவமா யிருக்கின்றோமன்றோ? இம்மூன்றவத்தைகளும் சகடக்கால்போல நிலையின்றி மாறிமாறிச்சுழன்றுகொண்டு வருகின்றனவன்றோ? இதனால் ஓரவத்தையுள்ளஞான்று, மற்றீரவத்தையும், அவ்வீரவத்தைகளில் ஒன்றுள்ளஞான்று, ஏனையவீரவத்தைகளுமில்லாமல் அபாவத்தை யெய்துகின்றனவே.

இவ்வத்தைக ளிங்ஙனமாறிமாறி அபாவத்தை யெய்துவதையும், இவைகளை யநுசரித்துத் தோற்றமுபாதியாதி

நாமரூபங்களையும் விடாதறிந்துக்கொண் டிருப்பது யாதெனப்படும்? நாமாகிய அறிவன்றோ? நாமு மவ்வவத்தைகளைப் போல மாறிக்கொண் டிருக்கின்றனமா? இன்றன்றோ? நாமும் மாறிக்கொண்டிருக்கின்றனமென்றால் தோடமென்னையெனின், சாக்கிராவத்தையின்கண் விவகரிக்குஞான்று சொப்பனவத்தையிற்கண்ட காட்சிகளையும், சுழுத்தியவத்தையி லொன்றுமறியாமல் சுகமாயுறங்கினதையுங் கருதுகின்றனமன்றோ? ஆமெனின், அவ்வவ் வவத்தைக்கண்ணும் நாமில்லாது மாறிக்கொண்டிருப்போமாயின் அவ்வவற்றின் இலட்சியாநுபவத்தை யெங்ஙனங்கருதுகிற்போம்? ஆகலின்,நாம் அவத்தைகடோறும் மாறாதிருந் துணர்ந்துக் கொண்டுவருகின்றனமென்க. சாக்கிராவத்தையின்கண் ஏனைய அவத்தா விலட்சியாநுபவத்தைத் கருதுமாறு சொப்பனவத்தையின்கண், சாக்கிரசுழுத்தியாநுபவத்தையும், சுழுத்தியவத்தையின்கண், சாக்கிர சொப்பனாநுபவத்தையுமேன் கருதக்கூடாதெனின், அது அவ்வவ்வவத்தைகளுக்கியைந்த தத்துவங்களின் மிகுதியாலுங்,குறைவினாலும் நிகழ்கின்றது. எங்ஙனமெனின், சாக்கிராவத்தையில் தத்துவங்கள் மிகுதியாயியங்குவதனால் ஏனையவவத்தைகளி னநுபவத்தைக் கருதவியன்றிருக்கின்றது. சொப்பன சுழுத்தியில் அங்ஙனமின்றித் தத்துவங்கள்குறைந்தியங்குவதனால் மற்றவற்றினநுபங் கருதவியலா திருக்கின்றதென்க.

இத்துணைவிசாரணையால் அவத்தையாதிகள் மாறி மாறித் தோற்றிக்கொண்டிருக்கின்றனவென்றும், அவற்றை

மாறுதிருந்து உணர்ந்துக்கொண்டு வருவது நாமாகியவறி வென்றும் பெறப்பட்டதன்றோ? இங்ஙன முணர்ந்துவரும் நாம் அவ்வவ்வவத்தையாதிகளில், * சலட்சணமுற்றிருந்து ணர்கின்றனமா? அன்றி † விலட்சணமுற்றிருந் துணர்கின்ற னமா? விலட்சணமுற்றிருந்தேயுணர்கின்றமெனின், இதனால் அறிவாகியநாமென்னவென்றுகூறற்கியைகின்றனம் சம்பந்த மின்றியுணருஞ் சாட்சியென்று கூறற்கியைகின்றனமன்றோ? இங்ஙனமாகிய சாட்சித்துவவிலக்கணம் நமக்குப் பொருந்தி யிருக்கின்றதென்பதற்கு ஆட்சேபமியாதிருக்கின்றது? இரு க்குமாயின் விளக்கலாமே? இன்றேல், வாய்பொத்திக்கொ ண்டு இச்சாட்சித்துவவிலக்கணத்தைத் தடையின்றியேற்க வேண்டுமன்றோ?

[இது பிறவியாராய்ச்சி.]

அன்றியும், பிறவியென்பதிஞ்ஞான்று நமக்குண்டா? அன்றி இன்றா? உண்டெனின், பிறவி நமக்குவந்திருக்கின்ற தா? அன்றிப்பிறவிக்கு நாம் வந்திருக்கின்றனமா? பிறவிக்கு நாமே வந்திருக்கின்றோமெனின், இது விரலுக்குமோதிரமெ ன்பதன்றி, மோதிரத்திற்கு விரலென்றாற்போலாகின்றதே! ஆகவே, மோதிரமானது விரலைக்கொண்டு அழகுபெற்றுவி ளங்குவதுபோன்று, பிறவியானது நம்மைத் துணைக்கருவியா கக்கொண்டு செய்யவேண்டிய கிருத்தியங்களைச் செய்துசெ

* சலட்சணம்=ஒன்றுபட்டிருப்பது. † விலட்சணம்=வேறு பட்டிருப்பது.

ய்து முடித்துப் பயன்களை யநுபவித்துக்கொண்டிருக்கின்ற தாக்கும்! இத்திருட்டாந்த, தாட்டாந்தங்கள் விந்தையினு மிக்கவிந்தையா யிருக்கின்றனவே! பின்னரெங்ஙனங் கூற லாம்,நமக்குப் பிறவியென்னலாமாவெனின்,ஆம்; அங்ஙனங் கூறினுல் மாத்திரந்தான் விரலானது மோதிரத்தைக்கொ ண்டு அழகுபெற்று விளங்குவதுபோன்று நாம் பிறவியைத் துணைக்கருவியாகக்கொண்டு கிருத்தியங்களைப்புரிந்து புரி ந்து பயன்களை யநுபவித்துக்கொண்டு வருகின்றனமென்று கின்றது. ஆதலின் இத்திருட்டாந்த தாட்டாந்தமே சான்று மென்க.

அன்றியும், இஞ்ஞான்று நமக்கு வந்திருக்கும் பிறவி யானது காலவரையறைப்படியிருந்து மாறுவதுபோல முன் ஞான்றுமிதுபோன்ற பிறவிகள் அநந்தம் நமக்கு வந்துவந்து மாறிவிட்டிருக்கின்றனவன்றோ? பிறவியென்ப திஃது ஒன் றுமாத்திரமேயன்றி, இதற்கு முன்ஞான்று பிறவி நமக்கி ன்றெனின்,இஞ்ஞான்று நிகழ்வதாகியபிறவி நமக்கு வருவா னேன்? அது சுபாவமெனின்,இதற்கு முன்ஞான்றும் சுபாவ மாகவே பலபிறவிகள் வந்து வந்து மாறிப்போயினவெனப்ப டாதோ? அங்ஙனமுமன்று; இப்பிறவி அவன்செயலால்வ ந்ததெனின், இங்ஙனமே முன்ஞான்று பலபிறவிகள் வந்து, வந்துபோனதும் அவன்செயலெனப்படாதோ? அன்றியும், நா மிஞ்ஞான்றியற்றும் இருவினைகளுக்குமியன்ற பயனை எஞ்ஞான்றநுபவிப்பதோ? மறுமைக்கண்ணெனின், அம்

மறுமைக்கண் நாமென்னபயனை யநுபவிப்போம்? நரகமோட்சாநுபவப் பயனையெனின், அங்ஙன மநுபவிக்கும் நாம் எங்ஙனமிருந் தநுபவிக்கின்றது? உபாதிசகிதமாகவா? அன்று? உபாதிசகிதமாக வன்றெனின், இஞ்ஞான்று உபாதிசகிதமின்றி அப்பயனுக்குரியவினைகளை நாமியற்றவேண்டும். அங்ஙனமின்றி உபாதிசகிதமாகவே யியற்றுவதனால், அவற்றிற்குரிய பயனையும் உபாதிசகிதமாக விருந்தன்றோ வநுபவிக்கவேண்டும்? அன்றியும் அவ்விரு வினைகளையு மியற்றுவது உருவபாவமாக நின்று சுகதுக்கங்களை யநுபவித்தற்கா? அன்று? அன்றெனின், அருவபாவமாக நின்றநுபவித்தற்கா? ஆமெனின், இப்பிறப்பின்கண்ணும் உருவபாவமின்றி யருவபாவமாகச் சுகதுக்கங்களை யநுபவித்துக் கொண்டிருக்கவேண்டும்? அங்ஙனமில்லையே? மறுமைக்கண் மாத்திரம் அருவபாவமாக விருந்தநுபவிக்க வேண்டுமென்பதென்னை?

அன்றியும், இம்மைக்கண், ஷை சுகதுக்கங்களை நாம் கண்டப் பொருளாயிருந் தநுபவிக்கின்றனமா? அன்றி அகண்டப் பொருளாயிருந் தநுபவிக்கின்றனமா? அகண்டமென்பது பரிபூரணத்துவம் அல்லது அளவிறந்ததெனப்படும்; அதாவது எல்லையிறந்ததென்பது. ஆகலின், நாம்ஓரளவாக விருந்தநுபவிக்கின்றனமா? அளவின்றியிருந் தநுபவிக்கின்றனமா? ஓரளவாக விருந்தே யநுபவிக்கின்றனமெனின், ஈங்கு இப்பிறப்பினளவாகவிருந்து சுகதுக்கங்களை யநுபவிப்பதுபோல, ஆங்கும் ஓர் பிறப்பினளவாக விருந்தே யநு

பவித்தற்கு முரணென்னை? ஆங்கும் (மறுமைக்கண்) ஓராளவென்பது உபாதியெனப்பட்டதன்றோ? அவ்வுபாதி நரகமோட்சத்தையநுபவித்தற் கியைந்த பிறவியென்பதன்றோ? அப்பிறவி வாய்ப்பது அவன்செயலாலாயினும் அது வருவதற்குக் காரணம் இப்பிறவியின் முயற்சியன்றோ? இப்பிறவியின் முயற்சிக்காரணமாக அம்மறுமைப் பிறவி வாய்க்கின்றதாயின், மற்றெப்பிறவியின் முயற்சிக் காரணமாக இப்பிறவி வாய்த்திருக்கின்றது?

முன்னொன்றிருந்தொழிந்துபோன பிறவிகளின் காரணமாகவன்றோ? அங்ஙனமாயின் முன்னொன்றுள்ள பிறவி இடைஞொன்றுள்ள பிறவிக்கும், இது பின்னொன்றுவரும் பிறவிக்குங் காரணமாகவும், பின்பின்வரும்பிறவிகள் காரியமாகவுங், காரணகாரிய நெறித்தாகச்செல்கின்றமையால் முன்னொன்றுள்ள பிறவியானது அதற்கு முன்னொன்றுள்ள பிறவிகாரணமாக வந்ததுபோல, அப்பிறவியு மதற்கு முன்னொன்றுள்ள பிறவிகாரணமாக வந்திருக்கலாமன்றோ?

இங்ஙனமே போகப் போகச் சங்கலித்தொடர்புபோன்று பலபிறவிகளேற்படுகின்றன வாதலால் முதன் முதலாக வோர் பிறவிஏற்படவேண்டுமே; அப்பிறவிக்குக் காரணம் யாதெனப்படுமெனின், பிறவிகள் அநாதியாதலின், காரணங்கேட்பானேன்? அவ்வநாதியில்தான் பிறவி வருவானேனெனின், அநாதியென்கிறபதம், ந + ஆதி யெனப்பிரிக்கப்பட்டு ஆதியற்றதென்கிற பொருள் தருகின்றதாதலால் முத

லற்றபிறவிக்குக்காரணங்கடாவவும்படுமா? ஆதியில்பிறவிவந் ததெனின், அவ்வாதியில் வருவானேனெனக் கடாவலாம். அங்ஙனங் கடாவுவதற்கு விடையாதேனு மியம்பத்தான் வேண்டும். அநாதியென்பது காலதீதமாதலால் அதற்குக் காரணங் கடாவியது விஞவழுவாகுமென்க. அன்றியும் கைவல்லியநவநீதத்தில், "அதுதானெப்படி யென்றக்கா லநாதியாஞ் சீவரெல்லாம்" என்றுகூறியிருக்கின்றபடி அவனென்கிற பெயரானது அவத்தையுபாதி சகிதவவசரத்தில் சைன்னியத்திற்குச் சொல்லப்படுகின்றது. அதாவது அவத்தையுபாதி சார்போதன் சீவனென்பது, என்னை,

வேதாந்த விலக்கணம்.

"உபாதி நாட்டத் துயிரலா நாட்டத்
தான்மா வெனப்படு மறிவு தானே."

ஆதலின், அவனே அநாதியாகின்றமையா லச்சீவத்தன்மைக் கேதுவாகிய உபாதியாதியு மநாதியேயென்க.

இதனுல் பிறவி அநாதியென்பதற்கு முரணின்றுதலால் ஏதுகடாவுத லநாவசியமென்க. அன்றியுமிஞ்ஞான்று நிகழ்கின்ற பிறவியைப்பற்றி யன்றே முன்ஞான்றுள்ள பிறவியையும், பின்ஞான்றுவரும் பிறவியையுங் கணிக்கவேண்டியதாயிற்று? இதனை யறியாது அநாதிக்கேதுவைக்கடாவுவானேன்? இஞ்ஞான்றுள்ள பிறவிக்குக் காரணம், முன்ஞான்றுள்ள பிறவியே யாயினும் அப்பிறவியின்கண்ணும் அதற்கு முன்ஞான்றுள்ள பிறவியின்கண்ணும் புரியப்பட்டு

ஒருங்கு சேர்ந்திருக்குஞ் சஞ்சிதகன்மமன்றோ இப்பிறவிக்கு நேர்காரணமாயிருக்கின்றது? இங்ஙனமே மேல்வரும் பிறவிக்குக்காரணம் இப்பிறவியின்கண் புரியப்பட்டுவரும் ஆகாமியகன்மமுங், கழிந்துபோன பிறவிகளின் சஞ்சிதகன்மமுமன்றோ? அவ்வப்பிறவிகளிலும் புரியப்பட்டுவரும் ஆகாமியகன்மமன்றோ சஞ்சிதமாகச்சேர்ந்துவருகின்றது? இவ்வாகாமியகன்மம் புரிவதற்குக்காரணம் அவாவெழுச்சியன்றோ? இதனாலன்றோ, திருக்குறள்.

"அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து" எனவும்,

வைராக்கிய சதகப்

ஆழு னிச்சையே மேலுமே லும்பிறப்
பளிக்கும் வித்தென நெஞ்சே
நீம றித்திடா சைக்கடல் சுவறுமே
நினைவெ னுந்திரை மாயும்
போமி றந்தெலா நினைவுமெப் பொழுதிலப்
பொழுது பூரண மாய .
சோம சேகரத் தெந்தைபொற் கழலையுந்
தொழலை யமிலை நாமே.

எனவுங் கூறுகின்றன? இங்ஙனமாகிய அவாவெழுச்சிக்குக் காரணம் யாதெனப்படும்? அறியாமையன்றோ? அவ்வறியாமையினாலன்றோ அவாவெழுச்சியுஞ், சஞ்சித வாகாமியங்களுங் காரியகாரணங்களாகத் தொடர்புற அதனால் கணக்கின்

றிய பிறவிப்பேதங்களுண்டாகின்றன? இப்பிறவிகளின்பெரு மிதத்தைநோக்கியன்றோ, "பிறவிப்பெருங்கட"லெனவாக்கியம் பிறந்திருக்கின்றது? இதுவுமன்றிப் பிறவிப்பேதங்களையடைந்த ஞான்று பிராரத்துவகன்மமானது அநுபவிக்கப் பட்டொழியுமாறு, நோய், மூப்பு, துக்கசகிதமாக நிகழ்கின்றதன்றோ? இங்ஙனமாய விபரீதங்களுக்கெல்லாம் மூலகாரணமாயிருப்பது யாதெனப்படும்? முன்ஞான்று கூறிய அறியாமையென்பதன்றோ? அது ஒன்று மற்றொன்றாகத் தோன்றுவதும், ஒன்றை மற்றொன்றாக வுணர்வதுமன்றோ? அங்ஙனம் ஒன்று மற்றொன்றாகத் தோன்றுவதற்கு அர்த்தாத்தியாசமெனவும், ஒன்றை மற்றொன்றாக வுணர்வதற்கு ஞானத்தியாச மெனவும் பெயர்வந்திருக்கின்றனவன்றோ? முன்ஞான்று கூறப்பட்டது அறியாமையென்றும், இஞ்ஞான்று பெயரிட்டழைப்பது அத்தியாசமென்று மிருப்பானேனெனின், அறியாமையெனினும், அத்தியாச மெனினும், ஆரோபமெனினும், கற்பனையெனினும் பொருளொன்றேயாதலா லங்ஙனங் கூறியதென்க. என்னை,

**கைவல்லிய நவநீதம்.**

ஆரோப மத்தி யாசங் கற்பனை யாவ வெல்லா, மோ
ரோர் வஸ்துவினை வேறே யோரோர் வஸ்துவென வோர்த,
லூருடு பணியாத் தோன்ற னரனாகத் தறியிற் றோன்ற,னீருடு
கானற் றோன்ற னிரந்தரம் வெளியிற் றோன்றல்.

இங்ஙனமாகிய அர்த்தாத்தியாச ஞானத்தியாசத் திரட்சியே யன்றோ சீவேஸ்வர சகத்தென்பது? இச்சீவேஸ்வர

சகத்துக்கு மூலகாரணமாகிய அறியாமையென்பது எந்த முதலின்பாலது? அறிவாகிறஅகம்பொருளின்பாலதெனின், அவ்வகம்பொருள் இத்தகையதெனஎஞ்ஞான்றேனும்நம்மா ல் விசாரித்தெட்டப்பட் டிருக்கின்றதா? நாமுமங்ஙனம் வி சாரித்தெட்டியிருக்கின்றனமா? இன்றெனின், அநாதியில் பிறவிவருவானேனென்று கடாவுதல்மாத்திர மெட்டுகின்ற தா? நிற்க, பலகோடிப் பிறவிகள் கணக்கின்றி வந்து வந்து நிலையாதகன்றுபோகின்றனவே, அவைகள் நிலையாது மாறிமா றிப்போயினும் கணநேரமாயினும் மாறாது நிலையாகவே யிரு ந்தறிந்து கொண்டிருப்பது யாதெனப்படும்? நம்மையன்றி வேறுயாதேனுமிருக்கின்றதா? இருக்கின்றதெனின், அது யாதெனப்படும்? இன்றாதலால் நாமே அப்பிறவிப்பேதங் கள் மாறிமாறிவருகின்றதை அவற்றோடு மாறாதிருந்தறிந்து கொண்டுவருகின்றோமென்க.

அங்ஙனமாயின் நாம் ஓர் தேசத்திலிருந்து மற்றொரு தேசத்திற் சென்றபின்ஞான்று, முன்பிருந்த தேசமும், அத்தேசத்திற் புரிந்த பல கிருத்திய முதலியனவும் நாமுன் னித் தெரிந்துக்கொள்ளுவதற் கியைந்தாயிருக்கின்றனவே; அங்ஙனம் நாம் தெரிந்துக் கொள்ளுவதேன்? அவைகளுண் மையாயிருக்கின்றதாலன்றோ? அங்ஙனமே முன்ஞான்றுபிற வித் தொடர்புக ளுண்மையா யிருக்கின் இஞ்ஞான்று நாம் அவற்றை உன்னித்தெரிந்துக்கொண்டிருக்கலாமேயெனின், சொப்பனவத்தாக்காட்சிகளனைத்தும் சாயாமாத்திர மான

வைகளா? அன்றி யதார்த்தமானவைகளா? சாயாமாத்திரந் தானெனின், எவற்றைப்போன்றது? சாக்கிராவத்தாக்காட்சிகளைப்போன்றதெனின், அச்சொப்பனவத்தையில் இருக்கின்றநாம், சாக்கிராவத்தையில் இருக்கின்றநாமா? அன்றி வேறு நாமா? ஈரிடத்தும் ஓர்நாம்தாமெனின், ஒன்றுயிருக்க சொப்பனநுபவங்களைச் சாக்கிராவத்தையிலிருக்குஞான்று தெரிந்துக்கொள்வதுபோல, உண்மையாயிருக்கும் இச்சாக்கிராநுபவங்களைச் சொப்பனவத்தையி லிருக்குஞான்றும் சுழுத்தியவத்தையிலிருக்குஞான்றும் நாம் ஏன்தெரிந்துக்கொள்ளுகின்றதில்லை? தெரிந்துகொள்ளாமையினுல் சாக்கிராவத்தை முதலியவைகளின்றே? இருக்கின்றனவே! இதற்கென்செய்தும். சொப்பனவத்தையில் நமதந்தக்கரணம் தூலபாவமின்றிச் சூக்கும பாவமாயிருத்தலினுலும், சுழுத்தியவத்தையில் அச்சூக்குமபாவமு மின்றிக் குன்றியிருப்பதனுலும் ஷை சாக்கிராவத்தா இலட்சியாநுபவங்களை நாம் தெரிந்துக் கொள்ளக் கூடாதிருக்கின்றதெனின், இதனுல் இச்சாக்கிராவத்தாநுபவத்தைத் தெரிந்துக்கொள்ளுங் கருவியாகிய கரணம் ஷை ஈரவத்தைக்கண்ணுங் குன்றியிருப்பதனுல் நாம் தெரிந்துகொள்ளக்கூடாததாயிருக்கின்றதென்றுகின்றது. இங்ஙனமே முன்ஞான்றுள்ள பிறவித்தொடர்புகளைத் தெரிந்துக் கொள்வதற்கியைந்த கருவி இஞ்ஞான்று நமக்குக்குன்றுதிருக்குமாயின் தெரிந்துகொள்வதற்கு விருத்தமென்பதென்னை? ஆகலின் முன்ஞான்று பிறவித் தொடர்பென்பது உண்மையேயன்றிக் கிஞ்சித்தும்

இன்மை யென்பதன்றென்க. அற்றேல், அங்ஙனந் தெரிந்துகொள்வதற் கியைந்த கருவியென்பது முண்டோவெனின், திரிகால ஞான மென்பது யாதுக்கிருக்கின்றது? அதனைவேண்டி அதற்கியைந்த தவம்புரியின் அது குன்றாது வாய்க்க அதன் காரணமாக நாம் அப்பிறவித் தொடர்பை யறிதற்குக் கிஞ்சித்து மையமென்ப தின்றாமென்க. இத்திரிகாலஞான மென்பதின்றி அப்பிறவித் தொடர்பை அறியக் கூடாத தென்னையெனின், சொப்பனாவத்தையின்கண்ணும், சுழுத்தி யவத்தையின்கண்ணும், சாக்கிராவத்தா விலட்சியாநுபவத்தை அறிதற்கியைந்த கரணமின்றி அதை யறியக் கூடாததென்னை? அச்சாக்கிராவத்தைக் கரணம் (குன்றாது) இருக்குமாயின் அதனது இலட்சியாநுபவமும் அறிந்து கொள்ளக்கூடியதா யிருக்குமன்றோ? இதுபோலவேயா மென்றுணர்க.

இதனால் அறிவாகியநாம் என்னவெனப்படுவம்? சாட்சிப் பொருளெனப் படுவமன்றோ! இதற்குயாதேனும் விருத்த முளதாயின் கூறலாமே? இன்றாயின் மௌன முறலாமன்றோ? இங்ஙனம் உபாதியவத்தையாதிக்கு நாம் சாட்சியாயிருந்திலங்கு கின்றோமென்பதற்கு தாரணம்,

### கைவல்லிய நவநீதம்.

தூலசூக் குமவுஞ் ஞானந் தோன்றுமுன் றவத்தை தாமுங்
காலமோர் மூன்றுஞ் சன்மக் கடலெழுங் கல்லோ லங்கள்

போலவே வந்து வந்து போனவெத் தனையென் பேரு
ளுலமர் கடவு ளாணை யவைக்கெலாஞ் சாட்சி நீயே,

என்று கூறியிருப்பதை யுணர்க.

[இதுவியாபக விலக்கணம்.]

இதுநிற்க, ஷசாட்சித்துவ இலக்கணத்தோடிரண்டாவதாக வியாபகநிலையாகின்ற இலக்கணத்தையும், அறிவுப் பொருளாகிய நாம் பொருந்தி யிருக்கின்றோமென்று முன்னான்று கூறியிருக்கின்றமையால் அவ்வியாபகத்துவ இலக்கணத்தை நாமெங்ஙனம் பொருந்தி யிருக்கின்றோமெனின், அவத்தாத் திரயங்களும், பிறவிப்பேதங்களும் மாறி,மாறித் தோன்றிக்கொண்டிருக்கின்றனவாயினும் இவைகள் மாறிக் கொண்டிருப்பதற்கு ஓரிடம் வேண்டுமன்றோ? அவ்விடமென்பது யாதெனப்படும்? இடமென்பதொன் றிருக்கவேண்டிய தவசியமோவெனின், இடமில்லாதுழி ஷஅவத்தைகளும், பிறவிப்பேதங்களு மெங்ஙனம் (மாறிமாறிநிகழும்) புடைபெயர்ச்சியை வகிக்கும்? வினைமுதலையன்றி வினையும், குணியையன்றிக் குணமும், விசேஷியத்தையன்றி விசேஷணமும் நிகழாவாறு அவத்தையாதி ஆதேயங்கள் ஆதாரத்தையன்றி நிகழுமா? அன்றியும் அவை நிலையின்றி மாறிக்கொண்டிருத்தலாகிய புடைபெயர்ச்சியை வகித்திருக்கின்றனவன்றோ? அப்புடை பெயர்ச்சி நிகழ்தற்குத் தானமொன்று வேண்டிய தன்றோ? வேண்டி யிருப்பதனாலும் ஷவினைக்கும், குணத்திற்கும், விசேஷணத்திற்கும் முறையே

வினைமுதலும், குணியும், விசேஷியமும் வேண்டிய தவசிய மாகுமாறு ஆதேயங்களாகிய அவத்தையாதிக்கும் ஆதார மாகிய இடமென்ப தவசியம் வேண்டியதென்க. அங்ஙன மாகிய இடமென்பது யாதெனின், அதுவே நானெனப்படுவ தென்க.

அன்றியும் நான், நீ, அவன், அவள், அது வென்னும் அநந்தமாய்த் தோற்றுகின்ற கோணல்கள் யாவும் நாமா? அன்று? நாமன்றெனின், இக்கோணல்களுக் குபாதானகார ணம் யாதெனப்படும்? நாமன்றோ? நம்மையன்றி இவைகட் குப் பரமாணுத் துணையேனும் பொருளுண்டா? எங்ஙன மெனின், கயிற்றினை யுபாதானமாகவுடைய அரவுக்கு அக்க யிற்றையன்றிப் பொருளின்மைபோலென்க. சகல கற்பனை களுக்கும் நாமே உபாதானமாயின் இஞ்ஞான்று நூதன மாக நாமுன்னுகின்ற நான் நீஎன்பவைதோன்றவேண்டுமே? அங்ஙனமின்றி யெங்கெங்கே அக்கற்பனைகளுண்டோ, அங் தங்கே மாத்திரமன்றோ தோன்றுகின்றன? ஆதலால் நமது கோணல்களென்பதெங்ஙனமெனின், நமக்குச்சங்கற்ப, விகற் பங்கள் புத்திபூர்வகமாகவும், அபுத்தி பூர்வகமாகவும் நிகழ் கின்றனவன்றோ? இவற்றுள் புத்திபூர்வக மென்பது நமக் குத் தெரிந்து நிகழ்வதும், அபுத்தி பூர்வகமென்பது தெரி யாது நிகழ்வதுமாம். எங்ஙனமெனின், சாக்கிரமாகிய விழி ப்பிலிருந்து சுழுத்தியாகிய வுறக்கம் நமக்குத் தெரிந்துவரு வதுபோலும் ஷெ உறக்கத்திலிருந்து விழிப்பானது தெரி யாமல் வருவதுபோலு மாமென்க.

இங்ஙனங் கூறியதில் உறக்கத்திலிருந்து அபுத்திபூர்வகமாக விழிப்புவருவது போன்று தானே தானாயிருக்கின்ற நாம் * அவாச்சிய வடிவமாயிருக்கின்ற மாயையினால் தெரியாமல்சீவேஸ்வரசகத்தாகவாரோபப்பட்டிருத்தலேஅபுத்தி

* சத்தென்றாவது,அசத்தென்றாவது குறிக்கப்படாமல்சதசத்விலட்சணஅநிர்வசனீயமாயிருப்பதியாதோ அது அவாச்சியவடிவமென்று சொல்லப்படும், எங்ஙனமெனின், சத்தென்பது எஞ்ஞான்றுமுள்ளது, அசத்தென்பது எஞ்ஞான்றுமில்லாதது. இங்ஙனமிருக்கின்றபடியால், மாயையென்பது சத்தென்றுசொல்லப்படலாமேயெனின், அது சைதன்னியத்தில் கற்பனையாயிருக்கின்றபடியாலும், தத்துவஞானமாகிய விசாரணையால், மித்தையாக முடிகின்றபடியாலும் அங்ஙனஞ் சொல்லப்படுவதற்கு மேதுவில்லை. அசத்தென்று சொல்லப்படலாமேயெனின், அது மலடிமைந்தனைப்போல எஞ்ஞான்றுமில்லாது போகாதபடியாலும், பிராதிபாஸிகமாகவர்வதிருக்கின்ற சகத்திற்குக்காரணமாயிருக்கின்றபடியாலும் அங்ஙனஞ் சொல்லப்படுவதற்கு மேதுவில்லை. சதசத்தென்று சொல்லப்படலாமே யெனின், சத்துக்கு அசத்தும், அசத்துக்குச் சத்தும் ஒளியுமிருளும்போல எதிர்மறையாயிருக்கின்றபடியாலும் இங்ஙனம் எதிர்மறைத்தன்மையை வகித்திருக்கும் பொருள் ஒன்றுமில்லாதபடியாலும் அங்ஙனஞ்சொல்லப்படுவதற்கு மேதுவில்லை. பின்னரெங்ஙனஞ்சொல்லப்படுமெனின், சத்திற்கும், அசத்திற்கும் வேறாயதாகிய சதசத்விலட்சண அநிர்வசனீயமென்றே சொல்லப்படுமென்க. இங்ஙனமாகிய பொருள்வடிவத்திற்கு அவாச்சியமென்று சொல்லப்படும். என்னை,(கைவல்லிய நவநீதம்)"அதனை யின்னதென் றுரைத்திடப் படாமையா லவாச்சிய வடிவா கும்" என்று கூறியிருப்பதுணர்க.

பூர்வகமும்; இவ்வாரோபக் கோணல்களைக் கெடுத்துப் பண்டைய நிலைமையாதற்கு விசாரித் துழைத்துத்தெளிவது புத்திபூர்வகமுமாதலின், அநாதியிலேயே சீவேஸ்வர சகத்தாகிய கோணல்கள் நம்பால் அபுத்திபூர்வகமாகத் தடித்திருக்கவும், நாம் புரியுமெல்லாக் கிருத்தியங்களும் புத்திபூர்வமாக நிகழக்கூடியதும், இப்புத்திபூர்வகமாகவே ஷை கோணல்கள் கெடக்கூடியதுமான இஞ்ஞான்று நூதனமகச் சிலகோணல்கள் தடிக்கலாமேயென்று கடாவியதென்னை? ஆயினும், புத்திபூர்வமாக நிகழுஞ் சில நூதனத் தடிப்புகளுமுண்டு. அவையாவையெனின், அணிமா முதலாகிய அஷ்டமாசித்திகளா லுண்டாவதும், முதற்கருவி துணைக்கருவிகளா லுண்டாவது மாகிய பல காரியவிளைவுத்தடிப்புகளென்க.

அநாதியிலேயே சீவேஸ்வர சகத்தென்னுங் கற்பனைக் கோணல்கள், நம்பால் புத்திபூர்வகமாக மாயையினால் தடித்திருக்கின்றனவென்றும், நாம் புத்திபூர்வகமாக விசாரித்துத் தெளிவதினால், ஷை கோணல்கள் கெடுமென்றுங் கூறியதென்னை? ஆதியற்றிருப்பதாகிய ஒன்று அந்தத்தை யெய்துமா? அங்ஙனமாயின், ஆத்மாவும் அநாதியாய் ஆதியற்றிருக்கின்றபடியினால் அஃதும் அந்தத்தையெய்துமேயெனின், அநாதியென்பதற்கு ஆதியற்றதென்பதுமாத்திரம் பொருளேயன்றி அந்த மற்றதென்பது பொருளாகாது, அன்றியும், அநாதியென்பது அந்தத்தையடைவதென்றும், அங்

தத்தை யடையாததென்றும் இருவகையா யிருக்கின்றது. அந்தத்தையடையுமநாதி பிரவாக அநாதியென்றும், அந்தத்தையடையாமல் என்றுமிருக்கின்ற அநாதி சொரூப அநாதியென்றுஞ் சொல்லப்படுகின்றன. விருட்ச மாதற்குரிய சத்தியானது வித்தின்கண் அநாதியாக விருப்பினும், வித்தைவறுத்தஞான்று அவ்விருட்சசத்தியானது கெட்டுவிடுவது போன்று மாயையினால் அபுத்திபூர்வகமாக நம்பால் சீவேஸ்வர கற்பனைகள் அநாதியிலேயே தடிக்கப்பட்டாலும் அஃது பிரவாக வநாதியாதலின் கெடுமென்க. இங்ஙனமே மாயை யென்பதும், பிறவியாதியும் பிரவாகவநாதியாதலின் அவசியந் தத்துவஞானத்தினாற் கெடுமென்க. ஆத்மா சொரூப வநாதி யாதலின் அஃதெஞ்ஞான்றுங் கெடுதலென்பதின்றி நித்தியமாகவே யிருக்குமென்க.

இதுநிற்க,பிருதிவியாதிபூதங்கள்தம்பால்காரியப்பட்டுத் தோன்றுகிற யாவற்றுக்கும் ஆதாரமாகிய இடமாயிருப்பது போல, அவத்தாத்திரய உபாதித்திரயங்களுக்கும் ஷை சீவேஸ்வராதி தடிப்புகட்கும் ஆதாரமாகிய இடமென்பது யாதெனப்படும்? நாமன்றோ? அதாவது நமதகமன்றோ? ஷை அவத்தாத்திரய முதலியவை நம்பால் தோற்றுகின்றனவாதலின், நாமே இடமென்பதற்கு விருத்தமென்னை? உண்டேல் கூறுதுமே! அன்றியும் அங்ஙனந்தோற்றுகின்ற சகமாதியாவுஞ் சங்கற்ப வடிவமா யிருக்கின்றனவன்றோ? அச்சங்கற்பத்தையன்றியும் அவைகட்குப் பொருளின்றன்றோ?எங்ஙனமெனின், சங்கற்பமாகிய நினைவெழுச்சி அல்லது மனோ

விர்த்தியானது கணந்தோறும் உண்டாகிக்கொண் டில்லா விடில் சகமாதி யென்பவை தோற்றுமா? என்னை,

குமார தேவர்.

சங்கற்ப மென் றுஞ் சகமென்றும் வேறில்லை
சங்கற்ப மேசகமுஞ் சகமேசங் கற்பமதும். எனவும்,

சங்கற்ப சத்திதா னநந்தவித மாய்விரியும்
அங்கப் படிநிகழு மண்டபிண்ட மானதெல்லாம். எனவும்,

தனது சங்கற் பந்தனிலே சகங்க ளாகி விளங்கியிடும்
தனது சங்கற் பந்தனிலே சகம்போ யொடுங்கு மதனாலே
தனது வடிவே சகங்களெலாந் தன்னை விடவே றிலைத்தங்கம்
தனது வடிவை விடப்பணிக டான்வே ருகி விளங்கிடுமோ.

என்றுங் கூறியிருப்பதனால் விளங்குகின்றதன்றோ? இங்ஙனஞ் சங்கற்பத் தடிப்புகளாகிய சகசீவமாதி (அதாவது சீவேஸ்வர சகத்தென்பது) எங்கே உதித்தொடுங்குகின்றன வெனப்படும்? நமதகமாகின்ற வெளியிலன்றோ? சதுர்ப்பூதங்களும்உதித்தொடுங்குவதற்கிடமாகப் பூதாகாயமாகின்ற வெளி யென்பதொன் றிருப்பதுபோல,இச்சங்கற்பத்தடிப்புகளுக் கிடமாயிருப்பது நமதகமாகின்ற சிதாகாயமன்றோ? அது சித்துவெளி, ஞானவெளி, அல்லது, ஞானகாய மெனவுங் கூறப்படலாமன்றோ? அகமானது வெளிபோன்று இடமாயிருப்பினுஞ் சிதாகாயமென்று சொல்லப்படுவானேன்? சடாகாயமென்று சொல்லப்படாதோவெனின், அவ்வெளியின்கண் தோற்றப்படும் நினைவெழுச்சிகளாலான நாமரூபங்

கள் எங்கெங்கே தோற்றப்படுகின்றனவோ ஆங்காங்கும் இருந்திருந்து அறிந்துக்கொண்டிருப்பது யாது? நமதகமாகின்ற வெளியன்றோ? அன்றியும் அங்ஙனமெழுகின்றதோற்றங்கள் மீண்டுமீண்டு மெங்கே யொடுங்குகின்றன? அவ்வெளியின்கண்ணன்றோ? அவ்வெளியன்றோ ஷை தோற்றங்களின் ஒடுக்கத்தையு மறிந்துகொண்டிருக்கின்றது? இதனால், நமதகமாகிய வெளி சிதாகாய மென்பதற்கு முரணென்னை? அகமெனினும், நானெனினு மொன்றுதலால் நாமே வெளிப்பொருளா யிருக்கின்றோ மென்று லென்னை? வெளியென்பது வியாபகத்துவ முற்றிருக்கின்றதுபோல, நாமும் வியாபகத்துவ முற்றிருக்கின்றோமன்றோ? அவ்வியாபகம் உணர்வுமயமா யிருக்கின்றபடியினால் சிதாகாய மென்பதே துணிபென்க.

இச்சிதாகாயமாகிய நம்மிடத்தில் தோன்றுப்பொருள்களுமுண்டோ? அங்ஙனந் தோன்றுஞ் சகலமுங் கருத்துப்பொருள், காட்சிப் பொருளென விரண்டு பேதங்களாகப் பிரிந்து கருத்துப்பொரு ளென்பவை சீவேஸ்வரரென்னு மாபாசச் சேதனக் கற்பனைகளும், காட்சிப்பொரு ளென்பவை, பாஞ்சபூத பௌதீகமென்னுஞ் சடக்கற்பனைகளுமாக விருப்பினும் இவையனைத்தும் நாமாகிய சாட்சி வியாபகத்தில் அலை, திவலை முதலியவைகளைப் போலத் தோன்றித் தோன்றி மறைந்துகொண் டிருப்பதால் வியாபகத்துவமென்னு மிரண்டாவ திலக்கணத்தையும், நாமே, பொருந்தியிருக்கின்றனமன்றோ? ஆதலின், வியாபகநிலை யென்னும்

இலக்கணமும் நம்பாலுள்ளதென்க. அன்றியும், ஷை சக முதலியவை அலை, திவலையாதிகள்போல நம்மிடத்தில் தோன்றி யொடுங்குகின்றன வென்பதற்கு தாரணமாக,

மகாவாக்கிய வுரை

"அலைதிவலை நுரைகடலி னுதித்தொடுங்கு மாபோல்
அனைத்துலகு முதித்தொடுங்கு மதன்மூலப் பொருளை
இலக்கியசற் குருவாகி யானுதம் பொருளை [றும்,
யெங்குமாம் பரம்பொருளை யாமும்வணங் குதுமே." என்

ஞான வாசிட்டம்.

"எழுதுவோனு மெழுதிடமு மெதிர்காண்பொருளுமிலதாகி
வழுவிலாத விண்ணிடையே வந்துதோன்று மோவியங்கள்
பழுதின் மேவுந் தனைத்தானே பாரா நிற்கும் பலபொறியும்
நழுவு துயிலி னுலன்றி நனவான் மேவுங் கனவொக்கும்"
என்றும்,

தத்துவராயர் பாடுதுறை.

நான்முக னுக்கிட மானவூ ரெங்களூர்
நான்மறை யுந்துதி செய்யுமூ ரெங்களூர்
தேவுக்குந் தேவா யிருக்குமூ ரெங்களூர்
தேவர்க ளெல்லாந் திரியுமூ ரெங்களூர் என்றும்,

இதுவுமது.

புத்திவிகற்ப மறுக்குமூ ரெங்களூர்
பூர்ண மாகி யிருக்குமூ ரெங்களூர்

வித்தும் விளைவு மில்லாதவூ ரெங்களூர்
விண்முதற் பூதம் விளைந்தவூ ரெங்களூர்

என்றுங்கூறிய வாற்றானுமுணர்க. அறிவுப்பொருளாகிய நாம் மூன்றாவதாகிய விளக்கநிலையென்னும் இலக்கணத்தையும் பொருந்தியிருக் கின்றோமென்று முன்னான்று கூறிய தெங்ஙனமெனின்,

[இது விளக்க விலக்கணம்.]

சாக்கிரமாதி மூன்றவத்தைகளும், அதததற் கியைந்த வியஷ்டி, சமஷ்டிக் காட்சிகளும் மாறிமாறி விளங்குவதை விடா தறிந்துக்கொண்டிருப்பது அறிவாகிய நாமாயினும், அவற்றை விடாது விளக்கிக்கொண்டிருப்பது யாதெனப் படும்? வியஷ்டி, சமஷ்டிக் காட்சியாவது யாதெனின், தனி மரமென்றாற்போல, வொவ்வோர் பொருளுந்தனித் தனியா யிருக்குஞான்று வியஷ்டியென்றும், வனம், அல்லதுதோப் பென்றாற்போல அம்மரப் பொருள்கள் பலவுஞ் சேர்ந்திருக்குஞான்று, சமஷ்டியென்றுஞ் சொல்லப்படும், என்னை,

கைவல்லிய நவநீதம்.

"மரமெனல் வியட்டிபேதம் வனமெனல் சமட்டிபேதம் சரங்கடாவரங்கள் பேதம் தனியுடல் வியட்டிபேதம்" என்றுகூறிய வாறுணர்க. இங்ஙனம், வியஷ்டி சமஷ்டிகளாக, சாக்கிரமுதலிய அவத்தைகளில் தனியேதோற்றப்படுங் காட்சிக்கு வியஷ்டி காட்சியென்றும், ஒருங்குசேர்ந்து தோற்

றப்படுங் காட்சிக்கு சமஷ்டி காட்சியென்றுஞ் சொல்லப்படுமென்க.

ஷை காட்சிகளனைத்துந் தாமேதோற்றிக் கொண்டிருக்கின்றனவே யவற்றை விளக்கவேண்டுவானேன்? அவைகள் விளங்குவதற்கு விளக்கமும் வேண்டுமோவெனின், பொருள்கள் தோற்றுவதற்குச் சககாரி அல்லது துணைக்காரணங்களாக இருப்பனவாகிய பொருள்களோடுள்ள வெளிச்சத்தின்சம்பந்தம், * இந்திரியத்திற்குத்தோற்றப்படுதர்மம், பொருள்களின் † மகத்துருவ மாகிய மூன்றனுள், வெளிச்சமென்ப தொன்றும் பிரதானமன்றோ? இருட்சம்பந்தமுற்ற வீட்டின்கண் பொருள்களநேகம் நிறைந்திருப்பினும் அவற்று ளொன்றேனுந் தோற்றுமா? தோற்றாதன்றோ? ஏன் தோற்றக்கூடாது? விளக்கொளி முதலிய வெளிச்சங்க ளில்லாமையினா லெனின், அவ்வெளிச்சங்களிருப்பின், அவை தோற்றவும், நாமறியவுங் கூடுமன்றோ? அங்ஙனமே ஷை அவத்தாத்திரய முதலியவற்றை நாமறிவதற்கியைந்தபடி தோற்றிக்கொண் டிருக்கின்றன வாதலின், அவை யெந்த விளக்கத்தினால் தோற்றுகின்றன? அவற்றை

* ஆகாயம் மகத்துருவ மாயிருக்கினும், அஃதிந்திரியத்திற்குத் தோற்றுகின்றதில்லை யாதலால் தோற்றப்படுந்தர்மமுந் தோற்றப்படும் பொருள்களுக்கு வேண்டியதா யிருக்கின்றது. † வெளிச்சத்தின் சம்பந்தமிருந்தாலும் பரமாணுவானது தோற்றுகின்றதில்லை யாதலால் மகத்துருவமும் (பெரியதாயிருக்குந் தன்மையும்) தோற்றப்படும் பொருள்களுக்கு வேண்டியதாயிருக்கின்றது.

விளக்கும் விளக்கமும் யாதெனப்படும்? சோமசூரியாக்கினி யாகிய இம்மூவித விளக்கமேயெனின், நாம் உன்னுந்தோறும் * ஸ்மரணையில் தோற்றப்படுவதும், சொப்பனத்தின் கண்தோற்றப்படுவதுமாகிய காட்சிகள் எந்தவிளக்கத்தினால் தோற்றப்படுகின்றன? ஆங்குவிளக்கமென்ப தொன்றில்லையாயின், ஷை காட்சிக ளெங்ஙனந் தோன்றும்? ஆதலின் விளக்கமென்பதுஆங்கவசியம் வேண்டியிருக்கின்றதன்றோ? ஆமெனின், அவ்விளக்கமும் அறிவாகிய நம்மையன்றிவேறு யாதுளது? ஸ்மரணை சொப்பனக்காட்சிகள் நம்மால் விளங்குவதாயினும், சாக்கிரக் காட்சிகள் விளங்குவது நம்மாலன்றே: இரவியாதியா லன்றோவெனின், இச்சாக்கிராவத்தையும், இதனை யனுசரித்துக் காணப்படுங் காட்சிகளும், அக்காட்சிகளை விளக்குகின்ற இரவியாதி யொளிகளும், நமது சங்கற்பத்தையன்றி யணுத்துணையேனு முண்டா? இன்றாதலின், சங்கற்பமும் நம்மையன்றி யுண்டா? இன்றன்றோ? இங்ஙனம் நம்மையன்றிச் சங்கற்பமும், சங்கற்பத்தையன்றி யவத்தைகாட்சியாதிகளும் அற்பமேனு மில்லாதிருக்கச் சங்கற்பத்தடிப்பாகிய இரவியாதிகள் மாத்திரம் எங்ஙனம் மூலகாரணமாகிய நம்மைவிட வேறாயிருக்கும்? அங்ஙனமின்றாதலால், சகலதிரிசியங்களையுந் தோற்றுவிப்பது நாமாகிய அறிவுவிளக்கமே யென்க.

ஆதலின் அவ்வறிவுவிளக்கமானது சாட்சியாயும், வியாபகமாயுமிருப்பதோடு விளக்கமாயுமிருக்கின்றதன்றோ? இத

* ஸ்மரணை = நினைப்பு.

ஞலன்றோ வேதாந்தசாஸ்திரங்கள் யாவும் அறிவென்பது வியாபக, சாட்சி, விளக்கமென விடாது கோஷ்டித்துக்கொண்டிருக்கின்றன? அறிவானது இங்ஙனமிருக்கின் அயலாகிய அவத்தாத்திரய முதலியவைகளெங்ஙனமிருக்கவேண்டியது? வியாப்பியமாயும், சடத்துவமாயும், இருள்வடிவாயுமிருக்கவேண்டியதன்றோ? அறிவாகியநாம் ஒளிப்பொருளாயின் (அதாவது பிரகாச சொரூபமாயின்) எஞ்ஞான்றும் பிரகாசித்துக் கொண்டன்றோ விருக்கவேண்டும்? இஞ்ஞான்று பிரகாசசொரூபமா யிருக்கவில்லையேயெனின்,

அறிவானது நித்தியப்பிரகாச சொரூபமாயினும் அதனையறியக்கூடிய நமது திருஷ்டியாகிய விர்த்தியானது எஞ்ஞான்றும் நாமரூபங்களின் சகிதமாக வேயிருக்கின்றபடியினல் அவ்வறிவின்பிரகாசம் விளங்குகின்றதில்லை. ஆதலின் நமது திருஷ்டியாகிய விர்த்தி இஞ்ஞான்று நாமரூப ரகிதமாயிருக்குமாயின் அறிவின் பிரகாசம் விளங்கும். அங்ஙனம் ஏன் நமது திருஷ்டி யிருக்கக்கூடாது? தோஷத்தை நம்பேரிலேற்றிக்கொண் டிருப்பதைக் கவனியாமல் அறிவு பிரகாசவடிவ மன்றெனச் சொல்லலாமா? சுழுத்தியவத்தையானது நாமரூப ரகிதமா யிருக்கின்றமையால் அறிவினது பிரகாசம் ஆங்கு விளங்கலாமே! ஏன் விளங்குகின்றதில்லையெனின், அறிவதற்கேதுவாகிய திருஷ்டியென்னும் விர்த்தியேஅச்சுழுத்தியவத்தைக்கண் இல்லாதிருக்கின்ற படியினல் அறிவின் பிரகாசத்தை யறிவதெங்ஙனங் கூடும்? அன்றியும் அறிவுப்பிரகாசத்தினல் தோற்றிக் கொண்டிருக்கிற சாக்

கிர சொப்பனக்காட்சிகளை விடாது நாடிக்கொண்டிருக்கும் இத்திருஷ்டியானது அவற்றைவிட்டு நழுவிய அவசரமன்றோ சுழுத்தியெனப்படுவது? அங்ஙனமாகிய சுழுத்திக் கண் பிறிதொன்றின் நிலைமையை யெங்ஙன மறிதற்பால தாகும்? இங்ஙனம் விர்த்திதோஷத்தினல் அறிவினது பிரகாசமானது விளங்காவிடினும் அதனல் விளங்கப்படுகின்ற மற்றவற்றைக் கொண்டாவது அதற்குப் பிரகாசமுள்ள தென்று யூகிக்கவேண்டுமென்க. அறிவினது பிரகாசத்தினல் விளங்கப்படுகின்றவை யாவையெனின், சாக்கிரசொப்பனங் களில் நாமரூபங்களும், சுழுத்தியில் பாழும் விளங்குகின்றனவன்றோ? ஆமெனின், இவை எதனது பிரகாசத்தினல் விளங்கப்படுகின்றன? அறிவினது பிரகாசத்தினலன்றோ? இதனல் அறிவானது மூன்றவத்தைக் கண்ணும் விடாது பிரகாசித்துக்கொண்டிருக்கின்றதெனஏற்படுகின்றதன்றோ? அன்றியும், தற்பிரகாசமாகிய இவ்வறிவுப் பிரகாசத்தைப் பற்றி ஓர் திருஷ்டாந்தமும் உண்டு. அஃதெங்ஙனமெனின்,

இரவில் நாடகமாடப்படுகின்ற ஓர்மேடையில் விளங்குகின்ற தீபப்பிரகாசமானது அம்மேடையின்கண் வந்து நடிக்கின்ற பலவேடவுருவங்களையும் விளக்கிக்கொண்டிருக்க, அவ்வேடங்களாகிய காட்சிகளைப் பலரும் மிகுபிரியத்துடன் பார்த்துக்கொண்டிருக்கின்றார்கள். இங்ஙனம் பார்த்துக்கொண்டிருப்பவர்களின் திருஷ்டிகளுக்குப்பலனகத்தோற்றுகின்ற அவ் வேடவுருவங்களெல்லாம் திடீரென ஒருங்

கேமறைகின்ற அவசரத்தில் பார்ப்பவர்களின் திருஷ்டிகளுக் குப்பலனுக அஞ்ஞான்று யாதுதோற்றுகின்றது? பாழென் பதன்றோ? அப்பாழும் எதில்விளங்குகின்றது? வேடங்களை விளக்கிக்கொண்டிருந்த ஷெ தீபப்பிரகாசத்திலன்றோ? அத் தீபப்பிரகாசமானது வேடவுருவங்கள் மறையுஞான்று விள ங்குகின்றதா? இன்றெனின், அத்தீபப்பிரகாசமே இன்றென் பதா? அஃதில்லையாயின் ஷெ வேடவுருவங்களும், அவை கள் மறையுஞான்று பாழும் எதனிடத்து விளங்குகின் றன? இருளினிடத்தா? அன்றெனின், பின்னரெதனிடத்து விளங்குகின்றன? ஷெ தீபப்பிரகாசத்தி னிடத்தன்றோ? ஆமெனின், இங்ஙனம் வேடங்களுக்கு முன்ஞான்றும் பின் ஞான்றுமிருந்து பாழையும், இடைஞான்றிருந்து வேடங் களையும் விளக்கிக்கொண்டிருக்கின்ற தீபப்பிரகாசமானது, ஏன் திருஷ்டிக்கு விளங்கக்கூடாது? அது நமது திருஷ்டி தோஷத்தாலன்றோ விளங்காதிருக்கின்றது? அஃதெங்ஙன மெனின், வேடங்கள் தோற்றுஞான்று அவற்றையே நாடி யிருந்த திருஷ்டியானது, அவ்வேடங்கள் மறைந்த அவசரத் தில் ஆங்குள்ள பாழை நாடுகின்றதேயன்றி வேடங்களையும் பாழையும் விளக்கிக்கொண்டிருக்கின்ற (தீபப்) பிரகாசத் தை நாடுகின்றதின்றுகலி னென்க.

இத்திருஷ்டாந்தம் போலவே, தார்ஷ்டாந்தத்தில் நமது திருஷ்டியானது சாக்கிர சொப்பனங்களில் நாமரூபங்களை நாடிக் கொண்டிருந்து அவைகள் நழுவிய (மறைந்த) அவச

ரமாகிய சுழுத்தியில் பாழை நாடுகின்றதே யன்றி அந்நாம ரூபங்களையும் பாழையும் அவத்தைகள்தோறு மிருந்து விடாது விளக்கிக் கொண்டிருக்கின்ற தற்பிரகாச மாகிய அறிவுப் பிரகாசத்தை நாடுகின்றதில்லை. ஆதலின் இது திருஷ்டி தோஷமே யன்றி வேறன்றென்க. சொப்பனத்தில் நாமரூபங்களையும், சுழுத்தியில் பாழையும் விளக்குவது அறிவுப்பிரகாசமே யென்று சம்மதிக்கினும் சாக்கிரத்தில் நாமரூபங்களை விளக்குவது யாது? இரவியாதியின்பிரகாசமன்றோ? அதாவது சூரியன், சந்திரன், அக்கினி; இங்ஙனமிருக்க அறிவுப் பிரகாசமே விளக்குகின்றதென்பதை யார் சம்மதிப்பார்களெனின், இரவியாதி விளக்கங்களும் விளங்குவது எந்த விளக்கத்தினால்? நேத்திர இந்திரிய மாகின்ற விழிவிளக்கத்தினாலன்றோ? ஆதலின் இவ்விழி விளக்கத்தையன்றி இரவியாதி விளக்கங்கள் கிஞ்சித்துஞ் சிரேஷ்டமன்றென்க.

விழியையும் மற்ற உருவங்களையும் விளக்குவதற்கு இரவியாதி விளக்கங்க ளிருக்க, அங்ஙனமின்றி இரவியாதி விளக்கங்களை விழியானது விளக்குகின்றதென்ப தென்னையெனின், இரவியாதிகள் விளக்க சொரூபங்களேயெனினும் சித்துவிளக்கம், சடவிளக்கமென விளக்கம்இரண்டாயிருக்கின்றதனால், அவற்றுள் இரவியாதிசடவிளக்கமாயிருக்கின்றன. அறிவென்பதோ சித்து விளக்கமாயிருக்கின்றது. சடவிளக்கமாகிய இரவியாதிகள் சடமாகின்ற நாமரூபங்களைமாத்

திரம் விளக்குகின்றன. சித்து விளக்கமாகிய அறிவுவிளக்கமானது சடமாகின்ற நாமரூபங்களையும், சிற்சடமாகின்ற சீவாந்தக்கர ணேந்திரியங்களையும் விளக்குகின்றது. அன்றியும் இச்சித்து விளக்கமானது, வியாபக சாட்சி விளக்கமாயிருக்கின்றது. சீவன், அந்தக்கரணம், இந்திரியம் ஆகிய இவற்றைச் சிற்சடமென்றுகூறுவானேனெனின்,சீவனனது அந்தக்கரணம், இந்திரியம், விடயமென்னுமிவற்றை அறிகின்ற படியினால் சித்தென்று கூறப்படுகின்றது. ஆயினும் இஃதாராயுஞான்று கற்பனைகளையே பொருள்களாக மருண்டறிகின்றதனாலும், அங்ஙன மறிகின்ற தன்னை அறியாததனாலும், சாட்சி சைதன்னிய மாகின்ற அகம் பொருளால் தான் அறியப்படுகின்றதனாலும் சடமென்று கூறப்படுகின்றது. இங்ஙனம் ஆராயாஞான்று சித்தாயும், ஆராயுஞான்று சடமாயு மிருப்பதுபற்றி அச்சீவனைச் சிற்சீடமென்று கூறவந்ததென்க.

இங்ஙனமே அந்தக்கரணமானது இந்திரிய விடயங்களை யறிகின்றதனால் சித்தாயும், தன்னையறியாததனாலும், தனக்குமேலோர் சித்தாகிய சீவனுக்குத் தான் அறிபடுபொருளாகின்றதனாலும் சடமாயு மேற்படுவதுபற்றிச் சிற்சடமென்று கூறப்பட்டது. இந்திரியமோவெனின்,அஃதும் சத்தாதி விடயங்களை யறிகின்றதனால் சித்தாயும், தன்னையறியாததனாலும் தனக்குமேற்பட்ட சித்தாகிய அந்தக்கரணத்தால் அறிபடுகின்றதனாலும் சடமாயு மேற்பட்டுச் சிற்

சடமாகின்றதென்க. சித்துப்போலிகளா யிருக்குஞ் சீவன் முதலாகிய இவை சிற்சடமென்று கூறப்படினும் சடமென் பதே துணிபென்க. அவை எங்ஙனஞ் சடமாகுமெனின், சித்திற்குச் சடமும், சடத்திற்குச் சித்தும் எதிர்மறையாகின்றதனால், இவ்வெதிர்மறைத்தர்மமாக ஷ சீவாந்தக்கரணாதிகள் ஒவ்வொன்று மிருத்தல் அசம்பவம். ஆதலின் சித்தாகவேனுஞ் சடமாகவேனும் இருத்தல் வேண்டும். சித்தென்றுகூறின் தோடமென்னையெனின், ஆராயுஞான்று சித்தாகவேற்படுகின்றனவா? இன்றெனின், பின்னரெஞ்ஞான்றுசித்தாகவேற்படுகின்றன? ஆராயாஞான்றெனின், ஆராய்தல்விவேகமா? அவிவேகமா? விவேகந்தானெனின், இதனால் ஆராயாமை யென்னவெனப்படும்? அவிவேகமெனப்படுமன்றோ? இவ்வவிவேகத்தா லேற்படுகின்றதை யதார்த்தமாகக் கொள்ளலாமா? விவேகத்தினு லேற்படுகின்றதை யதார்த்தமாகக் கொள்ளலாமா? விவேகத்தினு லேற்படுகின்றதையன்றோ யதார்த்தமாகக்கொள்ளல்வேண்டும்? ஆதலின் ஆராய்தலாகின்ற விவேகத்தினால் ஷ சீவாந்தக்கரணாதிகள் சடமென்றேற்படுகின்றமையால் இதுவே சித்தாந்தமென்க.

நிற்க சித்துவிளக்கமாகின்ற வியாபக சாட்சி விளக்கமென்னும் அகம்பொருளின் சந்நிதான விசேடத்தினால் சிற்சட விளக்கங்களு ளொன்றாகிய சீவனும், இச்சீவனால் அந்தக்கரணமும், அந்தக்கரணத்தால் இந்திரியமும் விளக்க (அறிய) ப்படுகின்றது போல, சட்சு இந்திரியமாகின்ற விழியால் இரவியாதி சடவிளக்கங்கள் விளக்க (அறிய)

ப்படுகின்றனவாகலின் இவைகள் அவ்விழியினும் சிறப்பு டையனவாமோ? ஆகாவன்றோ? இங்ஙனம் இரவியாதி யுலக சடங்களை விழியிந்திரியம் விளக்குவதுபோல இவ்விழியு டன் ஏனைய இந்திரியங்களை அந்தக் கரணமும், அந்தக் கர ணத்தைச் சிதாபாசனாகிய சீவனும், சீவனைச்சாட்சிமாத்திர மாயுள்ள வியாபக விளக்கமென்னும் அகம்பொருளும்விளக் கிக்கொண்டிருப்பதால், இப்பரமவிளக்கமாகிய சித்து விளக்கத்திற்குமுன் சிற்சட விளக்கங்களாகிய சீவாந்தக்கர ணாதிக ளென்னபயன்படும்? இவைகளே பயன்படாவாயின் இவைகளினுந் தாழ்ந்த சடவிளக்கமென்னும் இரவியாதி கள் என்னபயன்படப் போகின்றன?

அன்றியும் அறிவென்பது கற்பனையாகச் சீவவேடங் கொண்டிருக்கும் அத்தியாசத்தால், இந்திரியாதிகளின் துணையோடு உலகப்பொருளை யறிவதற்கு இரவியாதிகள் இயைந்திருக்கின்றன. அதிலும் சாக்கிராவத்தைக்கு மாத்தி ரம் இயைந்திருக்கின்றன. ஆயினும் பிரமவிளக்கமாகிய அறிவுவிளக்கத்திற்கு மற்றெவ்விளக்கத்தின் உதவிவேண் டும்? அவ்விளக்கமோ உதயாஸ்தமனமென்பதின்றிச் சதோ தயமாகவிருக்குந் தற்பிரகாசமென்னும் விளக்கமாயிருக்கி ன்றதே! இதனாலன்றோ,

தசகாரிய மகாவாக்கியம்.

"ஞானமே பிரமமென்ற முதன்மொழியின் பயன்கேள்
நாச்செவிகண் மெய்ம்மூக்கு நயந்தபொறி யதனால்

ஆனசுவை யோசையொளி பரிசம்வா சனையால்
அறிவதுவே ஞானமதின் பிரகாச முரைக்கின்
வானிரவி திங்களங்கி பிரகாச மதினும்
மலர்விழிகள் பிரகாச மனமதிற்பிர காசம்
தானமுறு சீவனதிற் பிரகாச மதினும்
தன்னறிவே பிரகாசத் தானமெண வறியே."
எனப்பிறந்திருக்கின்றது? ஆதலின் இதனை யுற்றுணர்க.

அன்றியும் திரிகாலஞானிகளெனும் யோகிகள் ஆங்காங்குநிகழும் நாமரூபாநுபவங்களாகிய விவகாரங்களையும், பிறரது அந்தக்கரணத்தில்நிகழும் எண்ணங்களையும் அறிகின்றனரன்றோ? அங்ஙனம் அவர்களாலறியப்படும் * யோகஜதர்மக்காட்சிகள் எந்தவிளக்கத்தினால் விளங்கப்படுகின்றன? இரவியாதிவிளக்கங்கள் யாதேனும் ஆங்குண்டா? இன்றன்றோ? இன்றாயினும் ஷை காட்சிகள் அவர்களுக்கு விளங்கிக்கொண்டிருக்கின்றனவாதலால், அவற்றைவிளக்குவது யாது? யோகாநுஷ்டானமென்னும் அரியதவப்பேற்றினால் ஷை திரிகாலஞானிகள் அறிகின்றார்களெனின், அவர்களறியும்ஆற்றல் தவத்தளவாகவரினும், அவர்களால் அறியப்படுங்காட்சிகளை விளக்குவிக்கும்விளக்கமொன்று உள

* யோகஜதர்மமாவது:—சாதாரணமாகக் காலம், இந்திரிய முதலானவைகளின் துணையைவிரும்பியுண்டாவதுபோலன்றி அவற்றின் துணையைவிரும்பாமலேயோகிகளுக்கு அவ்வியோகஅநுஷ்டானவல்லமையினால் உண்டாகின்ற நாமரூபாநுபவக்காட்சிகளாகும்.

தன்றோ? அவ்விளக்கந்தானியாது? அஃதன்றோ அறிவு விளக்கமென்பது? அவ்விளக்கமும் தவத்தளவாகவருவதும், தவமில்லாதழிப் போவதுமாயிருக்கின்றதோ? அங்ஙனமன்றே! பின்னரெங்ஙனமெனின், அது தற்பிரகாசம் அதாவது தானாகியவியாபகவிளக்கமாதலினாலும், காலத்திரயத்திலுங்கட்டுண்டழியாத காலாதீத நித்தியப்பொருளாதலினாலும் என்றும் இருந்தபடியே பிரகாசசொரூபமாக இருக்கின்றதென்பதற்கு ஐயமின்றென்க. இவ்வியாபகவிளக்கமாகிய அறிவுவிளக்கமானது சதோதயமாகவிருந்தும் அவத்தைகள்தோறும் விளங்காதிருப்பது முற்கூறியவாறு நமது திருஷ்டியாகியவிர்த்தியானது இவ்வியாபகவிளக்கத்தில்மாறிமாறித்தோன்றுகின்ற நாமரூபங்களையும், பாழையுமே பயனாகநாடிக்கொண்டிருத்தலினாலன்றி வேறன்றென்க.

சாக்கிர, சொப்பனமாகிய இவ்விரவத்தைகளில்மாத்திரந்தான் விர்த்தியென்னுந்திருஷ்டியுண்டு. ஆயினும்,சுழுத்தியில் விர்த்தியேயின்றாதலின் அவ்விர்த்தி பாழைநாடுகின்றதென்பதென்னையெனின், விர்த்தியானது அந்தக்கரணவிர்த்தியென்றும், அவித்தியாவிர்த்தியென்றும் இருவகுப்பாயிருக்கின்றது. அவற்றுள், அந்தக்கரணவிர்த்தியானது ஓர்விடயத்தையறியுஞான்றுதோன்றி அவ்விடயாகாரமாக நிகழ்ந்து அவ்விடயமிருக்குஞான்றேஅழிந்துபோகக்கூடியதாயிருப்பது. (அங்ஙனமழியுஞான்று அதனாலறியப்பட்டவிடயமும் அழிந்துபோவதில்லை.) அதாவது கடத்

தையறியுஞான்றுதோன்றிய விர்த்தியானது கடாகாரமாக நிகழ்ந்து அக்கடமிருக்குஞான்றே யழிந்துபோகின்றது. (அஞ்ஞான்று அதனாலறியப்பட்டகடமும் அழிந்துபோவதில்லை.) இவ்வந்தக்கரணவிர்த்தியே எண்ணிறந்தனவாய் ஒன்றன்பின்ஒன்றாய்ச் சாக்கிர சொப்பனங்களில்தோன்றி நிகழ்கின்றது. அன்றியும் (அக்கினியால்) உருக்கப்பட்ட உலோகமானது தாரை (துவாரா) வழியாகச்சென்று முன் ஞான்றே செய்துவைக்கப்பட்டிருக்கும் அச்சுஉருவங்களிற் பாய்ந்துஅவ்வுருவாகாரமாக ஆய்விடுவதுபோன்று இவ்வந்தக்கரணவிர்த்தியானது நேத்திரஇந்திரியமுதலாகிய தாரை வழியாகச்சென்று விஷயங்களாகிய உருவங்களினகாரமாகின்றது (அதாவது விஷயவடிவாகாரமாகின்றது) எனவுஞ் சொல்லப்படும். என்னை,

கைவல்லிய நவநீதம்.

உருக்கிய தராநீர் நாநா வுருவங்க ளானாற் போல
விருத்திகள் கடப டாதி விடயமாய்ப் பரிண மிக்கும்.

என்றுகூறியவாற்றா லுணர்க.

அவித்தியாவிர்த்தியானது தன்னாலறியப்பட்ட விடயமும், தானும் ஏககாலத்தில்தோன்றி நிகழ்ந்து அழியக்கூடியதாயிருப்பது. (அங்ஙனமழிந்தபின்ஞான்று தன்னாலறியப்பட்டவிடயம் அழியாதிருப்பதில்லை.) அதாவது சுகாகாரமாகவெழுந்த விர்த்தியானது அதனாலறியப்பட்ட சுகத்தோடுதோன்றி நிகழ்ந்து அழிந்துவிடுகின்றது. (இவ்வி

ர்த்தியழிந்தபின்னொன்று சுகமானது அழியாதிருப்பதில்லை.) இவ்வவித்தியாவிர்த்தியே சுழூத்தியில்தோன்றி நிகழ்கின்றது. இச்சுகாகாரவிர்த்தியைப்போலவே மூடாகாரவிர்த்தியானது சுழூத்திக்கணிருந்து பாழையுணர்கின்றது. ஆதலின் சுழூத்தியின்கண் விர்த்தியென்ப தின்றென்னும் ஐயமொழிக.

இங்ஙனம் நாமரூபங்களும் அஃதொழிந்தனொன்றுபாழுமாக விளங்குகின்ற இவ்விருபேதங்களும் நமது திருஷ்டியினது தர்மமேயன்றிக்கிஞ்சித்தும்வேறன்றென இதுகாறுங் கூறிவந்தஞாயங்களால் விளங்குகின்றதன்றோ? இனியேனும் ஐயமகன்றிருத்தற்குக் கூடுமா? நமது திருஷ்டிதோஷத்தினால் அறிவினது பிரகாசமானது விளங்காதிருக்கின்றதென்பதற்குக் கூறியஞாயங்களால் அவ்வையமானது அகன்றும், நாமேவிபாபகசாட்சிவிளக்கமயமாயிருக்கின்றனமென இதுகாறும் உணர்த்திக்கொண்டுவந்தும் ஐயமென்னுஞ் சமுசயஞானம் கிஞ்சித்தகன்றதேயன்றி முற்றுமகலவில்லையே! ஆதலின் அவ்வியாபகசாட்சிவிளக்கமானது இலட்சியமாகுமாறு மீண்டும்வற்புறுத்திக்கூறவேண்டுமெனின், முன்னொன்றே கூறப்பட்டுள்ளதை மீண்டுங் கூறுவது 'கூறியதுகூற' லெனுங் குற்றமாயினும், பயன்கருதிக் கூறியதையேகூறலாமென்றும், அங்ஙனங் கூறுவதற்கு 'அநுவாத' மென்றும் பெரியோரது வழக்கிருக்கின்றமையினால் கூறுதும்.

இச்சாக்கிராவத்தையிலேயே நமது அகமென்னும்இடத்தில் நினைவெழுச்சிகள் (எண்ணங்களாகியவிர்த்திகள்) அந

ந்தநாமரூபங்களாகத் தோன்றிவிளங்கி மறைகின்றனவாக லின் இங்ஙனந்தோன்றிவிளங்கிமறைதலாகின்ற புடைபெய ர்ச்சிகள்எதன்கண் இயங்கிக்கொண்டிருக்கின்றன? ஷெ நமது அகமாகின்ற இடத்தில்தானெனின், அவ்வகமாகின்றஇடம் எத்துணையா யிருக்கின்றதெனச் சொல்லப்படும்? அவ்வி டம் வெளியாயிருக்கின்றமையாலும், எல்லையற்றிருக்கின் றமையாலும் இத்துணையதென அரியரப் பிரமாதியரா லுங் கூறுதற்குக் கூடாததாயிருக்க நாம் எங்ஙனங்கூறு வதெனின், அங்ஙனமாகியவெளியென்பது சித்துப்பொரு ளென்பதா? சடப்பொருளென்பதா? சடப்பொருள்தானெ னின், அது பூதாகாயமெனப்படும்! படுமாயின் அதினின் றெழுமெழுச்சிகள் சடமாகின்றநாம, ரூப தூலநனவெழு ச்சிகளா யிருக்கவேண்டுமே! எங்ஙனமெனின், நீரின்கணிரு ந்தெழுந்த அலை, திவலையாதிகள்நீராகவும், மண்ணின்கணிரு ந்தெழுந்த கட, கலசாதிகள்மண்ணாகவும் இருக்குமாறு அகமாகின்ற வெளியானது சடப்பொருளாயின் அதன் கணிருந்தெழுந்த நினைவெழுச்சிகளாகியவிர்த்திகள் சட மாயன்றோவிருக்கவேண்டும்? சித்தாயிருக்கின்றனவே! ஆத லின் (இவைகட்குபாதனமாகிய) அகமென்னும்வெளியும் சித்துப்பொருளென்பதற்கு முரணின்றெனக.

இந்நினைவெழுச்சிகளாகிய விர்த்திகள் விளங்கியிருந் தொடுங்குஞான்று யாதாய்முடிகின்றன? மறைந்துபோகி ன்றனவெனின், தாமெழுவதற்காதாரமாகிய ஷெ வெளி யைவிட்டுநீங்கி எங்கேமறைந்துபோகின்றன? அங்ஙனம்

போகின்றவை ஒஷி வெளியின்கணொடுங்கி அவ்வெளியாய் விடுகின்றனவா? அன்று? வெளியாகவேஆகின்றனவெனின், அவைகளங்ஙனம்ஆவானேன்? சுபாவமெனின்,கட, படமுதலியவைகள் மண், நூல்முதலியனவாக ஆவானேனென வினவெழின், முதற்காரணமாகிய மண், நூல்முதலியவைகளினின்று ஒஷி கட,படமுதலியனவாகிய காரியங்கள் விகற்பித்துத்தோன்றி விளங்கியிருந்தமையால் மீண்டும் தத்தம் முதற்காரணங்களாக ஆகின்றனவெனக்கூறுது சுபாவமெனக்கூறுவது அறிவுடைமைதானோ? இஃதறிவுடைமையாகுமாயின் அஃதுமறிவுடைமையாகும். ஏனெனின், ஒருபாதானத்தின்கணின்றெழுந்தஉபாதேயமானது அவ்வுபாதானத்தின்அம்சமாகவேயிருத்தலால் மீண்டும்ஒடுங்குஞான்றுஒஷி உபாதானமாய்ஆகவேண்டியவாறு, அகமாகின்றவெளியென்னும் உபாதானத்தின்கணின்றெழுந்த நினைவெழுச்சிகளாகிய உபாதேயங்கள் அவ்வுபாதானத்தி னம்சமாகவேயிருத்தலால் மீண்டும்ஒடுங்குஞான்று ஒஷி உபாதானமாகவேஆய் விடுகின்றனவெனக்கூறுது சுபாவமெனக்கூறியதனாலென்க.

[ஆரம்பாதி முப்பட்ச காரியத்தோகை]

அகமாகின்றவெளிப்பொருளானது இங்ஙினைவெழுச்சிகளாக விகற்பித்ததாயினும் அங்ஙனம்விகற்பித்தது ஆரம்பபட்சமாகவா? பரிணாமபட்சமாகவா? அன்றிவிவர்த்தபட்சமாகவா? ஆரம்பபட்சமென்பாமெனின், அது ஓர்முதலானது தன்னியல்புகெடாமலே இரண்டேதுக்களினால்குண

பேதமாகக்காரியப்பட்டுமற்றோர்முதல்போலநிகழ்வது. அஃதெங்ஙனமெனின், மண்ணாகியமுதலானது தன்னியல்புகெடாமலே நிமித்தகாரணந், துணைகாரணமாகியவிவ்விரேதுக்களினால் அடிகுவிந்து இடைபெருத்து வாயகன்றிராநின்ற குணபேதமாகக்காரியப்பட்டுக் கடமென்னும்பெயரோடு மற்றோர்முதல்போலநிகழ்கின்றவாறென்க. இதுபோலவே ஷெ வெளிப்பொருளானது நினைவெழுச்சிகளாகவிகற்பித்ததெனின், மண்ணாகியமுதற்பொருளுக்குவேறாய் இருகாரணங்களாகியஏதுக்களிருந்து குணபேதமாகக் காரியப்படுத்துமாறு அகமென்னும் வெளிப்பொருளுக்குவேறாக யாதொரு காரணங்களுமின்றே! ஆயினும் நினைவெழுச்சிகளாகிய விகற்பங்கள்மாத்திரந் தோன்றுகின்றனவன்றோ? தோன்றுகின்றனவாதலால் அகமாகின்றவெளிப்பொருளானது ஆரம்பட்சமாகக் காரியப்பட்டதன்றென்க.

அற்றேல் பரிணாமபட்சமென்பாமேயெனின், அது ஓர் முதல்திரிந்து மற்றோர்முதலாகக் காரியப்பட்டுநிகழ்வது. அஃதெங்ஙனமெனின், பாலாகின்றமுதலானது சில ஆற்றல்களால்திரிந்து (கெட்டு) ததியென்கிறமற்றோர்முதலாகக் காரியப்பட்டு நிகழ்கின்றவாறென்க. இதுபோலவே ஷெ வெளிப்பொருளானது நினைவெழுச்சிகளாக விகற்பித்ததெனின், பாலென்கிறமுதலானது வேறுசிலபொருள்களின் ஆற்றலால் திரியுமாறு வெளியென்பதுதிரிவதற்கும் வேறுசில பொருள்களின் ஆற்றல்வேண்டும். அங்ஙனம் வெளிக்குஅந்நியமான வேறுபொருள்களின் ஆற்றல்கிடையாது. அன்றி

யும் பாலானது திரிந்து ததியாயின்பின்ஞான்று, இத்ததியானது மீண்டும்பாலாவதில்லை. வெளிப்பொருளானதும் இங்ஙனமே திரிந்துநினைவெழுச்சிக ளாயினதெனின், மீண்டும் இந்நினைவெழுச்சிகளாகிய விர்த்திகள் ஷை வெளிப்பொருளாகாவே! அங்ஙனமின்றி அவ்வெளிப் பொருளாகவேஆகின்றமையால் பரிணாமபட்சமாகவும் விகற்பித்ததன்றெனக.

அற்றேல் விவர்த்தபட்சமென்பாமே யெனின், அங்ஙனங்கூறுவதேசான்றாம். ஏனெனின், விவர்த்தபட்சமாவது ஓர்முதலானது இருகாரணங்களாகிய ஏதுக்களினல் காரியபேதப்படாமலும், தனதுசொரூபந்திரிந்து மற்றோர்முதலாகாமலும் இருந்தபடியேயிருக்க அதன்கண் தோற்றன்மாத்திரமாக மற்றோர்முதல் விகற்பித்துநிகழ்வது. அது கயிறென்னும்முதற்பொருளானது யாதொருகாரியபேதமும், திரிதலுமடையாமல் இருந்தபடியேயிருக்க அதன்கண் அரவென்பது தோற்றன்மாத்திரமாக விகற்பித்து மற்றோர்முதல்போல நிகழ்கின்றவாறெனக. இதுபோலவே வெளிப்பொருளானது இருகாரணங்களாகிய ஏதுக்களினல் காரியபேதப்படாமலும், தனதுசொரூபங்கெட்டு மற்றோர்முதலாகாமலும் இருந்தபடியே இருக்க, இதன்கண் தோற்றன்மாத்திரமாக நினைவெழுச்சிகளென்னும் விர்த்திகள் விகற்பித்துத் தோன்றி, விளங்கி, மறைகின்றனவாகலின் இவ்விவர்த்தபட்சமாத்திரந்தான் ஏற்கற்பாலதெனக.

இங்ஙனமெழுகின்ற நினைவெழுச்சிகளுக்கு ஷை வெளிப்பொருளானது ஆதாரமாயிருப்பதோடு உபாதானகாரண

மாயும் இருக்கின்றதன்றோ? இருக்கினும் இவ்வெழுச்சிகளை அறிகின்றவினைமுதல் நாமெனப்படுமோ? வேறொன்றெனப் படுமோ? நாமேயெனின், நாம் எங்கிருந்து இவற்றையறிகின் றனம்? தூலோபாதியாகின்ற உடல்களின்கண் இருந்து அறி கின்றனமெனின், இவ்வுடல்கள் பிராதிபாஸிகதோற்றமெ னப்படாது பாரமார்த்திக சத்தெனப்படட்டுமே! அப்பார மார்த்திகசத்தானது முப்போதும் அல்ல இல்லையென்பதற் கியையாது ஆம், உண்டென்பதற்கே யியைந்திருக்கின்றதே! இவ்வுடல்கள் இங்ஙனந்தானிருக்கின்றனவோ? அல்லவே! ஆகலின், கற்பனைத்தோற்றமென்பதற்கு இழுக்கென்னை? இன்றாகலின், இக்கற்பனைத்துணை நாம்இருக்கின்றனமென் பதுங் கற்பனையன்றோ? அன்றியும் பகிர்முகத்தில் சாக்கிரா வத்தாக்காட்சிகளாகிய தூலமாகியநினைவெழுச்சிகளை இத் தூலவுடலாகியஉபாதித்துணையாக இருந்தறிகிறதாகஆரோ பமுற்றிருப்பதுபோல, அந்தர்முகத்தில் சாயைகளாகிறசூக் ஷுமநினைவெழுச்சிகளை எவ்வுபாதித்துணையாயிருந் தறிகிற தாக ஆரோபமுற்றிருக்கின்றனம்? ஷை சாயைகளாகிற நினை வெழுச்சிகளில் ஒவ்வோருபாதித்துணையாகவிருந்து அறி கின்றதாகவன்றோ?

இங்ஙனம் நம்மாலறியப்பட்ட தூல (நினைவெழுச்சிக ளாகிய) நாமரூபங்களென்னும் சாக்கிரநனவெழுச்சிகளும், சூக்குமநாமரூபங்களென்னும் சொப்பன நினைவெழுச்சிக ளும் நாமென்னுஞ் சாட்சிப்பொருளென்பனவா? அன்றெ

ணின், இவைகள் நம்மையன்றியுமுண்டா? இன்றெனின், நம மாலறியப்பட்ட இவைகள் நாமன்றென ஆகின்றதாயின் இந் நனவெழுச்சிகளுள் ஒன்முகிய தூலோபாதியும், நினைவெ ழுச்சிகளுள் ஒன்முகிய சூக்குமோபாதியும் நாமெனப்படு மா? அன்றெனின், இவைகள் நம்மையன்றியுமுண்டா? இன் றெனின், இங்ஙனம் நாமன்முகவும், நம்மையன்றியின்முக வும் அத்தியாரோபமுற்றிருக்கும் உபாதிகளில் தூலோ பாதித்துணையாக இருந்து அறிகின்றனமெனக்கூறியது மிக்க அறியாமையன்ரே? தூலோபாதித்துணையாகவன்மு யினும் சாயாவடிவமாகின்ற சூக்குமோபாதித்துணையாகவா வது ஷை வெளியின்கணின்று அறிகின்றனமென்முல் என் னையெனின், இஃதும் ஷை தோடத்திற்குள்ளாகின்றதே!

அன்றியும் சாயாவடிவமாகஇருந்து அறிகின்றனமா யின் அவ்வெளிக்கண் எங்கெங்கே, எஞ்ஞான்றெஞ்ஞான்று நினைவெழுச்சிகள் எழுகின்றனவோ, அங்கங்கும், அஞ்ஞான் றஞ்ஞான்றும் நாம் எங்ஙனமிருந்தறிகின்றனம்? அவ்வெழுச் சிகள் எங்கெங்கேதோற்றுகின்றனவோ அங்கங்குமிருந்தே அறிகின்றனமெனின், அங்ஙங்குந் துண்டு, துண்டாகத்தா ஞே இருந்தறிகின்றனம்? அல்லவெனின், நாம்அறிந்துகொ ண்டிருப்பது ஓரிடத்திலா? அன்றிப்பலவிடத்திலுமா? ஓரி டத்தில்தானெனின், அவ்வோரிடத்தில் துண்டுப்பொரு ளாய் அதாவது கண்டத்துவமுற்றன்ரே இருக்கவேண்டும்? அங்ஙனமின்றிப் பலவிடத்திலிருந்து அறிகின்றனமென்பதி

லுந் தோடமுண்டோவெனின், பலவிடத்திலிருந்தறியினும் நாம் பலதுண்டுப்பொருள்களாக இருக்கவேண்டிவருமே! ஆகலின் நாம் தூலோபாதித்துணையாகவாவது, சூக்குமோபாதித்துணையாகவாவது நின்றறிகின்றனமன்றென்பதாயிற்று.

இதனால் நாம் நிருபாதிகமாக(அதாவது அருவபாவமாக) இருந்தறிகின்றனமோவெனின், உபாதிசகிதம்போலிருந்தாலும் உண்மையில் உபாதிரகிதமாகவேயிருந்து அறிகின்றனமென்க. இங்ஙனமாகிய நிருபாதிகமென்பது ஷ நமது அகமாகியவெளிப்பொருளா? அன்று? வெளிப்பொருள்தானெனின், நம்மாலறியப்பட்டநினைவெழுச்சிகளுக்கு உபாதானகாரணமென்பது யாது? நாமேயெனின், நம்மிடத்தில் தோன்றுகின்ற இந்நினைவெழுச்சிகள் விளங்குவதும், ஒடுங்குவதும் எங்கே? நம்மிடத்திற்றானேயெனச் சொல்லாது தப்பித்துக்கொள்ள வேறுவழியுள்ளதா? இன்றாதலின் நமதகமாகியஉள்ளம் வெளிப்பொருளென்பதற்குஐயமுண்டோ? பின்னும் அவ்வெளியானது சித்துவெளி (அதாவது) சிதாகாசமெனப்படுமன்றோ? இச்சிதாகாசமாகியநம்மிடத்தில் நனவு, நினைவு, கனவு, சுழுத்திமுதலிய சகலவாரோபங்களும் நிகழ்கின்றனவெனச் சமாதிகூடித்தெளிந்த ஆன்றோர்களது வாக்கியங்கள் வந்திருப்பதும் இதனாலன்றோ? எங்ஙனமெனின்,

**சொரூபசாரம்.**

தன்னிடத்தி லேதோன்றித் தன்னிடத்தி லேயிருந்து
தன்னிடத்தே கூடுஞ் சகத்தோற்றம் - தன்னைவிட

வேறன் றெனக்காண்ப ரல்லாலிவ் வீடுபெற்றோர்
மாறென்று காண்பரோ மற்று. எனவும்,

**குமாரதேவர்.**

தன்சத்தை யேயுண்டாய்த் தானிருக்கு மெப்போதுந்
தன்சத்தைதன்னிற்சகத்திற்குத்தானிருப்பே.எனவும்,
தன்னுடைய சந்நி தானத்தி னின்று
பின்னுலக மெல்லாம் பிறவின் விளங்கிடுமே. எனவும்,

**ரிபுகீதை.**

என்னிடையே கற்பிதமாய்த் தோன்று நின்ற
வீசசக சீவரெலா மென்னை யன்றிப்
பின்னமதா யொருக்காலு மிலவே யில்லை
பிறங்கியவச் சீவேச சகத்த னைத்தும்
மன்னுபரப் பிரமமதா நானே யென்று
மயக்கமற வறிந்ததனுன் முத்த னவாய்
சொன்னதிலோ ரையமிலை சத்தி யந்தான்
சுந்தரமாஞ் சிவனுணை யுண்மை சொன்னேன். என
வும் மற்றும் வருவனவற்றாற் காண்க.

நாமாகியவெளிப்பொருளானது நனவு, நினைவாதிசகல
வெழுச்சிகளுக்கும் இடமாயும், உபாதானமாயும் இருக்கி
ன்றதெனவேற்கினும் அவ்வெளியானது ஒளிப்பொருளா
யும்இருக்கின்றதென்பதில்மாத்திரந்தான் பின்னும் ஐயமய
மாயிருக்கின்றதேயெனின், அவ்வெளியானது ஒளிப்பொரு
ளன்றாயின் இருட்பொருளெனப்படுமே! இங்ஙனம் இருட்

பொருளெனக்கூறுவதை யாதினாலேற்கற்பாலது? ஒளிப்பொருளாயின், பிரகாசித்துக்கொண்டிருக்கவேண்டும்: அங்ஙனமின்றாதலால் இருட்பொருளென்றே கூறவேண்டுமெனின், அகமாகியவெளிப்பொருளானது இருண்மயமாயிருக்கின் இதன்கண் ஷை நனவு, நினைவெழுச்சிகள் எங்ஙனந் தோன்றிவிளங்கிக்கொண்டிருத்தற்கேலும்? இருளின்கண் எவ்வகைப்பொருளேனும்விளங்குமா? விளங்காதன்றோ? இவ்வெளிவியாபகத்தில் ஷை அனைத்தும்விளங்கிக்கொண்டிருத்தலால் இவைகள்மாத்திரம் எங்ஙனம்விளங்கக்கூடும்? அவ்வெளியின்கண் இரவியாதிகள் ஏதேனுமிருந்து ஷை நனவு, நினைவாதியெழுச்சிகளை விளக்கிக்கொண்டிருக்கின்றனவா? இன்றாதலின், அவ்விளக்கத்திற்குக் காரணம்யாதென்றுநிதானிக்கவேண்டுமன்றோ? எங்ஙனமெனின், ஷை நனவு, நினைவாதியெழுச்சிகள் வெளிப்பொருளின்கண் தோன்றிக்கொண்டிருத்தலால் அவ்வெளியே ஆதாரமாகிய இடமாயும், ஷை தோற்றங்கள் மீண்டும்அவ்வெளியாக ஒடுங்குகின்றமையால் அவ்வெளியேயுபாதானகாரணமாயும், ஷை எழுச்சிகள் எங்கெங்கேதோன்றுகின்றனவோ அங்கங்குமிருந்தறிந்துக்கொண்டிருத்தலால் அவ்வெளியேஞானமயமாயும் இருக்கின்றதெனநிதானித்துணருமாறு; ஷை எழுச்சிகள் எஞ்ஞான்றெஞ்ஞான்று தோன்றுகின்றனவோ அஞ்ஞான்றஞ்ஞான்றும் ஆங்காங்கிருந்து அவற்றைவிளக்கிக் கொண்டிருப்பதற்கு வெளிப்பொருளையன்றி வேறொன்றும் இன்றாதலால் அவ்வெளிப்பொருளே சொப்ரகாசமாகிய

விளக்கப்பொருளாகவும் இருக்கின்றதென நிதானித்துணர வேண்டுமென்றோ? இங்ஙனம் நிதானித்துணர்வதற்கன்றோ,

ஞான வாசிட்டம்.

அகமகமென் றனைத்துயிரி னிடத்துமிருந் தனவரத முரைப்ப தாகி, நிகழொளியா மாத்துமதத் துவமான சொரூபத்தை நினைத்தல் செய்வாம், திகழிதய குகையுறையுந் தேவனையை விட்டயலே தெய்வந் தேடல், மிகவரிய கவுத்துவத்தை யெறிந்துசிறு மணிதேடும் வேட்கை போலாம். எனவும்,

இதுவுமது.

பகர்வரிதாய் முத்திராற் பயில்வ தாகிப் பரமுதலாம் புதிதான பலபேர் பெற்று, மிகவுணர்சாங் கியர்புருட னென்றுஞ் சுத்த வேதாந்தம் விளங்கினோர் பிரம மென்றும், துகளறுவிஞ் ஞானிகள்விஞ் ஞான மென்றுஞ் சூனியர்சூனியமென்றுஞ் சொல்லப் பட்டுத், திகழிரவி தேசுக்குந் தேசாய் நின்று தேசளித்துத் திகழ்வித்துத் திகழா நிற்கும். எனவும்,

இதுவுமது.

தானாகு மிகநொய்தா மாகாயத்தில்,சகத்திரளாஞ் சித்திரத்தைத் தானே கோட்டும், ஆனதவுலகமெலாந் தனது சோதி யானதினா லதற்குவே றயலொன் றில்லை, நீநானுஞ் சகபேத வடிவந் தானும் நிற்கின்ற வதன்பொருளா நீங்காதென்றும், நானாவாம் பொருட்புணர்வால் நடந்த தாகும் நடக்கவிட மிலாமையினால் நடவா தாகும். எனவும்,

ரிபுகீதை.

அறிவுருவா யமைவுற்ற வான்மா தானே
 யழியாம லிருப்பதனாற் சத்து மாகு
மறிவுருவா யமைவுற்ற வான்மா தானே
 யனைத்தையுமே விளக்குவதாற் சித்து மாகு
மறிவுருவா யமைவுற்ற வான்மா தானே
 யகிலர்க்கும் பிரியமதாற் சுகமு மாகு
மறிவுருவா யமைவுற்ற வான்மா தானே
 யந்தமிலா திருப்பதனா லநந்த மாகும். எனவும்,

தாயுமானவர்.

அத்துவித வத்துவைச் சொற்பிரகா சத்தனியை
 யருமறைகண் முறச றையவே
அறிவினுக் கறிவாகி யானந்த மயமான
 வாதியை யநாதி யேக
தத்துவ சொரூபத்தை மதசம் மதம்பெறாச்
 சாலம்ப ரகித மான
சாசுவத புட்கல நிராலம்ப வாலம்ப
 சாந்தபத வ்யோம நிலையை
நித்தநிர் மலசகித நிஷ்பிரபஞ் சப்பொருளை
 நிர்விஷய சுத்த மான
நிர்விகா ரத்தைத் தடத்தமாய் நின்றொளிர்
 நிரஞ்சன நிராம யத்தைச்
சித்தமறி யாதபடி சித்தத்தி னின்றிலகுந்
 திவ்யதே ஜோம யத்தைச்

சிற்பரவெ ளிக்குள்வளர் தற்பரம தானபர
தேவதையை யஞ்சலி செய்வாம்.

எனவும் மற்றுமிவ்வாறே அரிய வாக்கியங்கள் பிறந்திருக்கின்றன?

இங்ஙனமாகிய வெளிப்பொருளானது வியாபகசாட்சி விளக்கமயமா யிருக்கின்றதென * உத்தேச, இலட்சணத் திற்கியையப் பிரபல சுருதிகளி னாதரவைக்கொண்டு தாபித்தாலும் பரீட்சைக் கியைந்து விளங்கவேண்டுமேயெனின், அங்ஙன மியைந்து விளங்குகின்ற விளக்கமானது, இருவகைச்சமாதிகளெனும் அரியவுழைப்பையெய்தி இவ்வியாபக சாட்சியாய் நின்றார்க்கன்றோ விளங்கும்? எத்துணைக் கற்றிருந்துங்கண்டத்துவமாக நின்றார்க்கு எங்ஙனம்விளங்கும்?

* உத்தேசமாவது, ஒருபொருளைப்பெயர்மாத்திரமாகக்கூறுவது. அதாவது மரையென்பது வனத்தின்கண்வாழுமோர் மிருகமெனக்கூறுவதுபோன்றது.

இலக்கணமாவது, அப்பொருள் இன்னவிதமான சிறந்தகுறியையுடையதெனக்கூறுவது. அதாவது அம்மரையானது பசுவைப்போன்றவடிவமாயிருப்பது: ஆயினும் அலை, தாடிஅவயவாகிதமாயிருப்பதெனக்கூறுவதுபோன்றது.

பரீட்சையாவது, ஷை பொருளானது அவ்விலக்கணத்தைப் பொருந்தியிருக்கின்றதா, இல்லையாவென நேரேசென்றுகாணுதல். அதாவது ஷைமரையானது அலைதாடி அவயவரகிதமா யிருக்கின்றதாவென வனத்தின்கண் சென்று பிரத்தியட்சமாக அறிவது போன்றது.

அன்னோர்க் கணுத்துணையேனும் விளங்காதோவெனின், பரமாணுத் துணையேனும் விளங்காதென்க. இதனை,

ஞான வாசிட்டம்.

முழுதுசத் தியுமாய்ப் புரணமா யென்றும் முடிவறு பிரமமா வதுதான், பழுதின்ஞா னிகடம் மனமலா தில்லைப் பரமமா மிதிலிலா தில்லை, எழுதருஞ் சத்தி யாவுமா யிலங்கு மிவைகளோர் காலமொன் றுளதாம், வழுவிலாப் பிரம முடையசிற் சத்தி மறிதரு முடல்களிற் றோன்றும். எனவும்,

பிரம கீதை.

தர்க்க மானந் தானொழியத் தானு யுள்ள பேரொளியை
மிக்க கர்த்தா வாகுதலும் விடய மாகு தலுமொழியப்
பொக்க மறவே றறக்கண்டு பொழுது புரைதீர் பொருளான
தக்க பிரம தத்துவத்தைக் கண்டா னுகுந் தானுக. எனவும்,

உத்தமவாதம்.

உள்ளஞ் சுயஞ்சோதி யொவ்வொருவ ருக்குமெனின்
உள்ளபடி காணும்வகை யோராதே—கள்ளமதக்
கற்பனைய தாக்கியதைக் காணுவதோ நம்புலமை
சொற்கடங்கார்க் கேதுயர்ந்தோர் சொல். எனவும்,

பிரத்தியட்சானுபூதி விளக்கம்.

அங்கிங் கெனுது விளங்கும் விளக்க மவரவரும்
அங்கங் கதுவா யிருந்து மறியா ரகங்கரத்தால்
அங்கங்குந் தம்மை யதுவா வறிவா ரகமதற்றோர்
அங்கங்குஞ் சோதிக்கிற் சிற்சோதி யன்றி யறிகிலமே. எனவும்,

இதுவுமது.

வியாபக மான விளக்கத்தை யன்றி விடயமில்லை
வியாபக நாட்ட நிலைக்கி னிலைக்கும் விளக்குமுந்தான்
வியாபக மான விளக்கம தாயிடின் மெய்யறிவாம்
வியாபக மான விளக்க நமதுரு வேறிலையே. எனவும்,

சொரூபசாரம்.

சாயையெனும் வாழ்குடும்பந் தன்னைச் சுமந்தாலும்
மாயையென்னு மேக மறைத்தாலும் - தூயவொளி
தானாய் விளங்கிச் சகசாட்சி யாயிருக்கு
ஞானதித் தன்றானே நாம்.

எனவும் கூறியவாற்றானும் நன்குணர்க. நன்குணரின் வியாபகசாட்சிவிளக்கமாயிருக்கின்ற வெளிப்பொருளானது, அவ்வியாபகசாட்சி விளக்கமயமாகத்தெளிந்த உள்ளமுடைய ஆன்றோர்களுக்கேயன்றிமற்றையர்க்குப்பரீட்சைக்கியைந்து பிரத்தியட்சப்படாதென்பது விளங்குமென்க.

இதுகாறுங்கூறிவந்ததில் ஐயமென்பது முற்றுமகன்றிருக்கவேண்டுமன்றோ? அங்ஙனமின்றேல் கூறலாம்! அகம் பொருளாகிய வெளியென்பது வியாபகசாட்சிவிளக்கமாயிருக்கின்ற தென்பதைப்பற்றிய ஐயமானது அகன்றாலும் அவ்வெளிப்பொருள் ஒன்றோ, பலவோவென்பதைப்பற்றி ஓர் ஐயமெழுந்ததேயெனின், அவ்வெளிப்பொருள் ஒன்றென்றாலென்னை? உயிர்கள் பலவாயிருக்கின்றதனால் அவ்வவ்வுயிர்களினுள்ளமாகிய அகமும் பலவாகவன்றோவிருக்க

வேண்டும்? அவ்வகமே வெளிப்பொருளென்றாலும் பலவென்றே கூறவேண்டுமெனின், உயிர்கள் பலவென்பது எதனாலேற்கற்பாலது? தேகம், போகம், கன்மம், அபிமானம் ஆகிய இந்நான்கும் ஒருவகுப்பாயிராமல் பலவகுப்பாக வித்தியாசப்பட்டிருப்பதனால் அவ்வத்தேக, போக, கன்ம, அபிமானங்களையுடைய உயிர்களும்வித்தியாசப்பட்டுப் பலவாயிருக்கவேண்டுமாகலினெனின்,இத்தேகபோகமுதலியவைகள் துண்டுதுண்டாகக் கண்டமுற்றிருப்பதுபோல வெளிப்பொருளுங் கண்டமுற்றிருக்கின்றதா? கண்டமுற்றிருக்கின்றதெனின்; எத்துணையாகக் கண்டமுற்றிருக்கின்றது? மகத்தாகிய சங்கற்ப வெழுச்சிகளெனும் நனவு, நினைவாதி விர்த்திகள் அநந்தமாகத் தோன்றி விளங்கி மறைவதற்கிடமாகவும், உபாதானமாகவுமிருக்கின்ற அகமென்னும் வெளிப்பொருளென்பது இத்துணையளவினையுடையதெனக் கணித்தற்கு யாராலியையும்?

தேகபோகமாதி அவத்தாத்திரய உபாதித்திரயங்கள் ஆரோபத் தோற்றமாதலின் பலவாகவிருக்கலாம். அவற்றினைமருவிச் சார்போதனைக விருந்து சீவித்துவரும் சீவனென்னும் உயிர்ப்பொருளும் ஆரோபமாதலால் பலவாயிருக்கலாம். இவ்வாரோபங்களுக்கெல்லாம் அதிட்டானமாயிருக்கும் யதார்த்தமாகிய வெளிப்பொருளானது எங்ஙனம்பலவாயிருக்கலாம்? சலத்தின்கணின்றெழுந்த அலைதிவலையாதி தோற்றங்கள் ஆரோபமாதலின் பலவாயிருக்கலாம்

இவைகளுக்கெல்லாம் அதிஷ்டானமாயிருக்கும் சலப்பொருளானது பலவாயிருக்கலாமோ? இங்ஙனமே வெளிப்பொருளும் தேகபோகமுதலியஉபாதி அவத்தைகளுக்கும், உயிர்ப்பேதங்களுக்கும் அதிஷ்டானமுற்றிருத்தலால் பலவென்பதன்றென்க. அன்றியும் இங்ஙனமாகிய உள்ளமென்னும் வெளியின்கண் சாக்கிரவத்தாப் பூதாகாயமும் சொப்பனவத்தா மனகாயமும், சுழுத்தியாவத்தாச் சூன்யாகாயமும் மாறிமாறிக்கொண்டிருத்தலால் அணிமை, சேய்மையென்பதிறந்துநிற்கின்ற இவ்வெளியின் விபுத்துவத்தை எங்ஙனமளவிட்டுக்கூறுவது? அவ்வெளியானது எல்லையிறந்ததென்பதனை,

தாயுமானவர்.

அங்கிங்கெனாதபடி யெங்கும்பிர காசமாய்
ஆநந்த பூர்த்தி யாகி. எனவும்,

ரிபுகீதை.

பகுத்திடுமோர் பேதமிலா தகண்டமான
பரமசிதா காயபரப் பிரம நானே.

எனவும்: அவ்வெளியினின்றே ஏனைய பூதாகாயமாதி தோன்றுகின்றன வென்பதனை,

தாயுமானவர்.

பெருவெளியா யைம்பூதம் பிறப்பிடமாய்ப் பேசாத
பெரிய மோனம். எனவும்,

விண்ணூதி பூதமெலாந் தன்னகத்தி லடக்கிவெறு
வெளியாய் ஞானக்
கண்ணூரக் கண்டவன்பர் கண்ணூடே யானந்தக் கடலாய்.
எனவும்,

ஞான வாசிட்டம்:

முடிவுகன வஞ்ஞான மில்லாநீ டியிலதுவா மும்மையாகி, யடர்தருஞா துருஞான ஞேயமெழுந் தொடுங்குமிடமதுவே யாகுந், திடவிசும்பன் ருயிருந்தும் விசும்பான நிலையதுவாஞ் சித்தம் புந்தி, படர்மனம்போய்த் தாவரம்போல் பெறுமுளறி வொப்பாமப் பரமரூபம். எனவும்,

இதுவுமது.

சுத்தமறி வாதலா லாகாய பாவனையாற் சூழ்விண்ணாகு, மத்திறனே யெப்பொருளும் பாவித்த போதுள்ள ததுவாமந்தச், சித்திடையே மூவுலகுந் திடர்கான லெனத்தோன்றிச் சிதையும் பல்கா, லித்தனையுஞ் செய்யவுந்தா னித்தனையுஞ் செய்யாம லிருக்கு மன்றே.

எனவும் கூறியிருக்கின்றமையினால் அவற்றை யூகித்துணர்க.

ஒவ்வொருவரும்நான்,நானென்றுகர்த்தத்துவமுற்றிருப்பினும் அகர்த்தாவாகிய நானென்பதற்குப் பொருள்நிச்சயம் யாதென இஞ்ஞான்று நன்குவிளங்குகின்றதன்றோ? விளங்குவதென்னை? அது சீவனென்பதையன்றி வேறுயாதிருக்கின்றதெனின், சொரூபம், சகசமென்னும் இருவகைச் சமாதிகளை எய்துவது யாதுக்காகவெனப்படும்? அச்சீவ

னெனப்படுவது கெடுவதற்காகவன்றோ? ஷை சமாதிக்கண் சீவனென்பது சொன்மாத்திரமாகவேனும் இருக்கின்றதா? இல்லையே! அது (பொருளல்லாததைப்பொருளாகப்பார்க்கும்) அஞ்ஞானதிசையிலன்றோ பொருளென்று விவகரிக்கப்படுகின்றது? (பொருளைப்பொருளாகப்பார்க்கும்) ஞானதிசையாகின்றசமாதிக்கண் பொருளெனப்படுவது ஷைவியாபகவிளக்கத்தையன்றி வேறுண்டா? இன்றாதலால்,

குமாரதேவர் சாத்திரம்.

தன்னைச்சீவனெனத்திரிவாய்த் தானின்றுணர்தலஞ்ஞானம்
தன்னைப்பிரமமெனதெளிவாய்த்தானின்றுணர்தலேஞானம்

எனவும்,

கைவல்லியம்.

எவருடை யருளால் நானே யெங்குமாம் பிரம மென்பால்
கவருடை புவன மெல்லாங் கற்பித மென்ற றிந்து
சுவரிடை வெளிபோல் யானே சொரூபசு பாவ மானேன்.

எனவுங் கூறுகின்றன. இங்ஙனமாகிய அகம்பொருளென்னும் வியாபகசாட்சிவிளக்கத்திற்கு அந்நியமாக ஒன்றுமின்றாதலினாலும், அந்நியமாகவிருப்பினும் ஆராயுஞான்று சொன்மாத்திரமாயும், தோற்றன்மாத்திரமாயும்முடிக்கின்ற பிராதிபாஸிகக்கற்பனையாக இருப்பதனாலும், இருப்பாகின்ற அகம்பொருளெனப்படுந்தன்னையே தனக்கு அளிக்கவேண்டுமென்பதற்கு யாதும்ஐயமின்றென்க. இதனாலேயே,

சோநபசாரம்.

என்னையே யல்லாமல் யான்பெற்ற தேதுமிலை
என்னையான் பெற்றிருந்த தெப்போதும் - என்னையன்றிப்
பந்தமுத்தி யில்லையால் பார்க்கிலிவை யாராயுஞ்
சிந்தனையு மில்லாத தே. எனவும்,

தாயுமானவர்.

அன்னை போல வருள்மிகுத்த மன்னு ஞான வரதனே
என்னை யேயெ னக்களித்த நின்னை யானு நினைவனோ.
எனவும் அரியவாக்கியங்கள் பிறந்திருக்கின்றன.

இதுகாறுங்கூறிவந்த மகத்தாகிய அறமென்னும் அரிய புருஷார்த்தமெனப்படுவது இதுவேயாமென்க.

முதலாவது

அறமென்னும் புருஷார்த்தம்

முற்றிற்று.

---

இரண்டாவது

# பொருளென்னும் புருஷார்த்தம்.

முன்னொன்று தன்னைத்தனக்களிக்கின்றதெனக் கூறிய தின்கருத்தாவது: முப்பொருள்களிருந்து அவற்றுள் ஒன்று மற்றொன்றுக்குப் பிறிதொன்றைக்கொடுத்தல் அதாவது 'வள்ளல் வறியவர்க்குப் பொன்னையீந்தான்'என்புழிக்கொடுப்பதொன்றும், அடைவதொன்றும், அடையப்படுவதொன்றுமாக முப்பொருள்களிருப்பதுபோலன்று. இருப்பாயிருக்கின்ற அகம்பொருளாகியஓர்முதலானது தானே தனது சுயபாவமாகிய வியாபகவுணர்விளக்கத்தைத் தன்னாலேயே தன்னிலேயே தனக்கே உள்ளவாறுவெளிப்படுத்திக்கொள்ளுதலாம். (அதாவது தனது சொரூபசுவாநுபவமாக நிலைத்திருத்தலேயாம்.) ஆகலின், அங்ஙனம்வெளிப்படுத்த வெளிப்படுந்தன்னைப் பற்றுகின்றதா? அன்று? பற்றவேண்டியது தானெனின், என்னவென்று பற்றவேண்டியது? பொருளென்றே பற்றவேண்டியதெனின், என்ன் பொருளென்று பற்றவேண்டியது? இதற்குமுன் எஞ்ஞான்றும்வெளிப்படாதிருந்த இச்சுயசொரூபமான தான் அருமையினும்அருமையதாக வெளிப்பட்டதால் அரியபொருளென்றேபற்றவேண்டியதெனின், அரும்பொருளினும் என்னபொருளென்றுபற்றுகின்றது? காரண காரியமென்பவற்றுள் இதனைக் காரியப்பொருளென்றே பற்றவேண்டியதெனின்,

[காரணகாரிய ஆராய்ச்சியுள்,இது 1வது காரியத்துவஆராய்ச்சி.]

காரணப்பொருளென்று ஏன்பற்றக்கூடாது? இது சமாதியுழைப்புநெறித்தாக இடைஞான்று வாய்ப்பதாகலின் காரணப்பொரு ளென்னது காரியப்பொருளென்றே பற்ற வேண்டுமெனின், 'யாதுஜன்னிய மஃதநித்தியம்' என்னும் வாக்கியத்திற் கிணங்கத் தானகியசொரூபவிளக்கம் சமாதிநெறித்தாக உற்பத்தியா கின்றதாயின் அஃது அவசியம்அந்தத்தையேற்கவேண்டுமே! அங்ஙனம் அந்தத்தையேற்கின்றதா? இல்லையே!பிறவிகள்தோறும் சாட்சியாயிருந்து அவத்தைவுபாதியாதிகளை அறிந்துக்கொண்டு வருவது தானன்ஹே? ஆகலின் தானகியசாட்சிவிளக்கம் அந்தத்தையெய்துவதெங்ஙனம்? இதனல் அஃது உற்பத்தியாகின்றதெனக் கூறுவது பொருந்தாதென்க.

அன்றியும் தானகியசாட்சிவிளக்கத்தைக் காரியமென்றதனல் இன்னும் பலதோடங்கள் நேரிடுகின்றன. எங்ஙனமெனின், கடமாகியகாரியத்திற்கு அபேதகாரணம் அதாவது உபாதானகாரணமாக மண்ணிருக்குமாறு இவ்விளக்கத்திற்கு உபாதானகாரணமாக இருப்பதெது? ஷை கடத்திற்கே பேதகாரணங்களில் நிமித்தகாரணமாகக் குயவனும், துணைக்காரணமாகத் தண்ட சக்கரமும்இருந்து தொழிற்படுத்துமாறு இவ்விளக்கத்திற்கும்வேருக எந்தநிமித்த,துணைக்காரணங்களிருந்து தொழிற்படுத்துகின்றன? பின்னுஞ்சற்றுவிசாரிக்கின் காரியமென்பது முன்ஞான்றின்மைக்குளதிர்

மறையாயது. அதனோடு பின்னொன்றின்மைக்கும் எதிர்மறை யாயது. இவ்விருவொன்றினுக்கும் எதிர்மறையாயதென்பது. இடையொன்றுமாத்திரம் இருக்கின்றது. அதிலும் உள்ளது போலும் இருக்கின்றது. அங்ஙனமிருப்பினும் ஆராயுமொ ன்று தொழிற்குணத்தையுந், தோற்றகுணத்தையுமன்றியில் லாத கற்பனையாயிருக்கின்றது. இங்ஙனமே வியாபகசாட்சி மயமாகிய இவ்விளக்கம் முன்னொன்றும், பின்னொன்றுமின்றி இடையொன்றுமாத்திரம் உள்ளதுபோற்றோற்றுகின்ற கற் பனைதானே? இக்கற்பனைவிளக்கத்தைக்கண்டு அதன்கண் இலயித்திருப்பதற்காகத்தானே அதத்துவாவிருத்தி, தடத் தமுதலாகிய இலட்சணைவாயிலாகச்சென்று மகத்தாகிய சொரூப, சகசசமாதிகளையெய்துவது? அங்ஙனமின்றி ஆ மெனவும், உண்டெனவுமாகநிகழும் பகுதிமுதல்விகுதியிறு வாயுள்ள சமஷ்டி, வியஷ்டிதத்துவக்குழாங்களையெல்லாம் அஷ இலட்சணைவாயிலாக அன்றெனவும், இன்றெனவும்ஆகு மாறு தெளிதற்கியைந்த விசாரஞானமென்பது கிஞ்சித்து மில்லாத பாவனையோகநெறியிற்சென்றிருக்கலாமே.

அன்றியும், முன்னொன்றில்லாத எப்பொருளாயினும் பின்னொன்று உண்மையாகவருமா? அங்ஙனம் வருமெனி னும் கற்பனையாகவன்றோவரும்? இங்ஙனமே வியாபகசாட் சிவிளக்கமும் எஞ்ஞான்றுமில்லாதிருந்து கற்பனையாகத்தா ன்வருகின்றதோ? எங்ஙனமாயினும் அது சமாதிநெறித்தா கவன்றோ வெளிப்படுகின்றதெனின், அங்ஙனம் வெளிப்படு

வது முன்ஞான்றிருந்துவெளிப்படுகின்றதா? இல்லாமலே வெளிப்படுகின்றதா? அது முன்ஞான்றேயிருந்துளதாயின் சமாதியையெய்தவேண்டிய அவசியமில்லையே! இல்லாததினு லன்றோ சமாதியையெய்தி அடையவேண்டியதா யிருக்கின் றதெனின், 'இல்லது வாராது' என்பதற்கிணங்க இல்லாத தொன்றும் நூதனமாக வரப்போகின்றதின்றென முன்ஞா ன்றே கூறப்பட்டிருப்பதால் மீண்டுமீண்டும் இல்லாதது வரு வதாகக்கூறுவது தவறென்றுணர்க.

ஆயினும் வியாபகசாட்சிவிளக்கமான அகம்பொருளா னது சமாதிநெறித்தாகவெளிப்படினும் அது நூதனமாக வெளிப்படுவதன்று. எங்ஙனமெனின், ஆகாயத்தில் முகிலி னங்கள் வியாபகமாகப்படர்ந்திருந்து காற்றின்சலனத்தி னுல் கலைந்ததின்காரணமாக ஆதித்தனுனது வெளிப்படுமா யின் அவ்வாதித்தன் முன்ஞான்றில்லாது இடைஞான்று நூதனமாகவெளிப்பட்டதாகக் கருதுகின்றனமா? முன் ஞான்றேயிருந்து முகிலினங்களால்மறைவுபட்டபடியினுல் மீண்டும் அம்முகிலினங்கள்கலைந்தஞான்று வெளிப்படுகின் றதெனவன்றோ கருதுகின்றனம்? அங்ஙனமே அறியாமை யானது வியாபகப்போலியாக மூடிக்கொண்டிருந்து சமாதி யுழைப்பினுல் அகல்வதின்காரணமாக வியாபகசாட்சிவிளக் கமானது வெளிப்படுகின்றமையினுல் (முன்ஞான்றில்லாது இடைஞான்று நூதனமாகவெளிப்பட்டதெனக்கருதாமல்) எஞ்ஞான்றுமேயிருப்பதாகவும், அஃது அநாதிஅறியாமை

யினுல் மறைவுபட்டிருந்து சமர்தியுழைப்பின் காரணமாய் வெளிப்பட்டதாகவுங் கருதவேண்டுமென்க.

அன்றியும், ஒஷ பூதாகாயத்தில் வியாபகமாகப்படர்ந் திருக்கும் முகிலினங்கள் விளங்குவது யாதினுலெனப்படும்? (மறைவுபட்டிருப்பதனுல்) நமது திருஷ்டிக்குத்தோன்ருத ஆதித்தவொளியினுலன்ருே? ஆமெனின், இதனுல் அவ்வா தித்தன் முன்ஞான்றேயிருந்ததென்ருகின்றது. ஆகவே, (வெளிப்பட்ட) பின்ஞான்றும் இருக்கின்றதென்ருகின்றது. இதுபோல ஒஷ சிதாகாசவிளக்கத்தை வியாபகப்போலியாக மூடிக்கொண்டிருக்கும் அறியாமையானது விளங்குவது யாதினுலெனப்படும்? (விவேகவிர்த்தியல்லாத) நமது திருஷ் டிக்குத் தோன்ருதிருக்கும் அச்சாட்சிவிளக்கத்தினுலன் ருே? ஆமெனின், இதனுல் அச்சாட்சிவிளக்கமானது முன் ஞான்றேஇருக்கின்றதென்ருகின்றது. ஆகவே, பின்ஞான்றும் இருப்பதென்பதற்கு ஐயமென்னை? இங்ஙனம் முன்ஞான் றும், பின்ஞான்றும் இருப்புப்பொருளாகவிருக்கும் வியாபக சாட்சி விளக்கமானது இடைஞான்றுமாத்திரம் நூதனமாக வந்ததெனக்கொள்ளலாமா? அஃது உதயாஸ்தமனமின்றிய சதோதயப்பொருளென்று முன்ஞான்றே சித்தாந்தமாயின தால் காரியப்பொருளென்றும், இடைஞான்றுபெறப்படுவ தென்றுங் கூறுவது அறியாமையினும் மிக்கஅறியாமை யென்க.

[2வது காரணத்துவ ஆராய்ச்சி.]

அவ்விளக்கம் காரியப்பொருளென்பதனுல் இத்தியா தோடங்கள் வாய்க்கின்றபடியினுல் காரணப் பொருளெ

ன்றுபற்றலாமேயெனின், பேதகாரணமெனப்பற்றுகின்றதா? அபேதகாரணமெனப் பற்றுகின்றதா? பேதகாரணமென் வேபற்றுகின்றதெனின், அது நிமித்தகாரணம், துணைக்காரணமென இருவகையாயிருக்கின்றதனால் இவ்விருவகையில் இஃது எந்தகாரணமெனப்படும்? ஏதாவது ஒருகாரணமெனப்படின் மற்றோர்காரணமாயிருப்பது யாது? அல்லது இருகாரணமுந் தானேயெனப்படின் தனக்கு வேறாக அபேதகாரண மொன்றைத் தழுவவேண்டுமே! அங்ஙனம் எந்த அபேதகாரணத்தைத்தழுவி எதனைக்காரியப்படுத்துகின்றது? ஒன்றினையுந் தழுவிக் காரியப்படுத்துகின்றதில்லை யாதலின் பேதகாரணமெனப்படாதென்க. ஆயின் அபேதகாரணமென்றுவது சொல்லப்படாதோவெனின்; உபாதானகாரணம் அல்லது முதற்காரண மெனப்படும் அவ்வபேதகாரணமும் பேதகாரணத்தைதழுவியே காரியத்தைவெளிப்படுத்துமாறு இவ்விளக்கம் எந்த பேதகாரணத்தைத் தழுவி எதனைக் காரியமாகவெளிப்படுத்துகின்றது? பேதகாரணமின்றியேகாரியத்தை வெளிப்படுத்துகின்றது: அக்காரியமே சிவேசுரசகத்தென்று சொல்லப்படுகின்றதெனின், அதனால் அஃது அபேதகாரணமெனப்படாதிருக்கவேண்டுமே! ஏனெனின், அபேதகாரணமென்று சொல்லப்படுவது அதற்குவேறாயிருக்கும் பேதகாரணத்தைப்பற்றியே யாகலினென்க.

சிலந்திப்பூச்சியானது தன்னால்கட்டப்படும் நூல்கூண்டிற்குத் தானே அபேதகாரணமாகிய உபாதானகாரணமும்; பே

தகாரணமாகிய நிமித்தகாரணமுமாய் இருத்தல்போல இவ் வியாபகவிளக்கமே சிவேசுரசகத்தாகிய காரியத்திற்குப் பேதாபேதமாகியவ்ஷை இருகாரணமாகவும் இருக்கின்றதெனின், அச்சிலந்திப்பூச்சி வ்ஷை இருகாரணமாக இருக்கின்றதாயினும் அதன்சடபாகம் அபேதகாரணமாயும், சித்துபாகம் பேதகாரணமாகியநிமித்தகாரணமாயும் இருத்தல்போலஇவ் விளக்கமுஞ்சடபாகம்,சித்துபாகமென இருகூறுயிருக்கின்றதா? இன்றன்றோ? இல்லாதிருக்க வ்ஷை இருகாரணமாகவும் தானேயிருந்து காரியத்தை வெளிப்படுத்துகின்றதென்பதென்னை? பேதாபேதமாகிய இருகாரணமின்றி ஒருகாரணத்தினாலேயே காரியோற்பத்தியாகாதோவெனின், அங்ஙனமுண்டாகக்கூடியது பிராதிபாஸிகசத்தாகின்ற கயிற்றரவுபோன்ற விவர்த்தகாரியமேயன்றி வியாவகாரிகசத்தாகின்ற மட்கடம்போன்ற ஆரம்பகாரியமும், பால்ததிபோன்ற பரிணாமகாரியமும் அன்றென்க. அன்றியும், அவ்விவர்த்தகாரியத்திற்கு இந்திரிய, அந்தக்கரணதோடம் முதலியஏதுக்களும் உண்டென்க. ஆயினும்,விவர்த்தகாரியத்தின் காரணமானது அபேதகாரணமெனப்படாதென்க. (ஏனெனின், முன்னான்றுகூறியவாறு பேதகாரணமொன்று இதற்குவேறாகஇருந்தால்மாத்திரந்தான் இஃது அபேதகாரணமென வழங்கப்படுமாகலினென்க) ஆயின் இஃது என்னகாரணமென வழங்கப்படுமெனின், உபாதானகாரணமென வழங்கப்படுமென்க.

இதுநிற்க, இவ்விவர்த்தகாரியமாகிய அரவுக்கு உபாதானகாரணமென்பது யாதெனப்படும்? கயிற்றைத்தவிர

மற்று யாதிருக்கின்றதெனின், கயிறு இருந்தவாறிருக்க அதன்கண் அரவுதோன்றட்டுமே! தோன்றுதாகலின் ஒன்றை மற்றொன்றாகக்காணுதலென்னும் மருள் அதாவது கயிற்றை அரவாகக்காணுந்திருட்டியே அவ்வரவுக்கு உபாதான காரணமாயிருக்கின்றதென்க. அத்திருட்டியானது ஓர்முதற்பொருளாகாமல் தொழிற்குணமாகின்றதனால் அஃது எங்ஙனம் உபாதானகாரணமெனப்படும்?உபாதானகாரணமெல்லாம் முதற்பொருளாக இருக்கவேண்டுமன்றோவெனின், அத்தியாசமானது அர்த்தாத்தியாசம் (கிரிசியமருள்), ஞானத்தியாசம்(திருக்குமருள்)என இரண்டாயிருக்கின்றது. அவற்றுள், அர்த்தாத்தியாசமாவது ஒன்றுமற்றொன்றாகத்தோன்றுவது. அதுவேகயிறு அரவாகத்தோன்றுவதுபோன்றது ஞானத்தியாசமாவது ஒன்றைமற்றொன்றாகஉணர்வது. அதுவேகயிற்றைஅரவாகஉணர்வதுபோன்றது. அர்த்தாத்தியாசமாகிய கயிறு அரவாகத்தோற்றுதலுக்குஉபாதானம் கயிறாயினும்,ஞானத்தியாசமாகிய கயிற்றைஅரவாகவுணர்தலுக்கு உபாதானம் அங்ஙனம் உணர்தலாகிய திருட்டியையன்றி வேறுயாதிருக்கின்றது? இல்லையாதலின் அத்திருட்டியையே உபாதானகாரணமெனக் கூறியதென்க.

ஒன்றை மற்றொன்றாகவுணருந்திருட்டியே கயிற்றரவுக்கு உபாதானமெனின்,முதற்பொருளைமறந்தமறதியே அதாவது முதற்பொருளைநாடாததிருட்டிதோடமே உபாதானமென்றாகின்றது. ஆகின்றதால், மட்கடம் நூற்படம் முத

லானவைகளிலும் அவ்வவற்றின் முதற்பொருளைநாடாத தோடதிருட்டியன்றே உபாதானகாரணமெனப்படும்? அங்ஙனமின்றி மண், நூல் முதலியவைகள் உபாதானமாயிருக்கின்றனவென முன்னொன்றுகூறியதென்னையெனின், மட்கடமாதியிலும் முதற்பொருளைநாடாத தோடதிருட்டியே உபாதானமென்பதற்குத் தடையாதுமின்று. ஏனெனின், ஆரம்பம், பரிணாமம், விவர்த்தமென்னும் இம்மூன்றுபட்சத்தில் விவர்த்தபட்சமொன்றையே வேதாந்தமானது உடன்பாடாகக்கொண்டிருப்பதால் எவ்வகைப்பட்ட வியாவகாரிக, பிராதிபாஸிகக்காரியங்களும் இவ்விவர்த்தபட்சத்திலேயே அடங்கிவிடுமென்க. விவர்த்தபட்சமாவது அதிஷ்டானமாகிய ஒன்றின்கண் தோடதிருட்டியினால் ஆரோபமாக மற்றொன்று தோற்றுமெனக் கூறுவதேயாம். அது இப்பி, கட்டை, கானல், மண், முதலிய அதிஷ்டானங்களில் முறையே வெள்ளி, புருடன், நீர், கடம் முதலிய ஆரோபங்கள் தோற்றுவதுபோலாம். என்னை,

காசிகாண்டம்.

"கானலிடைத் தெண்ணீருங் கயிற்றினில்வா ளரவுமலை கடலிற் பட்ட, கூன்முதுகிப் பியிற்றோன்றும் வெள்ளியுமம் முதலுண்மை குறிக்கிற் றீரும், ஆனவைபோ னினையறியிற் றோற்றுசக மனைத்துநிலா தழியு மாற்றால்."
என்றுகூறியவாற்றாலென்க.

ஆயினும் மட்கடமாதி வியாவகாரிகக்காரியங்களில் தோடதிருட்டியிருப்பினும் மண்ணுதிக்குவேறுகப் பேதகாரணங்களிருந்து தொழிற்படுத்துமாறு இக்கயிற்றரவாதி பிராதிபாஸிகக்காரியத்தில் தோடதிருட்டியையன்றி வேறென்றுமிருந்து தொழிற்படுத்துகின்றதில்லையாகலின் அதனையே முக்கியவிவர்த்தபட்சமாகக்கூறியதென்க.

இங்ஙனமே சீவேசுரசகத்தென்பது விவர்த்தகாரியமாகவே யிருக்கின்றதெனின், இக்காரியத்திற்கு உபாதானகாரணமென்பது யாதெனப்படும்? அகம்பொருளாகியவியாபகசாட்சிவிளக்கமானதுகாரணப்பொருளென்பதைப்பற்றியே இதுகாறும்பேசிவருகின்றதனால் அச்சாட்சிவிளக்கமே உபாதானமாயிருக்கின்றதெனின், கயிற்றரவாகியகாரியத்தில் கயிறு உபாதானகாரணமாக ஏற்பட்டதா? இன்றன்றோ? ஆரோபதிருட்டியாகிய மருளன்றோ உபாதானமாகவேற்பட்டது? அம்மருளும் கயிற்றையாசிரயித்து (இடமாகப்பற்றி) இருக்கின்றதன்றோ? இங்ஙனமே வியாபகவிளக்கமாகியசாட்சிப்பொருளை ஆசிரயித்திருக்கின்ற ஓர்விதமருட்சத்தியே சகலகற்பனவடிவமாகிய சீவேசுரசகத்தென்னுங்காரியத்திற்கும் உபாதானமாயிருக்கின்றதன்றி வியாபகவிளக்கப்பொருளன்றென்க. அற்றேல், அனைத்தும் மருட்சத்திதானேவெனின், இவ்வனைத்தினுள் ஒவ்வொன்றும் ஆராயுஞான்று அறியாமையெனப்படாது அறிவெனப்படட்டும்! அவ்வறியாமையன்றோ பொருளல்லவற்றைப் பொரு

ளென்றுணரும் மருளென்று கூறப்படுகின்றது? இதனாலே யே,

ஞானவாசிட்டம்.

பேதமுறு புந்தியே மாயை யாகும் பெரிதுவருந் திய மிதனைப்போக்கல் வேண்டும்,போதமுறு பேற்றினா லன்றிமா யைப் பொருநதியின் கரைதோன்றாப் பொருந்தத் தோ ன்றி, லேதமறு மப்பதமே யிறவா வீடா மிம்மாயை பிறப் பிடமே தென்னல் வேண்டாஞ், சேதமுறக் கொல்வழியே தென்று தேர்வாய் சிதைவுற்றா லிதனியல்பு தெரியு மன்றே. என்றுகூறுகின்றதென்க.

அன்றியும், கயிற்றைப்பாராததிருட்டியே அரவாகத் தோற்றுவதுபோலத் ததாகாரத்தை எட்டாத திருட்டியன் றோ இதாரகாரங்களாகத்தடித்துத் தோற்றுகின்றது? இத் திருட்டியைத்தவிர அறியாமையெனப்படுவது வேறுமுண் டோ? இன்றாகலின் இதுவே சகலகற்பனைகளுக்கும் உபாதா னமென்க. அங்ஙனமாயின் இஃதோர் முதற்பொருள்தா னேயெனின், இது சுதந்தரமின்றித் தர்மமாயிருக்கக்கூடிய தாதலானும், தர்மமும் ஓர்முதற்பொருளையே ஆசிரயித்திரு க்கவேண்டுமாதலானும் இச்சத்தியாகிய தர்மமும் வியாபகவிள க்கமாகிய முதற்பொருளையே ஆசிரயித்திருக்கின்றதென்க. இதனால் சுதந்தரமின்றித் தர்மமாயிருக்கக்கூடிய மருட்சத் தியானது எங்ஙனம் சகலகற்பனைகளுக்கும் உபாதானமா கும்? உபாதானமெல்லாம் முதற்பொருளாயிருக்கவேண்டு

மே: ஆகலின், அம்மருட்சத்தியையுடைய வியாபகவிளக்க மாகிய முதற்பொருளையே உபாதானமாகக்கூறவேண்டியதா கின்றதன்றோவெனின், வியாபகவிளக்கமானது நிர்விகாரமா யும், சச்சிதானந்தவடிவமாயும் இருக்கின்றதால் அதற்கெ திர்மறையாய் விகாரமும், அநர்தசடதுக்கவடிவமுமான கா ரியத்தை யெங்ஙனம்வெளிப்படுத்தும்? வெளிப்படுத்தாதா கலின்,

தாயுமானவர்.

நித்தநிர் மலசகித நிஷ்பிரபஞ் சப்பொருளை
நிர்விஷய சுத்த மான
நிர்விகா ரத்தைத் தடத்தமாய் நின்றொளிர்
நிரஞ்சன நிராம யத்தை

என்றுகூறியிருக்கின்றனர்.

அன்றியும் நூலானது படத்திற்குக் காரணமாயினும் அது பஞ்சைநோக்க அதற்குக்காரியமாகவும் அப்பஞ்சு பல அணுக்களின்காரியமாகவும் (ஒன்று மற்றொன்றுக்குக் காரணமாயினும் இன்னொன்றுக்குக் காரியமாகின்ற நியமப்படி) ஆகுமாறு வியாபகவிளக்கமுஞ் சீவேசுரசகத்திற்கு உபாதா னகாரணம் ஆகுமாயின் அஃது இன்னொன்றுக்குக் காரியமா கவேண்டுமே! ஆகலின், அதனை (உபாதான) காரணமென் பதும் மிக்கஅறியாமையேயாமென்க.

[அகம்பொருள் காரணகாரிய மற்றதென்பது.]

ஆயின்அது காரணகாரியம் இரண்டுமற்றப்பொருளோ வெனின், ஆம்: அங்ஙனங்கூறுவதற்கு முரணியாதுளது.

அது காரணகாரியமற்றிலங்குவதென்றே பிரபலசுருதிகளும் பிரதிபாதிக் (கூறு) கின்றனவென்க. எங்ஙனமெனின்,

**சசிவர்ண போதம்.**

செறிந்த காரண காரி யங்கள்சி தைந்து மேலுறு சித்ததாய்
அறிந்த வாதனை தானு மற்றது அசிப தப்பொரு ளாவதே.

என்றும்

மற்றும்இங்ஙனமே வருவனவற்றுற் காண்க.

அன்றியும் அவ்வகம் பொருள் அருத்தவாதமுதலிய பேதவாதம்ஆறுக்கும்,காரணகாரியவாதமுதலிய அபேதவாதம்ஐந்தினுக்கும் அதீதமுற்றதென்றுங் கூறப்படுகின்றதன்றோ? அங்ஙனமாயின் ஷெ இருவாதங்களையுங்கூறியிருப்பானேனெனின், பழிபாவங்களில்விழைந்து பட்டிமாடொத்துத்திரியும் உயிர்கள் விதிவிலக்குகளிற் கட்டுப்பட்டுப் பின்னொன்றுயானெனதென்னும் அகமமதைகள்குன்றித் தற்சுதந்தரமிழத்தலாகிய சித்தசுத்தியின்பொருட்டு வழிபடுவதற்குப் பேதவாதமும், அங்ஙனம் வழிப்பட்டும் அயல்பாவமாயிருக்கும் மருளென்பதிறந்து தானேதானுயிருத்தற்கு அபேதவாதமுங் கற்பிக்கப்பட்டிருக்கின்றனவேயன்றி மற்றவற்றிற் கன்றென்க. [இவற்றின்வகைவிரிவுகளை வேதாந்தசூடாமணியாதி பெருநூல்கள் கூறுகின்றமையால் ஆங்காங்கு கண்டுதெளிக.]

முதற்பொருளா யிருக்கின்ற வியாபக சாட்சியென்னும் அகம்பொருளானது காரணமாகாதாயின் அதன்சண்

தர்மாயிருக்கின்ற மருட்சத்திமாத்திரம் எங்ஙனங்காரணமா குமெனின், சொன்மாத்திரமாயுந் தோற்றன்மாத்திரமாயும் இருக்கின்ற சகல கற்பனைகளும் அவாச்சியமாய் உண்டான மையாலும் அவற்றைச்சத்தியமாக நாம் கொண்டிருக்கின்ற மையாலும், அச்சத்தியபுத்தியிருக்குங்காறும் சாட்சிமாத்தி ரமாயுள்ள அகம்பொருளின்கண் அங்ஙனமே அவாச்சிய மாக எழுந்தமருட்சத்தியை உபாதானகாரணமாக அநுமா னித்துக் கற்பித்துக்கூறினதேயன்றி வேறன்றென்க. அங்ங னங்கற்பித்ததும் அமுக்கியபட்சமாகவேயாம். ஏனெனின், சகலகற்பனைகளாகின்றசீவேசுரசகத்தென்பது மித்தையாகு ஞான்று அவற்றிற்குக் காரணமென அநுமானிக்கப்பட்ட மருட்சத்திமாத்திரம் மித்தையாகாது சத்தியமாகுமா? ஆகா திருக்க (வியாபக விளக்கத்தின்கண் கற்பனையாகவிருக் கும்) இவ்வவாச்சிய சத்தியைக்காரணமென்று கற்பித்தகி னலேயாமென்க. அச்சத்தி நாமரூபங்களின் காரணமாக அநுமானிக்கப்பட்ட தென்பதற்கு உதாரணமாக,

கைவல்லியம்.

பிரம சத்திக ளனந்தமா மதைக்கண்டு பிடித்திடல் கூடாதே,பரவு பூதங்கள் கண்டநு மானத்தால் பலருக்கும் வெளியாமே. எனவும்,

பேரியற் பிரமத் துக்கு மூலகிற்கும் பிறிதுசத் திகளுண்டே. எனவும்,

குமாரதேவர்.

பழுதையினின் றோர்சத்தி பாம்பாகத் தோற்றுதற்குப்
பழுதையினுண் டதைப்போலப் பரத்தினுமுண் டோர்சத்தி.
எனவுங் கூறியவாற்றாற் காண்க.

அச்சத்தி ஒன்றோ, பலவோவெனின், அஃது ஒன்றா யிருப்பினும் நாமரூபங்களை நாநாவாகத் தோற்றுவிக்குங் கிரியாபேதகாரணமாக அதனைப் பலவென்றுங் கூறுதலுண்டென்க.

அறியாமையென்னும் இம்மருட்சத்தியானது அவாச்சியமாகத்தோற்றியதாயின் அது தர்மமாகின்றதால் தர்மியாகின்ற வியாபகவிளக்க அகம்பொருளைவிட்டு எஞ்ஞான்றும் நீங்காதன்றோ இருக்கவேண்டும்? உலககாரணத்தால் அவாச்சியமாகவந்ததென்றும், விசாரணையினால்நாசமெய்துகிறதென்றுங் கூறுவதென்னையெனின், அது கற்பிதகுணம் போன்று இருப்பதாகலினென்க. எங்ஙனமெனின், குணமென்பதுயதார்த்தம், கற்பிதமென இரண்டாயிருக்கின்றது. பாலின்கண்தோற்றும் வெண்மைநிறம் யதார்த்தம். அது தர்மியாகியபால் எதுகாறுமிருக்கின்றதோ அதுகாறும்இருக்கும். படிகத்தில்தோன்றும் பலநிறங்கள்கற்பிதம். அவை படிகத்தில் எஞ்ஞான்றுமிருப்பதில்லை. இங்ஙனமே ஷை மருட்சத்தியானது கற்பிதமாகலின் அது வியாபகவிளக்கத்தை விட்டுநீங்காது எஞ்ஞான்றுமிருப்பதில்லையென்க. அன்றியும் வியாபகவிளக்கமானது நிர்க்குணமாதலால் அதன்கண்

யதார்த்தமாகவாவது ஒருகுணமுமின்றெனக்கூறப்பட்டிருக்க கற்பிதமாகிய (மருட்சத்தியென்னுங்) குணமா இருப்பாயி ருக்கும்? இதனாலேயே,

**தாயுமானவர்.**

நிர்க்குண நிராமய நிரஞ்சன நிராலம்ப
நிர்விஷய கைவல் யமாய், என்று

கூறியிருக்கின்றதுபோலவே.

**கைவல்லிய நவநீதம்.**

நிர்க்குணவஸ் துவின்குணங்க ளுரைப்பதுதாய் மலடி யென நிகரென் றோதே, சற்குணனே வஸ்துநிலை யுரையாம லறியவல்ல சதுர ருண்டோ, நற்குணவே தங்களிந்தச் சீவன் முத்தி பெறப்பிரம ஞானந் தோன்றச்,சொற்குணங்கள் பிர மத்தின் குணங்களல்ல பிரமமாஞ் சொரூபந் தானே. என் றுங் கூறியிருக்கின்றதென்க.

இதுநிற்க முன்னொன்று கூறப்பட்ட வியாவகாரிகக் காரணகாரியங்களாகிய மட்கடம், நூற்படம்என்பவற்றுள், மண்ணும், நூலும்காரணங்களும்; கடமும்,படமும்காரியங் களுமாகின்றன. இக்காரியசொரூபங்களாகிய கட, படங்க ள்காரணசொரூபங்களாகின்ற மண், நூல் எனவும்; இக்கா ரணசொரூபங்கள் காரியசொரூபங்களாகிய கட, படங்க ளெனவும்படுமா? படாவெனின், இவ்விருவகுப்பும் பேத மெனப்படுமா? அன்று? பேதந்தானெனின், இவை என்

னபேதங்களெனப்படும்? காரண், காரியபேதங்களெனின், இவ்விருபேதமே துவிதமென்பதாயிற்று. அன்றியும் காரியங்களாகிய கட, படங்கள் தோற்றுவது யாதின்பாலெனப்படும்? மண், நூலாகியகாரணங்கள்பாலெனின், இதனால்மண், நூலென்பவை ஆதாரமும்; கட, படமென்பவை ஆதேயமுமாகின்றன.

இவ்வாதேயங்கள் மண், நூலாகியஆதாரத்தில் கூடியிருக்குங்குணபேதங்களா? அன்றிப் பொருட்பேதங்களா? குணபேதங்கள்தாமெனின், இவ்வியாபக வியாப்பியங்கள் விசிட்டாத்துவிதமென்பதாயிற்று. ஆகவே, மண், நூலென்பவை காரணங்களாயிருப்பது இயற்கையா? அன்றிச்செயற்கையா? இயற்கைதானெனின், இக்காரணங்கட்கு முதலும் ஈறுமின்றியிருக்கவேண்டும். அங்ஙனமாயின் குலாலனது திரிகையின்கண்ணும், சேணியனது தறியின்கண்ணும் மண், நூலாகிய இவை அத் வினையாளர்களது தொழிற்படாதுவாளாவிருக்குஞான்று காரணமெனப்படுமா? அன்றிக்காரியமெனப்படுமா? தொழிற்பட்டபின்ஞான்றன்றோ சொரூபங்களினாலும், கட, படமென்னும் பெயர்களினாலுங் காரியங்களெனவும்; இவற்றால் மண், நூலிரண்டும் காரணங்களெனவுமாகின்றன? இக்காரணத்துவம் இயற்கையென்பதெங்கே? இல்லையே! அன்றியும் கடபடங்களாகிய காரியங்கள் மாறுகின்றனவா? அன்று? மாறுகின்றனவெனின், மாறியபின் ஞான்றேனும் மண், நூலெனும்பொருள்களுக்குக் காரணத்

துவமென்பதுண்டா? இன்றெனின், மற்றெஞ்ஞான்றுள்ளது? காரியபேதமிருக்குஞான்றும் உள்ளதெனின், இக்காரியங்கள்கற்பனையா? அன்றி யதார்த்தமா? யதார்த்தந்தானெனின், இதனுல் காரணங்களாகிய மண், நூற்பொருள்கள் கற்பனையாகவேண்டுமே! ஏனெனின், இரண்டும் யதார்த்தமாகுமேல் அவை ஓரிடத்திலிருப்பது கூடாதாகலினென்க.

அன்றியும் கடபடங்களாகியகாரியங்கள் மண், நூலைத்தவிரஉண்டா? இன்றெனின், இம்மண், நூலைத்தவிர்க் காரணமென்பது முண்டாயிருக்கட்டும்! இன்றுதலின், மண், நூலாகிய இரண்டுங்காரணப்பொருள்களா? காரியப்பொருள்களா? இரண்டுமன்றெனின், இவ்விரண்டுதர்மமுமற்ற மண், நூற்பொருள்கள் விசிட்டாத்துவிதப் பொருள்களென்றுவதுகூறப்படுமா? அங்ஙனமுமன்றெனின், என்னபொருள்களெனப்படும்? காரணகாரியமாகிய துவிதமும், வியாபகவியாப்பியமாகிய விசிட்டாத்துவிதமும்இறந்தனவெனின்,இதனுல் மண், நூலாகியவிவை அத்துவிதப்பொருளென்பதற்கிழுக்கென்னை? நிற்க, இங்ஙனங்கூறிய துவிதமுதலியமூன்றனுள் வியாபகசாட்சிவிளக்கமானது என்னபொருளெனப்படும்? துவிதப்பொருளெனின், காரண, காரியநிலைமைத்தாயிருக்குந்துவிதத்தில் இது காரணப்பொருளா? அன்றிக்காரியப்பொருளா? காரணப்பொருளெனின், காரியப்பொருளென்பதுயாது? நாமரூப உலகமெனின்,உலகமானது சொ

ன்மாத்திரம், தோன்றன்மாத்திரமெனப்படாமலும் இருப்பாயிருக்கின்றவேறுபேதகாரணத்தால்காரியப்பட்டும் இருக்கவேண்டும்! அங்ஙனமின்றாயும், சாட்சிவிளக்கத்திற்குவேறாக இரண்டாவதுபதார்த்தம் இன்றாயுமிருத்தலினால் சாட்சிவிளக்கமாகிய இது காரணமும், உலகமென்பதுகாரியமும் ஆவதெங்ஙனம்? இதனால் சாட்சிவிளக்கமானது துவிதமற்றதாகின்றதன்றோ?

துவிதமென்பதனால் ஃஃ தோடம் வாய்க்கின்றதாயின் அதனை விசிட்டாத்துவிதப்பொருளென்பாமெனின், விசிட்டமென்பது கூடியிருத்தலென்றாகின்றதால், எதனோடெது கூடியிருக்கின்றது? சாட்சிவிளக்கத்தோடு உலகங்கூடியிருக்கின்றதெனின், இதனால் சாட்சிவிளக்கம்வியாபகமும், உலகம்வியாப்பியமுமாகின்றன. ஆகவே, இவ்வியாபகவியாப்பியம் ஆதார, ஆதேயமெனவும்படுமாதலால் கற்பனைத்தோற்றமாகிய உலகம் சாட்சிவிளக்கத்தில் கூடியிருப்பது எதுபோலாகின்றது? ஆகாயத்தில் கரியநிறங்கூடியிருப்பதுபோலன்றோ ஆகின்றது? கரியநிறமென்பதே கற்பனையாதலால் அது கூடியிருக்கின்றதென்றும், அதற்காதாரம் ஆகாயமென்றுங் கூறுவது உற்றுணராததாலன்றோ? இங்ஙனமே உலகமுங் கற்பனையாயிருக்கின்றதே: இதற்குமாத்திரம் சாட்சிவிளக்கம் ஆதாரமாவதெங்ஙனம்? குணத்திற்கு ஆதாரம்வேண்டியது அவசியமாதலால் (குணமாகின்ற) உலகத்திற்கும் ஆதாரம்வேண்டியதன்றோவெனின், அக்குணமும் யதார்த்தமா

யிருக்கவேண்டுமே! அங்ஙனம் உலகம் குணமெனக்கொள்ளப்படினும் அது யதார்த்தமெனப்படுமா? யதார்த்தமாயின் சாட்சிவிளக்கத்தை ஆதாரமாகவும், இதனை ஆதேயமாகவுங் கூறலாம். அங்ஙனமின்றாகலின் ஆதார ஆதேயமென்பது பொருந்தாதென்க.

சாட்சிவிளக்கமானது வியாபகமெனவழங்கப்படுகின்றதால் அதுவியாப்பியமாயிருக்கும்சர்வத்திற்கும்இட(ஆதார)மாயிருப்பதெனப் பொருள்படுகின்றதன்றோவெனின், வியாபகமென்பது *ஒன்றைத் தழுவியதென்றும், தழுவாததென்றும் இருவகையாயிருக்கின்றது. இவற்றுள் தழுவியவியாபகமாவது: ஒருபொருள் மற்றொருபொருளுக்கு வியாபகமாயினும் பிறிதோர்வியாபகத்தைத்தழுவி அதற்குவியாப்பியமாயிருப்பதாம். அஃது ஆகாயமானது சதுர்ப்பூதத்திற்கும் வியாபகமாயினும் மாயாசத்தியாகிய வியாபகத்தைத்தழுவி அதற்குவியாப்பியமாயிருக்கின்றதுபோலாம். மாயாசத்தியும் இங்ஙனமே தழுவியவியாபகமாயிருக்கின்றது. தழுவாவியாபகமாவது: மற்றொன்றினையுந்தழுவாது தானேவியாபகமாயிருப்பதாம். அங்ஙனமிருப்பது சாட்சிவிளக்கமொன்றேயாம்.

ஆயினும் சாட்சிவிளக்கமானது வியாபகமெனக்கூறப்படுவது தழுவியவியாபகமாகின்ற ஆகாயம், மாயாசத்தி இவைகள் மற்றவற்றிற்கு வியாபகமாகிப் பின்னொன்று வியாப்பிய

* தழுவியவியாபகத்தைச் சாபேட்சிகவியாபகமென்றும், தழுவாவியாபகத்தை நிராபேட்சிகவியாபகமென்றுங் கூறப்படுவதுண்டு.

மாய் முடிக்கின்றமையினால் இவைகளின்பொருட்டேயன்றி வேறன்றென்க. கயிறானது தன்கண்தோன்றிய அரவு கற்பனையாயினும் அதற்காதாரமானவியாபகமாயிருக்கின்றதே: அங்ஙனமே வியாபகவிளக்கமானது உலகத்திற்காதாரமான வியாபகமெனப்படாதோவெனின், அரவு தோன்றுமவசரத்தில் கயிறுஆதாரமாகிய வியாபகமாகக் கொள்ளப்படினும் அரவேஇன்றெனத்தெளியுமவசரத்து அவ்வில்லா அரவுக்கு இருப்பாகியகயிறானது எங்ஙனம் ஆதாரமாகிய வியாபகமாகும்? இங்ஙனமே உலகம் மித்தையாகத் தெளியுமவசரத்தில் ஆதாரமாகிய வியாபகமும்வேண்டுமோ? அன்றியும் வியாபகமெனவழங்குவதும் அகம்புறமின்றி அகண்டமாயிருக்கும் பூரணநிறைவையே யாமென்க. ஆகலின்,

ஔவையார்.

அகர வுயிர்போ லறிவாகி யெங்கும்
நிகரி லிறைநிற்கு நிறைந்து. எனவும்,

தாயுமானவர்.

சருவபரி பூரணவ கண்டதத் துவமான
சச்சிதா னந்த சிவமே. எனவும்

கூறியிருக்கின்றனர்.

இதுகாறும்விசாரித்ததில் தேர்ந்தது யாதெனின், முன்னான்று காரணகாரியத் துவிதபட்சங் கற்பனையானதுபோல, வியாபகவியாப்பிய மாகக்கொள்ளும் விசிட்டாத்துவித பட்சமுங் கற்பனையானதென்க.

இங்ஙனமிருப்பதால் சாட்சி விளக்கமானது அத்துவிதப்பொருளென்பதற்கிழுக்கென்னை? இன்றாகலின்,

**தாயுமானவர்.**

அத்துவித வத்துவைச் சொற்பிரகா சத்தனியை. எனவும்,
காரணங்கற் பனைகடந்த செல்வ மாகி. எனவுங்
கூறியிருப்பதுபோன்று,

**கைவல்லிய நவநீதம்.**

இப்படிப் போல நாம ரூபங்க ளிரண்டு மின்றி
யொப்பமா யிரண்டற் றொன்றா யுணர்வொளி நிறைவாய் [நிற்கும். எனவும்,

**வேதாந்த சூடாமணி.**

நிரவயவ மாதலினு னுஞ்சத்து வேறு
நிகழாமை யானுமிறை தனக்குமுத னடுவின்
றொருவுறாக விவ்வுலகை காரணமா மாயை
யுண்மையினு லிறுதியதில் லெனபதென்கொ லென்னின்
வரைவுதரு சித்திரிகன் சித்திரசத் தியைப்போன்
மாயையுஞ்சின் மாத்திரமாம் பிரமத்தின் வேறாய்த்
தெரிவதிலா மையினென்றுஞ் சச்சிதா னந்த
சிவத்தினுக்கு விசாதியிலை யென்றுணர்க தெரிந்தே.
எனவும்,

**ஞானவாசிட்டம்.**

பன்னுகாரணமொன் றின்றிப் படைக்குமுன் படைக்க வேண்டும், என்னும்லீலையினாற் றானே யியைந்தகா ரணம

தாகி, முன்னிறுபொதுவாங் காட்சிமெய்ப்பொருட் டிரள்களாகித், தன்னுளே சகமாய்க் காற்றுட் சலனம்போலறிவுட் டங்கும். எனவுங் கூறியிருக்கின்றனவென்க.

இங்ஙனமாக வியாபகசாட்சிவிளக்க அத்துவிதபொருளானது அயலென்பதுஅணுத்துணையேனுமின்றி விளங்குவதால் இதனையே பொருளென்றும், அதினுஞ்செம்பொருளென்றும், சாசுவதஇருப்பென்றும், தானாகிய நிலையென்றும், அளிப்பதற்கியைந்த அருஞ்செல்வமென்றும் அறிவுநூல்களனைத்தும் விடாது கோஷித்துக்கொண் டிருக்கின்றனவென்க. என்னை,

அவிரோத வுந்தியார்.

பொன்றுப் பொருளே பொருளென்பர் நல்லோர
தன்றிப் பொருளியாதென் றுந்தீபற
அல்லன மாயையென் றுந்தீபற. எனவும்,

அஞ்ஞவதைப் பரணி.

என்றும் பொருவரிய வின்பப் பொருளுடையார்
பொன்றும் பொருளும் பொருளாகப் போற்றுவரோ.

எனவும், மற்றுமிவ்வாறே கூறியவாற்றாலுணர்க.

## இரண்டாவது

## பொருளென்னும் புருஷார்த்தம் முற்றிற்று.

---

## மூன்றாவது

# இன்பமென்னும் புருஷார்த்தம்.

முன்ஞான்று கூறப்பட்டவைகளால் வியாபக விளக்கமானது அறம் பொருளென்னு மிரண்டிற்கும் இயைந்து விளங்கினதுபோன்று இன்பமென்பதற்கும் (அதாவதுஇன்புருவென்னும்பரமானந்த சொரூபமாகவும்) இயைந்து விளங்கவேண்டுமேயெனின், இதனால் அவ்விளக்கம் சத்தெனத் தேரப்பட்டதன்றோ? ஏனெனின், யாண்டுமுள்ளதுசத்தும், யாண்டுமில்லது அசத்துமாகலானென்க. அசத்தென்பது ஓர்ஞான்றுள்ளதும் மற்றோர்ஞான்று (நாசமெய்தியபின்ஞான்று) இல்லாததுமன்றோவெனின், சத்தென்பதற்கு அசத்தென்பது எதிர்மறையாகலான், அவற்றுள் சத்தென்பது யாண்டுமுள்ளதென்று பொருள்படுமாயின், அசத்தென்பது அதற்கெதிர்மறையாய் யாண்டுமில்லதென்றன்றோ பொருள்படும்? அன்றியும், மலடிமகன் ஆகாயதாமரை முதலியவை அசத்தாதலால்அவை ஓர்ஞான்றிருப்பனவும், மற்றோர்ஞான்று இல்லாதனவு மாகுமா? எஞ்ஞான்றும் (யாண்டும்) இன்றெனபனவன்றோ? ஆகலின் அசத்தென்பது யாண்டும் இலதென்பதேயா மென்க.

நாமரூபவுலகமானது ஆராயாஞான்று உள்ளதாயும் ஆராயுஞான்று இல்லதாயுமான சத்து அசத்தென்னும் இவ்

விரு நிலையயுமெய்துவதால் இஃது என்னவென்று கூறப் படும்? சதசத்தென்று கூறப்படுமோவெனின், சத்துஅசத்து ஆகியவிரண்டும் ஒன்றுக்கொன்று எதிர்மறைத்தர்மங்களாக இருக்கின்றமையால் இவ்விரு தர்மங்களும் எங்ஙனம் உலக மாகிய ஒரே பொருளின்கண் இருக்கும்? இங்ஙனம் எதிர்ம றைத்தர்மங்களைப் பொருந்திய ஒருபொருளும் எஞ்ஞான் றும்எங்கணும்இன்றன்றோ? இருக்கின்றதெனின், இருளொ ளிச்சூரியன், வெண்கருங்காகம், என இவ்வாறும் இருக்கலா மே! இங்ஙன மின்முகலான் அங்ஙனமுமின்றெனக. ஆயின் உலகமானது என்னவென்று கூறப்படலாமெனின், அது சதசத்விலட்சண அநிர்வசனீயமென்றே கூறப்படுமெனக. அங்ஙனங் கூறப்படுவதும் கௌணபட்சமாகவேயன்றி முக் கியபட்சமாக வன்றெனக. ஏனெனின், சிருஷ்டி திருஷ்டி வாதம், திருஷ்டி சிருஷ்டிவாதம், அஜாதவாதம் என்னும் இம்மூன்றில் இங்கு திருஷ்டி சிருஷ்டி வாதத்தின்படியே கூறியதனுலெனக. அம்மூன்றினது விரிவு மெங்ஙனமெனின், கூறுதும். முதலாவது சிருஷ்டி திருஷ்டிவாதமாவது: உலக மாகின்ற சிருஷ்டிப்பொருளை முன்னிட்டு அறிவென்பதிருக் கின்றதென்றும், அவ்வறிவு சிற்றறிவு, பேரறிவு பேதத்தால் இரண்டா யிருக்கின்றதென்றும், அவற்றுள் சிற்றறிவு பல வென்றும், அவைகளே அடிமைகளெனப்படும் சீவரென் றும், பேரறிவு ஒன்றென்றும், அதுவே ஆண்டானெனப்ப டும் ஈசுரனென்றும், இத்தியாதிவகைகளைக்கூறும் பேதவா தமேயாம்.

இரண்டாவது திருஷ்டிசிருஷ்டிவாதமாவது: அறிவை முன்னிட்டு அறிபடுபொருளாகிய உலகமானது இருக்கின்றதென்று அதாவது அவித்தியாசகிதமான சைதன்னியத்தினின்றெழுந்த சங்கற்பவடிவமாய் உலகம் உதித்துவிளங்கி அச்சங்கற்பம் ஒடுங்குஞான்று தானும் ஒடுங்கி விடுகின்றதென்றுகூறும் அபேதவாதமேயாம். என்னை,

**குமார தேவர்.**

தனது சங்கற் பந்தனிலே சகங்க ளாகி விளங்கியிடும்
தனது சங்கற் பந்தனிலே சகம் போயொடுங்கும். எனவும்,

**ஞான வாசிட்டம்.**

ஒப்பரிய தற்பரம சுபாவத் தாலே யுரைத்ததெலா மெழுமீண்டும் ஒடுங்கிப் போகும், மெய்ப்படிவ மில்லாத விண்ணிற் கானல் விரிவதுபோல் மனநினைவில் விரிந்து தோன்றும். எனவுங் கூறியவாற்றாற் காண்க.

இவ்வாதத்தின்படியே வித்தினிடத்தில் விருட்சசத்தியிருக்குங்காறும் விருட்சமானது இருப்பாகக் கருதப்படுமாறுபோன்று வியாபகவிளக்கமாகிய சைதன்னியத்தின்கண் அநிர்வசனீயமான மாயா (அவித்தியா) சத்தி ஆரோபமாக இருத்தலால் அஃது இருக்குங்காறும் அதுகாரணமாக வெளிப்பட்ட நாமரூபவுலகமும் அநிர்வசனீயமாயிருப்பதாக(கௌணபட்சமாய்) இங்குகூறவந்ததென்க. ஆயின் முக்கியபட்சமாகக் கூறுவதெங்ஙனமெனின், அது மூன்றுவதாகிய அஜாதவாதத்தின்படி கூறுவதாமென்க. அவ்வ

ஜாதவாதமாவது: வியாபகவிளக்கமாகிய சாட்சிசைதன்னிய மானது "ஏகமேவாத்விதீயம்" என்னும் பரமவாக்கியத்திற் கூறப்பட்ட இலக்கணத்திற்குஇலக்கியமாய்சுசாதிக,விசாதிக,சுவகதபேதரகிதமாயிருப்பதால்அதற்குவேறாகஉலகமும், மாயாசத்தியுமாகிய யாதொருபொருளுமின்றென்றும், இருப்பது அவ்வியாபகவிளக்க சைதன்னியமொன்றேயென்றுங் கூறுவதேயாம். இவ்வாதத்தின்படி கூறுவதே முக்கிய பட்சமாகலான் இதுவே வேதாந்த சித்தாந்தமென்க. என்னை,

**ரிபுகீதை.**

நிகழ்சுத்தி ரசிதத்தாற் பணிக ளார்க்கும்
நிசமாகச் சித்தித்தாற் சகத்துஞ் சத்தாம்
திகழ்ரச்சு சர்ப்பத்தாற் சனங்க ளாரும்
தீண்டினராய் மரிப்புற்றாற் சகத்துஞ் சத்தாம்
ககனத்தின் குசுமத்தா லெங்கு மாருங்
கந்தசுகம் புசிப்புற்றாற் சகத்துஞ் சத்தாம்
அகமுற்று விசாரிக்கிற் சகத்தே யில்லை
அறிவுருவாய் நிறைந்தபர மொன்றே யுண்மை. எனவும்,

**குமாரதேவர்.**

ஆனவிம் மாயை யசத்தேகா ணம்மானே. எனவும்,

**ஞானவாசிட்டம்.**

நனிமெய்யாய் மாயையில தென்றிவ் வாறு
நாடுவாய் ஞானியாய் ஞானம் பெற்றால்
துனிசெயுமீ துளமாயை யறிதி யன்றே
துகளில்லா நற்போதந் தோன்று மட்டும்

பனிமாயை யில்லையென லென்சொல் லாலே
பழுதில்லா வுறுதியுறப் பற்றி நிற்பாய்
புனிதமுறு பிரமமே யல்லா தென்றும்
புந்தியிற்கண் டார்முத்தி பொருந்தி னோரே. எனவும்,
மற்றும் வருவனவற்றாற் காண்க.

ஆகலான் உலகமானது அசத்தென்பதே வேதாந்தங்களின் தீர்ப்பென்க.

நிற்க முன்னூன்று சத்தாகத்தேரப்பட்ட வியாபகவிளக்கமானது அவத்தாத்திரயம், காட்சி(உபாதி)த்திரயம் முதலியவைகளைப்போல மாறுதலென்பதின்றி என்றும் ஒருதகைத்தாயிருப்பதால் மாறுதலுள்ள ஷை அவத்தாத்திரயமாதிகளை விடாதறிந்துக்கொண்டிருப்பதற்கு இதைத்தவிர வேறு யாதிருக்கின்றது? இன்றாகலின் இது சித்துப்பொருளென்பதற்கும் முரணின்றன்றோ? அவத்தாத்திரயங்கள் மாறிக்கொண்டுவரினும்உபாதித்திரயங்கள்மாறுகின்றனவன்றே யெனின், அவத்தைகள்மாறுஞான்றுஅவ்வவத்தைகளின்காட்சிகளும்மாறுமன்றோ? தூலமுதலியவுபாதிகளும் ஷை சாக்கிராதியவத்தைகளின் காட்சிகளன்றோ? இவைகள் மாத்திரமெங்ஙனம் மாறாதிருக்கும்? மாறாதிருக்குமாயின் இவைகள் திரிபுடிபாவமாக இருக்கின்றனவன்றோ? திரிபுடியாவது ஞாதுரு, ஞானம், ஞேயம் என மூன்றாய் அவற்றுள் ஞாதுருவாவது அறிவானாகிய திருக்கெனவும், ஞானமாவது அறிகருவியெனவும், ஞேயமாவது அறிபடுபொருளாகிய திரிசிய

மெனவும் பொருள்படுதலால் சாக்கிராவத்தையில் தூலசெவியாதிகளை இடமாகக்கொண்ட ஞானமாகிய இந்திரியங்களின் வாயிலாக மனோபுத்திசகித சிதாபாசனாகிய ஞாதுருவென்னும் திருக்கானது தூலபிரபஞ்சமென்னும் ஞேயமாகிய திரிசியத்தை யறிகின்றதும், சொப்பனாவத்தையில் சூக்கும இந்திரியங்களாகிய ஞானத்தின் வாயிலாக மனோசகித சிதாபாசனாகிய ஞாதுருவென்னும் திருக்கானது சொப்பனபிரபஞ்சமென்னும் ஞேயமாகிய திரிசியத்தையறிகின்றதும், சுழுத்தியவத்தையில் அவித்தியாசகித சிதாபாசனாகிய ஞாதுருவென்னும் திருக்கானது பாழாகிய ஞேயமென்னும்திரிசியத்தை யறிகின்றதுமா யிருக்கின்றது. இங்ஙனம் திருக்கானது எவ்வெவ்வவத்தையில்எங்ஙனமெங்ஙனம் மாறுபட்டிருக்கின்றதோ அங்ஙனமங்ஙனமே திரிசியமாகிய காட்சிகளும் மாறுபட்டுக்கொண்டுவருகின்றனவாகலின், அவற்றுள் சாக்கிராவத்தாக் காட்சியாகிய திரிசியங்களி லொன்றாகிய தூலோபாதியும், சொப்பனாவத்தாக் காட்சியாகிய திரிசியங்களிலொன்றாகியசூக்குமோபாதியும், சுழுத்தியவத்தாக்காட்சியாகிய காரணோபாதியும் ஆகிய இவைகள் மாத்திரம் எங்ஙனம்மாறாதிருக்கும்? அன்றியும் சொப்பனாவத்தையிலுள்ள உபாதியே சாக்கிராவத்தையிலும் மாறாதிருக்கின்றதாயின், சொப்பனாவத்தையில் அரசகோலங்கொண்டு சிங்காசனத்தில் வீற்றிருந்த ஒருவன் சாக்கிராவத்தைக்கு வந்தஞான்று அ்ஃதொடு அரசாலங்காரங்களை அவனது தூலோபாதியாகிய உடலிற் காணுவானா? காணமாட்டானன்றோ? ஏனெனின்,

சிங்காசனத்தில் வீற்றிருந்தனன்றோ சகல அலங்காரங்களை யும் பூண்டுகொண்டிருந்தது அவனது சூக்குமோபாதியாகிய உடலாகலின், சாக்கிராவத்தைக்கு வந்தஞான்று அச்சூக் குமோபாதி மாறிவிடுவதனாலேயாமென்க.

இங்ஙனமே சாக்கிராவத்தையில் அரவினாற் கடியுண்ட ஒருவன் சொப்பனாவத்தையிற் சென்றஞான்று ஆங்கு ஔடதம் உட்கொள்ளுவானாயின் அவ்வௌடதமானது அரவின் விடத்தை நீக்குமா? நீக்காதன்றோ? ஏனெனின், அரவினாற் கடியுண்டது அவனது தூலோபாதி யாகலின், சொப்பனாவத்தைக்கு வந்தஞான்று அத்தூலோபாதி மாறி விடுவதனாலேயாமென்க. சொப்பனத்தில் நினைவெழுச்சியும், சுழுத்தியில்அந்நினைவொடுக்கமுமாயிருத்தலினால், இதுகார ணமாக அவ்விரவத்தாக் காட்சிகளாகிய சூக்கும காரணோ பாதிகளிரண்டும்மாறிக்கொண்டிருக்கின்றன. ஆயினும் சாக்கி ராவத்தாக்காட்சியாகிய தூலோபாதியானது எங்ஙனம்மாறு தலுக்கியைந்ததாகும்? அது பந்தமுத்தி சாதனங்களுக்கு உரியதாயிருக்கின்றதேயெனின், இதனால் இது துக்கசுக வெழுச்சிக்கியைந்த வியவகாரம் நிகழ்வதற்கேதுவா யிருக் கின்றதென்றுகின்றது. சொப்பனாவத்தையிலும் துக்கசுக வெழுச்சிக் கியைந்தவியவகாரம் நிகழ்வதனால் அவ்வவத் தாக் காட்சிமாத்திரம் எங்ஙனம் மாறிக்கொண்டிருக்கலாம்? அன்றியும், இச்சாக்கிராவத்தையில் சமஷ்டி, வியஷ்டியா கக் காணப்படுங்காட்சிகளில் சமஷ்டிக்காட்சிகளாகிய சர்வ திரிசியங்களும் ஆராயாஞான்றுள்ளனவாயும், ஆராய்ந்த

ஞான்று இல்லனவாயுமாகின்றன. உள்ளனவாயிருப்பது அவிவேகத்தினாலும் இல்லனவாவது விவேகத்தாலுமெனினும் அவ்விருநிலையையும் எய்திமாறுவது ஜசாக்கிரக்காட்சிகளன்றோ? இங்ஙனமே விஷ்டிக்காட்சியாகிய தூலோபாதியும், ஆராயாஞான்று உள்ளதாயும், ஆராயுஞான்று இல்லதாயும்மாறுகின்றதன்றோ? இவ்வோரவத்தையிலேயே இவைகள் உள்ளனவாகவும், இல்லனவாகவும் மாறுகின்றனவாயின் மற்ற அவத்தைகளில் எங்ஙனம்மாறாது இருப்பாயிருக்கும்? இதுகாறுங் கூறிவந்ததா லென்னவாயிற்றெனின், சாக்கிராதியவத்தைகள் மாறுஞான்று உபாதிகளும்மாறுமென்பதே சித்தாந்தமாயிற்றென்க. இதனாலேயே,

கைவல்லியர்.

தூலசூக் குமவஞ் ஞானந் தோன்றுமூன் றவத்தை தாமுங்
காலமோர் மூன்றுஞ் சன்மக் கடலெழு கல்லோ லங்கள்
போலவே வந்து வந்து போனவெத் தனையென் பேனுன்
ஆலமர் கடவு ளாணை யவைக்கெலாம் சாட்சி நீயே.

என்று கூறியிருக்கின்றதென்க.

இங்ஙனம் மாறுகின்ற அவத்தாத்திரயமுதலியவைகளைச்சாட்சியாயிருந்தறிகின்ற சித்துப்பொருளானது அவற்றைப் பொருள்களாக அறிகின்றதா? அன்றிக் கற்பனையாக அறிகின்றதா? பொருளாகவே அறிகின்றதெனின், அதனால் காமக்குரோதாதிகளின் வசமாகியுழலவும், அவற்றின்பயனாகிய துக்கவிவிர்த்தியால் வருந்தவும் நேரிடுகின்றதே! இங்ங

னம் தூங்கவிர்த்தியினால் வருந்துவதற்குத்தானோ அவற்றைப் பொருள்களாக மயங்கியுணர்வது? அத் துக்கம் நீங்கியிருத்த லன்றோ (அதாவது துக்கநிவர்த்தி வாய்த்தலன்றோ) அறிவுடைமை யென்றபாலது? எங்ஙனமிருந்தால் துக்கநிவர்த்தி வாய்க்கும்? ஷெ அவத்தாத்திரய முதலானவைகளைக் கற்பனையாக அறிந்திருப்பதனாலன்றோ? அஃதெங்ஙனமெனின், அவற்றைக் கற்பனையாக அறிவதனால் நல்லது, கெட்டது, உயர்ந்தது, தாழ்ந்தது முதலான துவந்துவமாகவுணரும் பேதபுத்தியும், அதனால் காமக்குரோதாதிகளும் விளையாதாகலின் இக்காமக்குரோதாதியால் வாய்க்கும் துக்கமுமின்றி இருத்தற்கியலும் இஃதன்றோ துக்கநிவிர்த்தியென்று சொல்லப்படுவது? அன்றியும் ஷெ அவத்தாத்திரய முதலியவைகளைக் கற்பனையென்று உணர்வதனால் துக்கநிவிர்த்தி வாய்க்குமெனின், (அங்ஙனம் அயலையறிகின்ற) தன்னையேயறிவதாயின் சர்வதுக்கநிவர்த்தியும் பரமானந்தப்பிராப்தியும் வாய்க்குமன்றோ? ஆகலின் தன்னையறிவதே அறிவுடைமையென்றும், அன்னியத்தைக் கற்பனையாக அறிவதாயினும் அஃது அறியாமையென்றும் ஆன்றோர் கூறியிருக்கின்றனரென்க. என்னை,

சசிவர்ண போதம்.

மெய்ம்மையறி வல்லதமில் வேறறிவ தெல்லாம்
தம்மையறி யும்மறிவ தேயறிவு தானே. எனவும்,

திருமந்திரம்.

பிணைமாய வேண்டாம் பிதற்றவும் வேண்டாம்
தனையாய்ந் திருப்பதே தத்துவந் தானே.
எனவுங் கூறியிருப்ப துணர்க.

தன்னையே தானறிந்துக்கொண் டிருப்பதென்னை? தன்னையே தானறிவதாயின் அஃது ஒருபுருடன் தன்தோளிலேயே ஏறுவதுபோன்றதும், ஒருவயிரமானது தன்னையேயறுத்துக்கொள்வது போன்றதுமான * தன்னைப்பற்றுந் தோடத்திற்குள்ளாகின்ற தன்றோவெனின், அங்ஙனமறிவதாவது: அறிவானது தனக்கு வேருயிருந்து தன்னையே யறிவதன்று. பின்னரெங்ஙனமெனின், அயலாகின்ற நாமரூபங்கள் யாவும் ஆராய்ச்சியினுல் அல்ல இல்லையென்று நியதிகளையப்பட்டமையால் அவ்வயல்பாவமென்பது கிஞ்சித்துமின்றித் தனதுஅகண்டசொரூபமாகிய அறிவுசொரூபமாக நிலைத்துவிடுதலேயன்றி வேறன்றென்க. என்னை?

ரிபுகீதை.

கற்பிதமாஞ் சீவபர வுபாதி யெல்லாங் களங்கமற விசாரித்து நேதி செய்து,தற்பதலட் சியமான பிரம ரூபந் துவம்பதலட் சியமான நானே யென்று, நிர்ப்பயமா யகண்டார்த்த போதம் பெற்று நீக்கவொண்ணுப் பவமந்த மனைத்துநீக்கி, அற்பமிலா வகண்டார்த்த வடிவே யாகி யநவரத மான்மாவிலமர்ந்து நிற்பாய். என்று கூறியவாற்ரு லுணர்க.

இங்ஙனஞ் சத்தாகத் தேரப்பட்ட வியாபகவிளக்கமே சித்தாகவுமிருப்பதாய் சத்துக்குச் சித்தென்பது வேறுபடாமலும், சித்துக்குச் சத்தென்பது வேறுபடாமலும் இரண்டும் அபேதமுற்றிருக்கின்றதன்ரே? இவ்வபேதமாகிய ஒரு

* தன்னைப்பற்றுந் தோடத்திற்கு ஆத்மாசிரயதோஷமென்று சொல்லப்படுகின்றது.

மைப்பாடானது என்னவெனப்படும்? இஃதன்றோ இன் புருவெனப்படுவது? அஃது எங்ஙனமின்புருவெனப்படுமெ னின், கால, தேச வஸ்து பரிச்சேத ரகிதமாயிருப்பது சத் தும், இதையன்றி அயலென்பது கிஞ்சித்துமிருக்கநாடாது தன்னையே விடாதுணர்ந்திலகுவது சித்துமாதலால் இச்சத் துஞ் சித்தும் எஞ்ஞான்றும் ஏகமாகி (அபேதமாகி) நிற் கும் வியாபக விளக்கமாகின்ற தன்னையன்றித் தன்பால் ஆரோபமாகத் தோற்றுந் திரிசியபேதங்கள் யாவும் எங்ஙன மின்றாகின்றனவோ, அங்ஙனமே அத்திரிசியங்களை (விஸ் மரணையாக அதாவது எதிரிட்டு) அறியுஞான்று அவற்றின் காரணமாய் உதயமாவனபோன் றிருக்கும் இன்பப்பகுதி களும் தன்னையன்றியின்று. இங்ஙனம் தன்னையன்றியின் றான இன்பப்பகுதிகள் யாவும் தனது சொரூபமேயாக லான் தானே இன்ப சொரூபமென்க. அவ்வின்பம் விஸ்ம ரணையாக அறியுஞான்று நிலையின்றி விளங்குமாயினும், சத்துஞ் சித்தும் அபேதமாகின்ற தஸ்மரணையாய் நின்ற அவசரத்து அவ்வின்பம் எஞ்ஞான்றும் மாறாத சதாநந்த மாக விளங்குமன்றோ? இதனாலன்றோ,

கைவல்லியம்.

சத்தேசித் தாகுமய லெனிலசத்தா மசத்தானாற் சாட்சி யெங்கே, சித்தேசத் தாகுமய லெனிற்சடமாஞ் சடங்களுக் குத் திதியு மில்லை, யொத்தேதோன் றியசத்துஞ் சித்துநல்ல சுகமாகு மேகத் துக்கோர், வித்தேயன் னியமாகிற் சடமசத் தாஞ் சுவாநுபவம் விளைந்தி டாதே. எனவும்,

திருக்கு திரிசியவிவேகம்.

சத்துசித் தொத்தவிடந் தானறிவா நந்தமெனல்
உத்தி யநுபவத்தா லுண்மையே - எத்தனையும்
உண்டே லறிவன்றி யுண்டாம் பிறிதின்பங்
கண்டார்க் கெஃதுண்மை காண். எனவும்,

கூறியிருக்கின்றன?

முன்ஞான்று கூறிய கால தேச வஸ்து பரிச்சேதமாவ திவாதெனின், முதலாவது எது உற்பத்திக்கு முன்ஞான்றும், நாசத்திற்குப் பின்ஞான்றும் இன்றென்னும் பிராகபாவ, பிரதொம்சா பாவங்களை எய்துகின்ற தோ அது காலத்தால்பரிச்சேதமுடையதாகும். அதாவது கட, பட முதலியவைகள் உற்பத்திக்கு முன்ஞான்றும், நாசத்திற்குப்பின்ஞான்றும் இன்மையையெய்துவதால் இவை கள்காலபரிச்சேதமுடையனவாகும். இரண்டாவதுஎது ஓரிடத்திலிருந்துகொண்டு மற்றோரிடத்தில் எஞ்ஞான்று மின்றென்னும் அத்தியந்தாபாவத்தை எய்துகின்றதோ அது தேசத்தாற்பரிச்சேதமுடையதாகும். அதாவது மண்ணின் விகாரமாகிய காரியபேதங்களனைத்தும் மண்ணின்கண் இருந்துகொண்டு நீரின்கண் எஞ்ஞான்று அன்மையை எய்துவதால் இவைகள்தேசபரிச்சேதமுடையனவாகும்.மூன்றாவது எது தான் மற்றபொருளாகாமலும் மற்றபொருள் தானாகாமலும், தான்மற்றபொருளிலும்,மற்றபொருள் தன்னிலுமில்லாமலும் ஒன்றிலொன்றில்லையென்னும் அந்நியோந்நியாபாவத்தை யெய்துகின்றதோ அது வஸ்துவாற் பரிச்சேதமுடைய

தாகும்! அதாவது, கடம் படமாகாமலும், படம் கடமாகாம லும், கடத்திற்படமும் படத்திற்கடமுமில்லாமலும் ஒன்றி லொன்றின்மையை எய்துவதால்இவைகள் வஸ்துபரிச்சேத முடையனவாகும்.

இங்ஙனம் கிரிசியபேதங்களனைத்தும் ஷை கால தேச வஸ்து பரிச்சேத சகிதமாகவேயிருக்குமாதலால் வியாபக விளக்கமாகிய அறிவானது ஷை மூன்றுபரிச்சேதமுமின்றி (பரிச்சேதரகிதமா)யிருக்குமென்க. அஃதெங்ஙனமெனின், வியாபக விளக்கமானது உற்பத்தி நாசமின்றி என்றுமிருந் தபடியேயிருக்கும் பாரமார்த்திக சத்தாகலின் காலபரிச் சேதமற்றதாயும், சர்வபரிபூரணமாய் நீக்கமின்றி எங்குமிரு த்தலால், தேசபரிச்சேதமற்றதாயும், தன்னையன்றி இரண் டாவதாக வேறொருபொருளும் சுசாதிக, விசாதிக, சுவகத பேதமாகவின்றாதலால் வஸ்துபரிச்சேதமற்றதாயும் இருக்கி ன்றதென்க.

இதுநிற்க,வியாபகவிளக்கமானது இன்புரு (அதாவது ஆநந்தசொரூபம்) என்பதைப்பற்றி இன்னும் நன்குவிளக் கவேண்டுமெனின், சத்திலக்கணத்திற்கு எதிர்மறையிலக்க ணம் யாது? அசத்திலக்கணமெனின், சத்துக்கு உபலக்கண மாயிருப்பவை யாவை?சித்தும் ஆனந்தமுமான இலக்கணங் களன்றோ? ஆமெனின், சித்து ஆனந்தமென்னும் இவ்விரண் டிக்கும் எதிர்மறையிலக்கணங்களெவை? சடமுந்துக்கமும ன்றோ?ஆமெனின்,இச்சடதுக்க மிரண்டும் அசத்தென்னுமி

லக்கணத்திற்கு உபலக்கணமாகவும் இருக்கின்றனவன்றோ? இங்ஙனமாகிய இலக்கணங்கள் சத்து, சித்து, ஆநந்தம் என ஒருவகுப்பும்; அசத்து(அல்லது அநூர்தம்), சடம் துக்கமென மற்றொரு வகுப்புமாகப் பிரிந்தமையால், இவ்விருவகுப்புக்கும் இயைந்த இலக்கியங்க ளென்பவை யாவை? சத்து, சித்து, ஆநந்தமென்னும் இம்மூன்றிலக்கணங்களுக்குமியைந்த இலக்கியமானது வியாபக விளக்க சைதன்னியமென முன்னரேன்றே தீர்மானமானதால் இவற்றிற் கெதிர்மறையான அசத்து, சட, துக்க இலக்கணங்களுக்கியைந்த இலக்கியம் நாமரூப வுலகமெனச் சொல்லாது வேறு யாதெனச் சொல்லுகின்றது? இதனால் உலகமானது துக்கசொரூபமென்று ஏற்பட்டதன்றோ? அன்றியும், உலகத்தைப்பந்தித்து அநுபவித்தவர்களில் ஒருவரேனும் அவாவென்பதிறந்து திருப்தியுற்றவருண்டா? திருப்தியுறாமைக்குக் காரணமென்னை? பந்திக்குமுன்று இன்புருவம்போலத் தோன்றிப் பின்னான்று துன்புருவாய் மாறிவிடுகின்றதனாலன்றோ? ஆகலின் உலகமென்பது துக்கவடிவமென்பதற்கு இழுக்கின்றென்க. இங்ஙனம் உலகத்தினது துக்காநுபவம் அறிவானது விஸ்மரணையில் உயிர்ப்பேதங்களாக ஆரோபப்பட்டிருந்து அவ்வுலகத்தைச் சுகசாதனமாக மருவுவதனாலன்றோ வாய்க்கின்றது?

அங்ஙனமின்றி அறிவானது தஸ்மரணையில் அதிஷ்டான சொரூபமாய் நிலைத்துவிடுமாயின் வியாபக விளக்கா

நந்தமாகின்ற தனது சுவாநுபவம் வாய்க்குமன்றே? இத னாலேயே, திருக்குறள் - மெய்யுணர்வு அதிகாரத்தில்,

இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு. எனவும்,

ஷை அவாவறுத்தல் அதிகாரத்தில்,

இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின். எனவும்,

இதுவுமது.

வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மதற்கொப்ப தில். எனவும்,

பிரத்தியட்சாநுபூதி விளக்கம்.

இம்மை நழுவி லெதுவோ வறிகில மெவ்வுயிர்க்கும்
இம்மை யுருவா லறிந்தோ மநர்த்த மிதையகற்ற
இம்மையிற் றானே விசாரித்துக் காணி லெமதுருவை
இம்மையி லேசுக வாரிதி யாகுதுமென்சொல்வமே. எனவும்,

தத்துவராயர் பாடுதுறை.

சாதி கழிந்ததென் றாதேடா காளம்
சங்கை தவிர்ந்ததென் றாதேடா காளம்
சோதி சுகமேயென் றாதேடா காளம்
சொல்லவொண் ணாததென் றாதேடா காளம். எனவும்,

கைவல்லியம்.

சித்துநா னிறைந்தோ னென்ற திடமற வாதி ருந்தால்
எத்தனை யெண்ணி னாலு மேதுசெய் தாலு மென்ன
நித்திரை தெளிந்த பின்னர் நிற்கின்ற கனவைப் போல
அத்தனை யும்பொய் தானே யாநந்த வடிவா னானே. எனவும்,

தாயுமானவர்.

"சோதியே சுகவாரியே. எனவும் பிறவுங்கூறியிருக்கின் றனவென்க.

நமது அதிஷ்டான சொரூபம் விபாபகவிளக்கமாயிருப்பதோடு ஆநந்த சொரூபமாகவுமிருக்க,

"கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி."

என்னுந் திருக்குறள் வாக்கியத்திற்கிலக்காக வாளாஇராமல், இதைத் தக்கோர்பாலடுத்துக் கேட்கவேண்டியவாறுகேட்டு நிட்டைகூடித்தெளியாது பிராதிபாஸிகத் தோற்றங்களாகிய விடயங்களின்மீது தத்தம்பிரியத்தையேற்றி ஒவ்வோர் விடயங்களுமே பிரியசொரூபமாயிருக்கின்றனவெனப் போலிச்சுகத்தைச் சுகித்து வருவது எத்துணை யறியாமையெனப்படும்? சுகமானது விடயங்களின்பாலதன்றோவெனின், அச்சுகம் மாறாத்தகையதா? மாறுந்தகையதா? மாறுந்தகையதெனின், ஒவ்வோர் விடயமும் என்ஞான்றும் சுகசொரூபமாகவன்றோ விருக்கவேண்டும்? அங்ஙனமின்றி எவ்விடயம்

ஒருவருக்குஓர்ஞான்று இன்புருவாய்த்தோற்றுகிறதோ அவ் விடயமே அவருக்கு மற்றோர்ஞான்று துன்புருவாயும், துன் புருவாய்த்தோற்றுவது இன்னோர்ஞான்று இன்புருவாயும், பிறிதோர்ஞான்று உபேட்சையுருவாயுந் தோற்றுவானேன்?

அன்றியும் ஒருவருக்கு இன்புருவாய்த் தோற்றுகிற விடயமே அஞ்ஞான்று மற்றொருவருக்குத் துன்புருவாயும், பின்னொருவருக்கு உபேட்சை யுருவாயும் மாறிமாறித்தோ ற்றுவானேன்? விடயங்கள் சுகசொரூபமாயின் அச்சுகம்விட யங்களின்பால் இயற்கையா யிருப்பதன்றோ? இயற்கையா கிய சுகம் மாறலாமா? மாறுகின்றபடியினால் அஃதெங்ஙனம் இயற்கையெனப்படும்? இதனால்அவ்விடயங்கள் ஒவ்வொன் றும் சுகசொரூபங்களன்றெனவும்,நமதுபிரியத்தையேஏற்றி யேற்றி அநுபவிக்கின்றோமெனவும் விளங்குகின்றதன்றோ? இங்ஙனமிருக்கும் இவ்விபரீதங்களையெல்லாம் எஞ்ஞான் றேனும் நிதானித்ததுண்டா? இல்லையே! கல்வி கேள்விகளி ல்லா மூடர்கள்தாம் நிதானிக்காவிடினும், கல்வி கேள்விக ளில் சிறந்த விவேகிகளாகிய நாமாவது நிதானிக்கவேண்டு மன்றோ? அங்ஙனம் நிதானித்து அதிஷ்டானமாயிருக்கும் வியாபகவிளக்கமாகிய நமது யதார்த்த சொரூபத்தைநாடி அதனது சிற்சுகோதயவிலாசத்தைஅநுபவித்தறியாது வழி படுதற்கு அந்நியமாகக் கற்பிக்கப்பட்ட பரமென்னும் ஓர்வ ஸ்து என்றுமிருப்பாகவுள்ளதென்றும், அப்பரம் மாறாச்சுக சொரூபியென்றும் உயிர்கள் தத்தம் தவமுதிர்ந்தஞான்று

அப்பரத்தின் மாறுச்சுகத்தை யடைந்து மாறுதநுபவிக்கின்றனரென்றுங் கூறுவது பொருத்தமுடையதாகுமா? அஃது எங்ஙனம் பொருத்தமுடையதாகாதெனின், கூறுதும்.

பரசுகத்தை யநுபவிக்கப்போகின்ற ஒவ்வோர் உயிர்களுக்கும் சுகமென்பதுண்டா? இன்று? உண்டாயின் பரசுகத்தை நாடவேண்டிய அவசியமின்று. ஆகலின் இன்றென்பதே திண்ணமெனின், இதனுல் அவ்வொவ்வோருயிரும் துக்கசொரூபிகளென்று விளங்குகின்றது. அத்துக்கம் அஷ்உயிர்களுக்கு இயற்கையா? செயற்கையா? இயற்கைதானெனின், இயற்கையாயுள்ள துக்கம் என்றும் மாறுதிருப்பதாகலின் இத்துக்கவிருப்பின்கண் பரசுகமானது எங்ஙனம் வந்து நுழைதற்கிடம்பெறும்? அங்ஙனமின்றித் துக்கமானது உயிர்களுக்குச் செயற்கையாக வந்ததெனின், செற்கையாகிய துக்கம்வருவதற்கு முன்ஞான்று இருந்தது எதுவெனப்படும்? சுகமெனின், அச்சுகமும் இயற்கையா? செயற்கையா? இயற்கையேயெனின், இயற்கையாகிய சுகவிருப்பின்கண் இடைஞான்று துக்கம்வருவதற் கேதுவென்னே! அத்துக்கம் வந்தடைதற்கும் இடமென்பதெங்கே? இங்ஙனம் துக்கசுகங்கள் போவது வருவதுமாகக் கூறுவது மிக்க விந்தையாயிருக்கின்றது!

அன்றியும் உயிர்கள் பெறுவதாகச்சொல்லப்படும் பரசுகமானது அப்பரத்துக்கு இயற்கையா? செயற்கையா? இயற்கையையேயெனின், அவ்வியற்கைசுகம் எங்ஙனம் பரத்

தைவிட்டுப்பிரிந்து உயிர்களின்பால் வந்தடையும்? பாலி னதுவெண்மையும், அக்கினியினதுசூடும், சலத்தின்துதண் ணமையும் அதன்தன் முதலைவிட்டுப்பிரிந்து மற்றொருமுதலைய டையுமாயின் பரத்தினதுசுகமும் அதனைவிட்டுப்பிரிந்து உயிர்களின்பால் வந்தடைவதாகக் கொள்ளலாம். அங்ஙன மின்றே! மலர்முதலியவைகள் தம்பாலடுத்தபொருள்களுக் குத் தமது மணத்தைத்தருவது போலப் பரமும் தம்மையடு த்த உயிர்களுக்குத் தனது சுகத்தைத்தருவதாகக் கொள்ள க்கூடாதோவெனின்,மலராதியிலுள்ளமணம் தனியே மலரா தியைவிட்டுப் பிரிந்துசென்று மற்றைப் பொருள்களோடு பொருந்துகின்றதில்லை. ஏனெனின், குணமாயிருக்கும் மண மானது குணியைவிட்டுப்பிரிவது அசாத்தியமாகலினென்க. பின்னரெங்ஙனமெனின், காற்றின்சகாயத்தினால் மலராதியி னின்று பிரிந்த அதிநுட்பவணுப்பொருள்கள் அடுத்திருக் கும் மற்றைப்பொருள்களைப் பொருந்துகின்றன. அங்ஙனம் பொருந்துகின்ற அணுப்பொருள்கள் மணத்தோடு அபேத முற்றனவாகலின் மலராதியினின்றும் பிரிந்த பகுதிக்குத்த க்க மணத்தோடிருக்கின்றன.

இதனால் மணமானது (தனியே) மற்றைப்பொருள் களோடு பொருந்தி யிருக்கின்றதென்னும் திருட்டாந்தம் ஆபாசமாயினதென்க. ஷை மணமானது அணுப்பொ ருள்களோடு அபேதமுற்றிருந்தே மற்றைப் பொருள்க ளைப் பொருந்துகின்றதாயின் மணமானது புலப்படுமாறு

அணுப்பொருள்கள் ஏன்புலப்படக்கூடாதெனின், குணமாகிய மணத்தைப்பார்க்கினும் குணியாகிய அணுத்திரட்சி சூக்குமமாகலினென்க. அன்றியும் ஷை திருட்டாந்தத்தின்படியே பரத்தினது சுகம் உயிர்களின்பால் வந்தடைவதாகக்கொள்ளுவதாயின், அது பரத்திற்கே ஆணியைத் தேடிவைக்கின்றதாயிருக்கின்றது. அஃதெங்ஙனமெனின், மலராதியின்றும் வெளிப்படும் அணுப்பொருள்கள் காரணமாகி மணமானது வெளிப்படுமாறு சுகமும் பரத்தினின்று வெளிப்படுஞான்று அப்பரத்தினின்றும் பிரிகின்ற சிலபாகங்கள் காரணமாகவே வெளிப்படவேண்டும். அங்ஙனம் வெளிப்படும் பாகங்களெவை? அன்றியும் பரத்தையடுத்த பல்லுயிர்களுக்கும் சுகத்தைத்தரும் பரமானது ஒவ்வோருயிருக்கும் எத்துணையெத்துணையாகத் தனது சுகத்தைப்பாகித்துத் தருகின்றதோ அத்துணையத்துணையும் தனது சொரூபத்தையும் பாகித்துத் தரவேண்டியதாயிருக்கின்றதே! சீவகோடிகள் அளவின்றியிருத்தலால் அத்துணைச்சீவர்களும் தன்னையடுத்தடுத்துத் தனதுசுகத்தோடு கூடிய சொரூபத்தைப்பாகித்துச்சென்றால்தனக்குக்கிஞ்சித்தும் பொருளென்பதின்றிச் சூன்யமாய் முடியவேண்டுமே! இங்ஙனம் பரத்தைச் சூன்யமாக்குதற்குத்தானோ இத்திருட்டாந்தங்கூறிப் பரத்தினது சுகத்திற்கு விழைகின்றது?

அங்ஙனமின்றிப் பரத்தின்விடயத்தில் கொஞ்சம் அபிமானம்வைத்து அப்பரம் தனது சொரூபம் இருந்தவாறிரு

க்கச் சுகத்தைமாத்திரம் உயிர்களுக்குத் தருகின்றதாகக் கூறுவோமே யெனின், பல்லுயிர்களுக்கும் சுகத்தைச்சிறிதுசிறிதாகத்தந்துகொண்டிருக்கின் தனது சுகமெல்லாம் ஒழிந்துபோய்விடுமே! இனிமேல்தன்னை வந்தடுக்கும் உயிர்களுக்கு எதைத்தருகின்றது? தருவதற்கு ஒன்றுமில்லையாயின் பட்டகஷ்டத்திற்குப் பயனையடையாது அவ்வுயிர்கள் ஏமாந்துபோகநேரிடுமே! அஃதொருபுறமிருக்க, சுகசொரூபியாயிருந்த பரமானது சுகத்தையெல்லாந் தத்தஞ்செய்துவிட்டுத் தான் என்னசொரூபியாயிருக்கின்றது? துக்கசொரூபியாகவா? அத்துக்கத்தைப் பரமானது எதன்கணிருந்து பெறுகின்றது? நாமரூப உலகத்தின்கணிருந்தா? இங்ஙனம் பரமானது தனதுரிமையையிழந்துவிட்டுப் பிறவுரிமைக்குக் கையேந்தியும் நிற்கலாமா? அன்றியும் பரமானது துக்கசொரூபியாயிருக்குமாயின் இனிமேல்எவ்வுயிர்களும் தன்னையடுப்பதற்கு அஞ்சவேண்டியதாகுமன்றோ?

இன்னும் இதைப்பற்றி யூகிக்கப் பலவாகிய தோடங்கள் வாய்க்குமே! இதற்கென்செய்குதும்? எங்ஙனமாயினும் பக்தர்களுக்கு அச்சுகம் வாய்த்திருக்கின்றதேயெனின், நாமரூபவுலகத்தின்மீது தத்தம் பிரியத்தை யேற்றியேற்றிச் சுகமானது அந்நாமரூபவுலகத்தினதேயென்று மயங்கிச் சுகித்துவருவதுபோல ஷைபக்தர்களும் தத்தம் பிரியத்தைப் பரத்தின்மீதேற்றிச் சுகமானது அப்பரத்தினதேயென்றுமயங்கிச் சுகிப்பதேயன்றி வேறன்றென்க. இஃ

தெதுபோன்றதெனின், பசியால் மிகவும் வருந்திய ஓர்நாயானது பசையற்ற என்பைக் கவ்விக் கடிக்குஞான்று அவ்வென்பு தனது பல்லின் ஈறு அண்ணம் இவற்றில்தாக்கிச் சிறிது காயமுண்டாக அதனால் ஆங்கிருந்துவடியும் உதிரத்தைத் தானே உருசித்து அவ்வென்பை மீண்டுமீண்டுங் கடித்துக்கொண்டிருப்பதுபோலன்றோ விருக்கின்றது?

அன்றியும் சிற்றின்பமென்றும், பேரின்பமென்றுஞ் சொல்லப்படுகின்ற இவற்றுள், சிற்றின்பம் சகத்தினதென்றும், பேரின்பம் பரத்தினதென்றுங்கொண்டு கற்றவர்களுங் கல்லாதவர்களும் உழலுவானேன்? கற்றவர்களெல்லாம் உலகம் துக்கசொரூபமென்றும், அதின் வாழ்வு துக்கவாழ்வென்றும் கூறுகின்றனரேயெனின், அங்ஙனங் கூறுகின்றவர்கள் ௸ துக்கவாழ்வினின்றும் ஒதுங்கியிருப்பவர்களா? ஒதுங்கியிருப்பவர்களாயின், அவர்கள் அறிவுடையவர்களென்பதற்குமுரணின்று. அவ்வறிவாளர்கள் உலகிருப்பையுந் தன்னிருப்பையும் ஆராய்ந்து தெளிந்தவர்களாயிருக்கவேண்டுமே! அங்ஙனந்தெளிந்திருந்தால் மனோவிர்த்தியான தடங்கி அறிவாகாரமாகியஅகண்டாகாரவிர்த்தியானது பிரகாசிக்கவேண்டுமே! பிரகாசிக்குமாயின் துக்கமென்பது கிஞ்சித்துந் தலைகாட்டாதன்றோ? என்னை,

உபநிடதவாக்கியம்.

மிக்கபரா தீனர்களே யுலகமெலா மதில்விருப்பு வெறுப்பற் றோர்கள், தொக்கமனோ விருத்தியணு மாத்திரமா யறிவகண்ட சொரூப மாகும், அக்கதிக டோராதார்க் கறிவணு

வா மனோவிருத்தி யகண்ட மாகத்,தக்கபிரா ரத்தவசத் தவ
ராகிப் பிறந்திறந்து தளர்கின் றாரே.

என்று கூறியிருப்பதனாலென்க.

ஆகலின் ஷை கற்றவர்களாகிய அறிவுடையோர் அங்ஙனமிருப்பவர்கள் தானே? ஆமெனின்,அவர்களுக்குத் 'தள்ளும் பொருளில்லை கொள்ளும் பொருளில்லை சாற்றிலெங்கும்' என்றுகூறிய ஆன்றோர் வாக்கியப்படி யிருக்கவேண்டுமே! இருப்பின் சர்வம்மித்தை, சர்வம்பிரமம், சர்வம்நான் என்கிற வேதமுடிவாகிய அரியதீர்ப்பை மாயாவாதம், மாயாவாதமென ஆங்காங்குந் தத்தந் திருக்குழாங்களோடு கொடூரமாகப் பிரசங்கித்துக்கொண்டிருப்பானேன்? சர்வம்மித்தை முதலாகச் சொல்லப்பட்ட மூன்றினது நிலைமையுமெங்ஙனமெனின், (1 வது) காணப்படுவனவாகிய சர்வதிரிசியங்களிலும் ஒன்றை யெடுத்தாராய்ந்தால் அது தனக்கோர் உபாதானத்தைத் தழுவிக்கொண்டு தான் உபாதேயமாயும், அவ்வுபாதானத்தையன்றித் தான் மூன்றுகாலத்துமில்லாத கற்பனையாயுமிருக்கின்றது. அதாவது தனக்கெனக்கிஞ்சித்துஞ் சொரூபமென்பதின்றிக் குணந்தொழிலால் கற்பிக்கப்பட்ட மித்தையாயிருக்கின்றது. இங்ஙனமே, மாயையும் அதனால் கற்பிக்கப்பட்ட சகசீவமாதிகளும் இருக்கின்றமையினால் சர்வம்மித்தையென்று சொல்லப்பட்டதென்க. என்னை

ரிபுகீதை.

கனவினிடைத் திரிசியமாய்க் காணப் பட்ட
கடபடமே முதலியவு மித்தை யேபோல்

நனவினிடைத் திரிசியமாய் நீட்டப் பட்ட
நாநாவாஞ் சகசீவ பரமு மித்தை
அனையதெலா மறிகின்ற திருக்கே யான
ஆன்மாவுக் கபின்னமதாம் பிரம மொன்றே
அநவரத மழியாத வுண்மை வத்து
அறைந்ததிலோ ரணுவேனு மைய மில்லை.

என்று கூறியிருப்பதனுலென்க

(2-வது) சர்வம் பிரமமென்பது எங்ஙனமெனின், திரிசியமாகிய சகசீவபரமென்னும் சர்வமும் மித்தையாகுமாயின் சத்தியமாயிருப்பதாகிய பொருளொன்று ஏற்படவேண்டுமன்றோ? அன்றியும் மித்தையாகிய சர்வமும் ஆரோபமாதலால் இவ்வாரோபத்திற்கு அதிஷ்டானமாகவும் ஒன்றிருக்கவேண்டுமன்றோ? அங்ஙனம் சத்தியமாகவும், அதிஷ்டானமாகவுமிருப்பதாகிய பொருள்யாதெனப்படும்? அஃதன்றோ வியாபகவிளக்கமாகிய பரம்பொருளென்பது? அதனிடத்தன்றோ" கானலிடைத் தெண்ணீருங் கயிற்றினில் வாளரவு மலைகடலிற்பட்ட கூன்முதுகிப்பியில் வெள்ளியும்" போல சகசீவபரமென்னு மிவைகள் தோன்றி யொடுங்குகின்றன? கானலின்கண் தோன்றிய நீர், கயிற்றின்கண் தோன்றிய அரவு, கிளிஞ்சலின்கண் தோன்றியவெள்ளி ஆகிய இவ்வாரோபங்களுக்கு ஷை கானல்முதலிய அதிஷ்டானங்களைத் தவிர பொருளின்றுதலால் மீண்டும் ஷை அதிஷ்டானங்களாகவே முடிகின்றன. இதனுல் இருப்பென்ப

வை ஷை அதிஷ்டானங்களேயென்றுகின்றன. இங்ஙனமே சகசீவபரங்களாகிய ஆரோபங்களுக்கும் வியாபகவிளக்க பரம்பொருளாகிய அதிஷ்டானத்தைத்தவிர பொருளின்று தலால் ஈற்றில் அச்சர்வ வாரோபங்களும் வியாபகவிளக்க மாகவே முடிகின்றன. ஆகலின், இருப்பது ஷை வியாபக விளக்க பரம்பொருளேயாமென்க. இதனாலேயே சர்வமும் பிரமமென்று கூறப்பட்டதென்க. என்னை,

ரிபுகீதை.

வானமுத லைம்பூதம் பிரம ரூபம்
வந்தபல பௌதிகமும் பிரம ரூபம்
ஊனமுறு முடன்மூன்றும் பிரம ரூபம்
ஒருமூன்றெ னவத்தைகளும் பிரம ரூபம்
மானவபி மானிகளும் பிரம ரூபம்
மறிவுற்ற வகிலமுமே பிரம ரூபம்
ஞானகனப் பிரமமலா தணுவு மில்லை
ஞாலமுத லெப்பொருளும் பிரம ரூபம்.

என்று கூறியிருப்பதனாலென்க.

(3-வது) சர்வம் நானென்பது எங்ஙனமெனின், முன் னான்று சர்வமும் பிரமமாகத்தேர்ந்தமையால் தத்பதவில ட்சியார்த்தமாகிய பிரமும், துவம்பதவிலட்சியார்த்தமென் னும் கூடஸ்தனாகிய அகம்பொருளும் மகாகாயமும் கடா காயமும் பெயர்மாத்திரத்தால் பேதமாயிருக்கினும் சொரூ பத்தி லெங்ஙனம் அபேதமாயிருக்கின்றதோ அங்ஙனமே

அபேதமாயிருக்கின்றன. அன்றியும், சக சீவபரமாகிய சர்வமும் அறியாமையினாலேயே கற்பிக்கப்பட்டமையால் அவ்வறியாமையாகவே முடிகின்றன. அறியாமையும் அறிவைத் தவிர இன்றாதலால் அவ்வறிவே அகம்பொரு (நானென்னும்பொரு) ளாயிருக்கின்றது. இவற்றால் சர்வமும் நானென்பதென்றே தீர்ப்பாக ஏற்பட்டதென்க. என்னை,

ரிபுகீதை.

பூதமொடு பௌதிகமு மானே னானே
 புவனமுறும் பொருளௌவையு மானே னானே
பேதமுறு முலகமெலா மானே னானே
 பிரமாண்ட கோடிகளு மானே னானே
சாதமுறு மெய்ப்பொருளு மானே னானே
 சகசீவ பரங்களெலா மானே னானே
ஓதுபல வுபாதிகளு மானே னானே
 உபாதியிலா வுண்மையுமா யானே னானே. என்று

கூறியிருப்பதனா லென்க.

இங்ஙனமிருக்கும் அரிய தீர்ப்புகளையெல்லாம் தக்கோர் பாலடுத்து விசாரித்துத் தெளிந்திருப்பார்களாயின் மாயாவாதமென்று பொருத்தமின்றிக் கூறிக்கொண்டிருப்பார்களா? இதனால் இவர்கள் கற்றவராகமதித்தற்கில்லையே!! ஏனெனின், கற்றவர்களுக்கெல்லாம் சாமான்னியராகிய கல்லாதவரைப்பார்க்கினும் விசேடமான யூகமிருக்குமாதலால் அவ்யூகத்தினால் ஒவ்வொன்றையும் யுக்தியநுபவபூர்வகமாக

விசாரித்துத் தெளிந்திருப்பார்கள். அங்ஙனந் தெளிந்திருப்பவரையே தெருள்விழியோரென்று ஆன்றோர் கூறியிருக்கின்றனர். அத்தெருள்விழியோர் இங்ஙனமாகிய அரிய தீர்ப்பை யுக்தமாகவே கண்டிருப்பாராகலின் இதனை மாயாவாதமென்று கூறார்களன்றோ? என்னை,

குமாரதேவர்.

தெருள்விழியோர் துணிவிதெனத் தேர்ந்தனுபூ தியிற்கொள்வர், மருள்விழியோர் திரிவிலிதை மாயாவா தமதென்பர். என்றாராகலி னென்க.

அன்றியும், ஷை தெருள்விழியோரே உலகத்தைத் துக்கவடிவாகக்கண்டு அதனது (போலிச்) சுகத்தைவிரும்பாது ஒதுங்கியிருப்பார்கள். ஆயினும், முன்ஞான்று கற்றவர்களாக (வாளா) கூறப்பட்டவர்கள் உலகம் துக்கசொரூபமென்றும், அதனதுவாழ்வு துக்கவாழ்வென்றுஞ் சொல்லுவார்களா? அவர்கள் இதனை அநாதி நித்திய சத்தென்று(வழுவுறக்)கூறுபவர்களாயிற்றே. ஒருக்கால் துக்கசொரூபமென்று சொல்லினும் வெறும் பேச்சுமாத்திரத்தாலன்றி உள்ளவாறுணர்ந்ததினா லன்றென்க. அதிலும் சில அறிவுடையோர் இவ்வுலகவாழ்வு எத்துணைப்பந்தித்தாலும் நிலையாதகன்று போவதைக்கண்டு இதன்மேல் வெறுப்புற்று நிலையாதிருக்கக்கூடிய சுகமொன்றிருக்கவேண்டுமென்றும், அது பரத்தினதாக வேண்டுமென்றும், அப்பரசுகமே பேரின்பமென்றுங் கருதிச் சிந்தைமாறுகின்றனர். அதனால் இவர்கள் முன்ஞான்று கூறப்பட்டவர்களினும் சற்று உயர்ந்தோரேயாமென்க.

நிற்க, உயிர்கள் காமியத்தவத்தாலடையும் நயம்யாது? இன்பமெனின், அவ்வின்பமென்ன இன்பமெனப்படும்? சிற்றின்பமெனின், அச்சிற்றின்பம் எதன்பாலது? உலகத்தின் பாலதன்றோ? ஏனெனின், காமியத்தவத்தால் வரக்கூடிய மாதர், பொன், தானியம் முதலாகிய அட்ட ஐசுவரியமும் இகவுலகச்சம்பந்தமாக வரக்கூடியதன்றோ? இதுபோலவே புண்ணியவினையின் விசேடத்தால் வாய்க்கக்கூடிய (சுவர்க்கவின்பமாகிய) அரம்பையாதிமாதர், கற்பகத்தரு, காமதேனு, சங்கநிதி, பதுமநிதியாதி போகசாதனமும் பரவுலக சம்பந்தமாக வரக்கூடியதன்றோ? ஆகலின், இவ்விருவின்பங்களும் உலகத்தின்பாலனவெனக. அன்றியும், நிட்காமியத்தவத்தால் வருவதியாது? பேரின்பமெனின், அவ்வின்பம் எதன்பாலது? பரத்தின்பாலதெனின், சிற்றின்பமானது உலகத்தைவிட்டுப் பிரியாததும், பேரின்பமானது பரத்தைவிட்டுப் பிரியாததுமான இயற்கையின்பங்களன்றோ? அவ்வியற்கையின்பங்கள் உயிர்கள் என்னதான்கடுமையாக (காமியநிட்காமிய) தவங்களைப்புரியினும் தத்தம்முதலைவிட்டுப் பிரிந்து அவ்வுயிர்கள்பால் வந்தடையுமா? உயிர்கள் உலகத்தைப்பற்றியே சுகிப்பதனால் அவ்வுலகத்தோடு அதனது சிற்றின்பமும் உயிர்கள்பால் வந்தடைகின்றதெனின், அவ்வின்பம் எத்துணைஞான்றிருப்பது? (காமியத்) தவத்துணையிருப்பதன்றோ? அதன் பின்ஞான்று மாறிவிடுவதன்றோ?

இங்ஙனமே பரமென்பதைப்பற்றின் அதனது இன்பமாகிய பேரின்பமும் எத்துணைஞான்றிருப்பது? எஞ்ஞான்று

மேயெனின், இதுகாறுமில்லாத அவ்வின்பம் இனிவருமா யின் அஃது என்ஞான்று மெனப்படுமா? என்ஞான்றுமெ ன்பது முக்காலத்தையு முடையதன்றோ? அவ்வின்பமும் (நிட்காமியத்) தவத்துணை வாய்க்கின்றதே. அங்ஙனம் வா ய்ப்பதும் பின்ஞான்று அகன்றுபோகக்கூடியதன்றோ? அஃ தகலாதெனின், யாதொன்று முன்ஞான்றின்றி இடைஞான் றுண்டாகின்றதோ அது காரியமாகுமே! இதனாலன்றோ 'முன்னின்மைக் கெதிர்மறை காரிய'மென்று கூறப்பட்டிருக் கின்றது? அக்காரியமும் அழிவை ஏற்கக்கூடியதன்றோ? அன்றியும், "புணர்ந்தனபிரியும்" என்றும் பட்டினத்தடிக ளது வாக்கியமிருக்கின்றதே! ஆகலின் பரத்தினது பேரின்ப மும் உயிர்களின்பால் தவத்துணையிருந்து பின்ஞான்றுமாறி விடுமென்க. இங்ஙனம் மாறிவிடுகின்ற இன்பம் அந்நியவின் பமா? அன்று? அந்நியவின்பந்தானெனின், இதனாலஃது இரவலின்பமென்றாகின்றதே! ஒருவன்செய்த வேலைக்குத் தக்கதாகவாய்க்குங்கூலியானது(அதாவது பொருள்)அவனு க்கு இரவலெனப்படுமா? சொந்தமன்றோ? அதுபோலவே தவத்துணையாகப் பெறுதற்கியைந்த ஷை இன்பமென்பதும் சொந்தமாகலின் எங்ஙனம் இரவலெனப்படுமெனின்,திருட் டாந்தத்தில் கூறியகூலியானது ஒவ்வொருவருக்கும் எனது, எனதென கொள்ளற்கிடனாய் நிலையாது மாறிக்கொண்டிருப் பதுபோல அவ்வின்பமும் நிலையாதுமாறிக்கொண்டிருப்பது தானே? அது மாறுகின்றதன்றெனின், உயிர்கள்பால் வந்த டையுஞான்று எங்கிருந்துமாறிவந்தடைகின்றது? பரத்தின்

பாலிருந்துதா னெனின், இதனாலிதை மாறுதமென்று எங்ஙனங்கூறலாம்? பரத்தின்பாலிருந்துமாறி உயிர்கள்பால்வந்தது மீண்டும் இவ்வுயிர்கள் பாலிருந்தும் மாறுமன்றோ? இங்ஙனம் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு மாறுவது அந்நியமும் இரவலுமன்றோ?மாறுவதெல்லாம் அந்நியமும், இரவலுமன்றாயின் மாறுதலின்றி நிலையாயிருப்பது அந்நியமும், இரவலுமாக்கும்! இது விந்தையினு மிக்க விந்தை!

நிற்க, காமியம், நிட்காமியமாகிய இருதவங்காரணமாக இகத்திலும் (உலகத்திலும்), பரத்திலும் மொத்துண்ணுதல் யாதுக்காக? அவற்றின் (அந்நிய) இன்பங்களை இரவலாகப்பெற்று இழந்து விடுவதற்காகவா? இதனால் நமக்கெனச் சொந்தவின்பமென்பதின்றோ? உண்டாயின் அந்நியத்தைத் தாவிக்கொண்டு திரிவானேனெனின், நாம் எந்த நானாயிருக்கின்றமையினால் அந்நியத்தைத் தாவுகின்றோம்? தேகோக நானாயிருக்கின்றமையினாலன்றோ? நானென்பதற்குப்பொருள் தேகோகந்தானோ? இத்தேகம் ஆரோபமெனப் படாதிருக்கட்டுமே! அன்றியும், அத்தேகம் தூலமுதலிய மூன்றாக மாறி மாறி சாக்கிரமுதலிய மூன்றவத்தைக் கண்ணும் நம்மாலறியப்படாதிருக்கட்டுமே! நம்மாலறியப்படுபவை நாமாவோமா? எங்ஙனம் பாஞ்சபூத பௌதீகமயமாயுள்ள உலகமுதலிய திரிசியங்கள் நம்மாலறியப்படுகின்றபடியினால் நாமன்றெனப்படுகின்றனவோ, அங்ஙனமே இத்தேகமும் நம்மாலறியப்படுகின்றமையினால் நாமன்றெனச் சொல்லுவதற்

கு யாதுமையமின்றே. இங்ஙனம் கற்பனையாயிருக்கும் அயலைச் சொந்தநாகுகக்கொண்டு ஆத்மா, அல்லது அறிவாகிய நம்மை அந்நியநாகுகக் கொண்டிருப்பதனாலன்றோ? நமது இன்பமும் (அதாவது ஆத்மானந்தமும்) நேரேவிளங்காது அவ்வயலின் காரணமாக அந்நியமாய் விளங்குகின்றது? அந்தோ! இங்ஙனம் நம்மை அந்நிய நாகுகக்கொண்டிருப்பதேனோ! அந்நியமாயுள்ள திரிசியங்களின் காரணமாகவுண்டாகும் இன்பம் ஆத்மானந்தமென்னும் நமதின்பந்தானோ: அத்திரிசியங்களின்பாலதன்றோவெனின், அது திரிசியங்களின்பாலதன்று: நமதின்பமேயாமென்க. எங்ஙனமெனின், நாம் ஒருபொருளை இச்சிக்குஞான்று நமது அந்தக்கரணமானது சத்துவம், இராசதம், தாமதம் என்னும் முக்குணங்களில் இராசதகுண ஆகாரப்படுகின்றது. இராசதகுணமானது எஞ்ஞான்றும் அலைந்துகொண்டேயிருப்பதாகலின் பலவாகிய எண்ணங்களுற்பத்தியாகிச் சாஞ்சல்யத்தைவிளைவிக்கின்றன. அலைவுற்ற அவ்வந்தக்கரணத்தில் ஆத்மசைதன்யத்தின் பிரதிபிம்பமும் விளங்காதாகலின் ஆநந்தமும் விளங்காதிருக்கின்றது. ஏனெனின், அசைவற்றநீரிலேயன்றி அசைவுற்றநீரில் பொருள்களின் பிரதிபிம்பம் உண்டாகாததுபோல அசைவுற்ற அந்தக்கரணத்திலும் ஆத்மாவின் பிரதிபிம்பம் உண்டாகின்றதில்லை. அதனால் அதன்து ஆநந்தமும் விளங்குகின்றதில்லையென்க.

ஆயினும் நாம் இச்சித்தபொருள் கிடைத்தஞான்று அந்தக்கரணமானது சத்துவகுண ஆகாரப்படுகின்றது.

இராசதகுண விர்த்தியினால் வாய்த்த சாஞ்சல்யமும் நீங்குகின்றது. சத்துவகுணமானது அசைவற்றதாகலின், அந்தக்கரணமும் அசைவற்றிருக்க அதன்கண் ஆத்மாவின் பிரதிபிம்பம் களங்கமறவிளங்குகின்றது. அதனால் அதனது ஆநந்தமும் விளங்குகின்றதென்க. இங்ஙனம் இச்சித்தபொருள் அடைவதனாலும், அதனோடு அதையநுபவிப்பதனாலும்உண்டாகும் சத்துவகுண அந்தக்கரணத்தின் சாயையில்விளங்குகின்ற நமதின்பத்தை (அதாவது ஆத்மானந்தத்தை)த் திரிசியங்களின் காரணமாக உண்டாவதாக மயங்கியிருக்கின்றோமேயன்றி உண்மையிலங்ஙனமன்றென்க.

இதனாலும் நாம் ஆநந்தவடிவாய் (அதாவது சுகசொரூபமாய்) விளங்கிக்கொண்டிருக்க அவ்வானந்தமாகிய தற்பிரியத்தைச் சுகிக்கவகைதெரியாது அந்நியத்தின்பேரிலெல்லாம் ஏற்றியேற்றிச் சுகிப்பது என்னமடமையெனப்படும்! அவ்வின்பத்தைச் சுகிக்கவேண்டியவாறு அயல்பாவமென்பது கிஞ்சித்துமின்றி அறிவேவடிவாயிருந்து சுகிக்கக்கூடாதா? சுகிப்பதற்காகவன்றோ,

**கைவல்லியம்.**

அசத்தி லெம்மட்டுண் டம்மட்டும் பாரமுக மாகினையம்மட்டும்,நிசத்தி லுள்விழிப் பார்வையா யிப்படி நிரந்தரப் பழக்கத்தால், வசத்தி லுன்மன நின்றுசின் மாத்திர வடிவமா கிடின்மைந்தா, சுசத்த தேகத்தி லிருக்கினு மானந்தச் சுடல்வடி வாவாயே. எனவும்,

### தத்துவராயர் பாடுதுறை.

தோற்றர வாகத் துணிந்தவூ ரெங்களூர்
சோக மோகங்க டுறந்தவூ ரெங்களூர்
ஆற்ற லுடையா ரடைந்தவூ ரெங்களூர்
ஆநந்த மாகி யிருக்குமூ ரெங்களூர். எனவும்,
பிறவுங் கூறியிருக்கின்றன?

இங்ஙனங் கூறியிருப்பதனால் நாம் சுயபாவமாக (அறிவேவடிவாக)வும், சுகாகாரமாகவும் தெளிந்திருக்க வேண்டுமென்பது நன்றாய் விளங்குகின்றதன்றோ? ஆகலின் இத்துணைவிசாரித்ததனால் வியாபக விளக்கமாயிருக்கும் அகம் பொருளாகிய நாமே அறம், பொருளென்னும் இரண்டு புருஷார்த்தத்திற்கும் இயைந்து விளங்கினதுபோல மூன்றாவதாகிய இன்பமென்னும் புருஷார்த்தத்திற்கும்இயைந்து விளங்குகின்றனமென்பதும் ஐயந்திரிபின்றித் தேரப்பட்டதென்க. இதனாலேயே,

### குமாரதேவர் சாத்திரம்.

என்னின்பே யின்பாய் இருந்தேன்கா ணம்மானே
என்னின்பி னாலே சகமின்பா மம்மானே. எனவும்,

### ரிபுகீதை.

அறிவுருவா யமைவுற்ற ஆன்மா தானே
அனைவருக்குப் பிரியமதால் சுகமு மாகும். எனவுங்
கூறியிருக்கின்றனவென்க.

## இன்பமென்னும் புருஷார்த்தம் முற்றிற்று.

---

# நான்காவது

# வீடென்னும் புருஷார்த்தம்.

முன்ஞான்று கூறப்பட்டவைகளால் அகம்பொருளானது அறம், பொருள், இன்பம் (அதாவது தருமார்த்தகாமம்) என்னும் மூன்று புருஷார்த்தத்திற்கும் இயைந்து விளங்கினதுபோன்று வீடென்னும் நான்காவது புருஷார்த்தத்திற்கும் இயைந்து விளங்கவேண்டுமே. அங்ஙனம் இயைந்து விளங்குகின்றதாவெனின், வீடென்றால் பொருளென்னை? கன்மம், பக்தி, ஞானமென்னுங் காண்டத்திரயத்திலும் கூறப்பட்டிருக்கின்றவாறு விடுதலே வீடென்பதற்குப் பொருளாமெனின், ஞானகாண்டங் கூறுகின்றவாறு எதனைவிடுதல் வீடெனப்படும்? நான், நீயெனவும்; அவன், இவன், அவள், இவள், அது, இதுவெனவுங் காணப்படும் உலகம் பந்தமாதலால் அப்பந்தத்தை விடுதலே (அதாவது அப்பந்தத்தினின்றும் விடுபடுதலே) வீடாமெனின், அறிவானாகிய அகம்பொருளானது அறமாதி நான்கனுள் முதலாவது அறமென்னும் புருஷார்த்தசொரூபியாக வெளிப்படுவதற்கு முன்ஞான்றே உலகமானது விசாரிக்கப்பட்டுப் பிராகபாவம், பிரத்தும்ஸாபாவம், அந்நியோந்நியாபாவம், அத்தியாந்தாபாவம் என்னும் நான்கபாவத்தையும் எய்தி அதாவது காலதேசவஸ்து பரிச்சேத ரகிதமாயிருக்கும் அறிவாகிய தன்

பால் விஸ்மரணேயாய் எழுந்த (மாயாசத்தியாகின்ற) அறியாமைக்கு முன்ஞான்று இவ்வுலகமானது இன்ருதலால் (முன்னின்மையென்னும்) பிராகபாவத்தையும், ஆராயுஞான்றுஷை அறியாமையிலேயே ஒடுங்கித் தன்சொரூபம் நாசமாக அங்ஙனம் நாசமான பின்ஞான்று இன்ருதலால் (நாசத்திற்குப் பின்னின்மையென்னும்) பிரத்தும்ஸாபாவத்தையும், கால, தேச, வஸ்துக்களால் ஒன்றுக்கொன்று பின்னப்பட்டிருத்தலால் (ஒன்றிலொன்றில்லையென்னும்) அந்நியோந்நியாபாவத்தையும், அகம் பொருளானது என்றுமிருந்தபடியே சொரூப சுபாவமாயிருக்க அதன்பால், சுசாதிக, விசாதிக, சுவகதபேதமாய்க் கற்பனையாகவேனும் எஞ்ஞான்றுமின்ருதலால் (என்றுமின்மையென்னும்) அத்தியந்தாபாவத்தையும்எய்திச் சதுர்ஞான்றுமின்றெனப்படும்அசத்தாக முடிந்தபடியால்அறிவானுகியதான் அச்சதுர்ஞான்றுமுள்ள சத்துப்பொருளாக ஏற்பட்டு விலட்சணமுற்றிருப்பதனுலேயே பந்தமாகிய உலகத்தைவிட்டிருக்கின்றதே. மீண்டும் அதனைவிடுத லென்பதென்னை?

அன்றியும், கயிற்றின்கண் தோன்றிய அரவுக்குக் கயிற்றினேடு * கற்பிததாதாத்மிய சம்பந்தமானதிருக்கினும் அஃது அரவு பொய்யென்று தெளிந்தஞான்றே பொய்யாயி

* நீக்கமின்றி யிருப்பதாகிய ஒற்றுமைச்சம்பந்தத்திற்குத் தாதாத்மிய சம்பந்தமென்றுபெயர். அது குணிக்கும், குணத்திற்கும்; வினைமுதலுக்கும்,வினைக்கும் இருப்பதுபோன்ற பிரிவுப்டாச்சம்பந்தமாம். அன்றியும் குணி, குணமுதலியவை வெவ்வேருயினும்

னமையால் கயிறு அச்சம்பந்தத்தினின்று விடுபட்டிருக்கு மாறு, அறிவாகிய தன்கண் கற்பிதமாகத்தோற்றும் உலகத்திற்குத்தன்னோடு கற்பிததாதாத்மிய சம்பந்தமிருந்துளதாயினும் அஃது உலகமானது நான்குகாலத்தும் பொய்யென்று நிச்சயிக்கப்பட்ட அஞ்ஞான்றே அறிவானைவிட்டகன்றுஆபாசமாய்ப் போயினமையால் மீண்டும்அறிவான் ஷை சம்பந்தத்தையாவது விட்டிருக்கவேண்டுமென்று கூறுதலே கூடாதாயின், நாமரூப உலகபந்தத்தைவிடுதலே வீடென்பதென்னை? ஆன்றோர்களெல்லாம் உலகபந்தத்தை விடுதலே வீடென்று கூறியிருக்கிறார்களேயெனின்,உலகபந்தம்யதார்த்தமாயிருக்க அதனைவிடுகின்றதா?கற்பனையாயிருக்க விடுகின்றதா?யதார்த்தமாயிருக்கின் அஃது அறிவாகிய தன்னையன்றி நான்குகாலத்தும் இன்றெனப்படாதிருக்கவேண்டும்? அன்றியும்,யதார்த்தமாயிருக்கின்றதொன்று இடைஞான்று அகன்றுபோகுமா? போகுமாயின்'உள்ளது போகாது'என்பதற்குவிருத்தமாகுமே! ஆகலின் என்றுமிருந்தபடியன்றோ

---

வேறுபடுத்தக் கூடாதிருத்தலினால் அவற்றுக்குள்ள ஷை தாதாத்மிய சம்பந்தம் கற்பிதத்தில்பேதமும், யதார்த்தத்தில் அபேதமுமாயிருப்பதென்றுஞ் சொல்லப்படும். இங்ஙனமே கயிற்றிற்கும் அதன்கண்தோன்றியஅரவுக்கும் ஒரு தாதாத்மிய சம்பந்தமிருக்கின்றது. அதனைக்கற்பித தாதாத்மியமென்று கூறுவானேனெனின், அரவே கற்பனையாகுஞான்று அதுகாரணமாகவிருக்கும் சம்பந்தமாத்திரங் கற்பனையாகாதிருக்குமா? கற்பனையாகலான் அதனைக் கற்பித தாதாத்மிய சம்பந்தமென்று கூறியதென்க.

விருக்கும்? இங்ஙனமே உலகபந்தம் யதார்த்தமாயின் அஃது என்று மிருந்தபடியேயன்றோவிருக்கும்? இடைஞான்று அறிவானைவிட்டு அகன்றுபோய்விடுமா? அகலாதன்றோ? ஆகலின் அதனை யதார்த்த மென்னற்க. இதனால் அவ்வுலக பந்தங் கற்பனையென்று விடலாமோவெனின், கற்பனையாகின்ற உலகபந்தத்தை விடுவானேன்? கற்பனையென்பது எஞ்ஞான்றுங் கற்பனையாகவன்றோ விருக்கும்? அதை இடைஞான்று விடுவதென்பதென்னை? இதனாலன்றோ,

ரிபுகீதை.

ஒருக்காலும் பிரபஞ்ச மொரு விடத்தும்
ஓரணுவு முண்மையதா யிலவே யில்லை. என்று

கூறியிருக்கின்றது? ஆகலின் எஞ்ஞான்றுங் கற்பனையாயிருக்குமுலகபந்தத்தை இடைஞான்று விடுதலென்பதுங்குற்றமென்க. அன்றியும் அஃது அசத்தன்றோ? அவ்வசத்தைப் பற்றுவதும் விடுவதுமுண்டா? உலகமானது அசத்தெனப் படுவது உண்மையாயின்,

ஞான வாசிட்டம்.

இல்ல தன்றுண் டல்வெறி வில்லா வுருவி லறிவுருவம்
அல்ல வான்ம வுருவுமல்ல வயலென் றுலக மெனநினைவாய்.

என்று கூறியிருப்பானேனெனின், வியவகாரிகதிசை, பாரமார்த்திகதிசை யென்னும் இவ்விரண்டில் திருஷ்டி சிருஷ்டி வாதமாகச் சொல்லும் வியவகாரிக திசையில் உலகமானது மலடிமகனைப்போன்று அசத்தாயில்லாது(விபரீத) அநுபவ

த்திற்குப் பயன்படுகின்றதனால் இல்லதன்று எனவும், விசாரிக்குஞான்று மித்தையாக முடிகின்றதனால் உள்ளதன்று எனவும், சடமாயும், விகாரமாயு மிருக்கின்றதனால் அறிவன்று எனவும், ஆன்மா, அல்லது சேதனத்தின் சொரூபமாகிய சத்து, சித்து, ஆநந்தம் அதாவது இருத்தல், விளங்கல், சுகவடிவம் என்னும் இம்மூன்றையும் பொருந்திக்கற்பனையாக இருந்து விளங்குகின்றதனால் அறியாமையன்று எனவும், அறிவுக்குவேறாய் அநர்த, சட, துக்கவடிவமாய் நிகழ்கின்றதனால் ஆன்மாவன்று எனவும், அகண்டமாகிய அறிவுக்கு வேறிடத்தில் இல்லாததினால் அயலன்றுஎனவும் சொல்லுவதற் கியைந்திருக்கின்றதென்று கூறுகின்றது. அதாவது உலகமானது சத சத் விலட்சண அநிர்வசனீயமாயிருக்கின்றதென்பது கருத்தென்க.

ஆயினும், அஜாதவாதமாகச்சொல்லும் பாரமார்த்திக திசையில் அறிவொன்றே இருப்புப் பொருளாதலால் உலகமெனச் சொல்லப்படுவது சொன்மாத்திரமாகவேனுமின்றெனக்கூறுவதென்க. இங்ஙன மிருப்பின் ஆன்றோர்கள் உலகபந்தங்களை விடவேண்டுமென்று கூறியிருக்கின்றார்களே: அவர்களங்ஙனங் கூறியிருப்பா னேனென்னின், கற்பனையானது பொருளல்லாதது பொருளாகத் தோன்றுவதாயினும், அது காரணங்கண்ட விடத்துத் தோன்றாதென்றும், காரணங் கண்டவிடத்துந் தோன்றுவதென்றும்,காரணங்கண்டவிடத்துந்தோன்றி விவகாரத்திற்கு பயன்படுவ தென்றும்

மூன்றுவகையா யிருக்கின்றது. அவற்றுள் 1-வது கற்பனை கயிற்றரவுபோன்றது. அது கயிறாகிய காரணத்தைக்கண்ட விடத்துக்காரியமாகின்றஅரவானதுதோன்றாதிருப்பதுபோன்றது. 2-வது கற்பனை கானல்நீர்போன்றது. அது கானலாகிய காரணத்தைக் கண்டவிடத்துங் காரியமாகின்றநீரானது தோன்றுவதுபோன்றது. 3வதுகற்பனை மட்கடம்போன்றது. அது மண்ணாகிய காரணத்தைக் கண்டவிடத்துங் காரியமாகின்ற கடமானதுதோன்றி வியவகாரத்திற்குப் பயன்படுவதுபோன்றது. உலகமாகிய கற்பனை ஷை மூன்றுவகையாயிருக்கின்றது. உலகம் ஒன்றாயிருக்க ஷை மூன்றுவகையாகவுமிருப்ப தெங்ஙனமெனின், கயிற்றின்கண் தோன்றிய கற்பனையொன்றே ஒருவருக்குப் பாம்பாகவும், மற்றொருவருக்கு (மலர்) மாலையாகவும், இன்னொருவருக்கு மரவேர்த்துண்டமாகவும் இருக்குமாறு சேதனனாகிய அகம்பொருளின்கண் ஆரோபமாகத்தோன்றிய உலகமே ஆத்மாநாத்ம விவேகமுள்ளவர்களுள் உத்தமர்க்குக் கயிற்றரவுபோலும், மத்திமர்க்குக் கானல்நீர்போலவும், அதமர்க்கு மட்கடம்போலவும் இருக்கின்றதென்க. அன்றியும், கயிற்றரவு முதலியவைகள் உலகப்பொருள்களாதலால் உலகமே அங்ஙனந்தோன்றுகின்றதென்னினுந் தோடமென்னை?

நிற்க, உலகமானது இங்ஙனங் கற்பனையாயிருப்பினும் அது சதுர்ஞான்றுமில்லாத அசத்தேயென்றுதெளிவதற்கும், பின்ஞான்று தனது யதார்த்தபாவமாய் (அறிவேவடி

வாய்) நிலைத்திருக்கவும் உணர்த்துவான்வேண்டி அசத்தாகிய உலகபந்தம் நமக்கின்றெனவும், உள்ளதுபோல் கற்பனையாகக்காணப்படினும் விசாரித்துத்தெளியவேண்டுமெனவும், அங்ஙனந்தெளிவதே ஆரோபமாகப்பற்றிய பந்தத்தை விடுதலெனவுங் கூறவந்ததேயன்றி வேறன்றென்க. அன்றியும் இதனைப்பின்னும் வற்புறுத்தற் காகவே,

திருக்குறள்.

சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு. என்றுங் கூறியிருக்கின்றதென்க.

எங்ஙனமெனின், முன்னூன்று உலகமென்கிற சொல்லுக்கியைந்தபொருள் யாதெனவிசாரிக்க, அது பிருதிவு முதலாகிய ஐம்பூதப்பொருள்களாகி அவ்வைம்பூதத்தையன்றியின்றெனமுடிந்தது. அவ்வைம்பூதங்களோவெனின், தனித்தனிப்பலவணுக்களின் சேர்க்கையாய் தன்மாத்திரைகளாகிய கந்தம், இரசம், உருவம், பரிசம், சத்தம்என்னும் இவைகளைத்தவிர இன்றெனமுடிந்தன. இங்ஙனமிருக்க ஆரோபதிசையின்கண் ஒவ்வொரு உயிரும் கற்பனையாகிய உலகத்தைப்பந்திப்பது டிகந்தமுதலாகிய ஐந்துவிடயங்களை யநுபவித்தற் காகவே யாம். கற்பனையைப் பற்றிய அவ்வநுபவமும் ஓர்ஞான்று சுகமாயும், மற்றோர்ஞான்று துக்கமாயும் நிலையின்றிப்போகின்றது. நிலையின்றி மாறுதலாகியஇத்தர்மம் சடமாகின்ற அவ்விடயங்களின் பாலி

ன்றி அறிவான் பாலிருக்கின்றது. அதாவது அறிவான் விடயங்களைச் சுகமாகக்கருதிமருவாவுழி அவைகள் சுகமாகத்தோற்று. பின்னொன்று துக்கமாகவும் மாறு. மாறுதலாகின்ற இப்புடைபெயர்ச்சி அறியாமை வசத்திலிருக்கின்றது. அறியாமையும் அறிவைத்தவிர வின்று. இங்ஙனம் அறியாமைகாரணமாகக்கந்தமுதலியபஞ்சவிடயங்களாயிருக்கும் உலகமானது அறிவினிடத்திலேயே கற்பனையாயிருக்கின்றமையால், 'தெரிவான்கட்டேயுலகு' என்று ஷ வாக்கியங்கூறுகின்றது. அன்றியும் கந்தமுதலிய ஐந்தும் ஐந்து பூதங்களின் தர்மங்களாக யிருக்கின்றனவாகலின் ஐம்பூதங்களை ஆராயுஞான்று அவை கற்பனையாக முடிவதால்அக்கற்பனையைத்தழுவிய கந்தமுதலிய தர்மங்களுங் கற்பனையென்றும், இவற்றை அறிவதற்கியைந்த கிராணம் (நாசி) முதலிய இந்திரியங்கள் ஷ பூதங்களின் காரியங்களாயிருக்கின்றமையால் அவைகளுங் கற்பனையேயென்றும், இங்ஙனம் கற்பனாமயமாயிருக்கும் பூதம் விடயம் இந்திரியம் என்னும் இவற்றினாலாகிய விகாரமே உலகமென்றும் விசாரிக்கும் அறிவாளர்கள் உலகத்தின் இருப்பை உணர்ந்தவர்களாதலால், உலகம் அவ்வறிவாளர்களினிடத்தே இருக்கின்றதெனவும் பொருளாமெனக.

இதனாலேயே உலகமானது அறிவின்கண் கற்பனையாயிருக்க அதனைப்பற்றுதல் அறியாமையென்றும், நாமாகிய அறிவுசொரூபமாகவே நிலைத்திருக்கவேண்டு மென்றும்

ஆன்றோர் கூறியிருக்கின்றனர். இங்ஙனம் விசாரித்தல், தெளிதல் முதலாகிய விவேகத்தினால் முன்னொன்று அதாவது அறமென்னும் புருஷார்த்தத்திலேயே உலகபந்தத்தை விட்டிருக்க, ஆன்றோர்கள் கூறியிருக்கின்றனரெனத் தாற்பரியமறியாமல் மீண்டுமீண்டும் விசாரித்துத் தெளிந்து உலகபந்தத்தை விடுதலென்பது அரைத்தமாவையே மீண்டும் அரைப்பதுபோலிருக்கின்றதே! ஆகலின் இங்குகூறியது ஷை நாமரூப வுலகபந்தத்தை விடுதலென்பதன்றென்க.

இதனால் எதனைவிடுதல்வீடென்று இங்குகூறியதெனின், ஷை அறமுதலிய மூன்றும் தானேதானாகிய போதத்தையன்றியின்மையாலவை ஓர் மொழியார்த்தமென்பதற்கு இழுக்கின்று. தீபமென்பது செம்மை ஒளி வெப்பமென்னும் முத்தர்மத்தையுடையதா யிருப்பினும் அம்முத்தர்மமும் தனித்தனியாயிராது ஏகத்துவமுற்றிருக்க விளங்குவது போன்று தானாகிய அகம்பொருளும் ஷை அறமுதலிய முத்தர்மத்தை யுடையதா யிருப்பினும் அம்முத்தர்மமும் தனித்தனியாயிராது ஏகத்துவமாயிருக்க விளங்குகின்றது. அங்ஙனம் விளங்கினும் ஏகத்துவமாக நாடாது (ஷை அறமுதலியவை பெயரால் வேற்றுமையுற்றிருக்கின்றமையினால் சொரூபத்தினாலும் வேற்றுமையுற்றிருக்குமென்று) முத்தர்மமாகநாடிக்கொண்டிருக்கும் நாட்டமானது நித்திரையில் கையிலுள்ள பொருளானது நழுவிவிடுதல்போல ஏகத்துவமாகவிளங்கும் தானேதானாகிய நிலையில் புத்திபூர்வகமின்றி

நழுவி அந்நிலையதாய் ஆகுமாறுவிடுதலே வீடென்று கூறிய தென்க. அதுவே சதுர்வித அங்கமாயுள்ள வீடென்னும் புருஷார்த்தமாமென்க. இவ்வீடென்பதும் தானாகிய அகம் பொருளாகவே யிருத்தலால் அறமுதலாகிய நான்கும் ஒரு மொழியார்த்தமேயென்க. என்னை?

திருக்குதிரிசியவிவேகம்.

அறம்பொரு ளின்பம்வீ டாயவோர் நான்கின்
திறந்தெரிந்திங் கொன்றாக்கிச் சிந்தைக்—கறங்கென்ன
ஆடாது நிற்றற் கருநெறியெல் லாமுரையிற்
கோடா தளிப்போன் குரு. என்று

கூறியிருக்கின்றதனால் யூகித்துணர்க.

இது வீட்டின் சதுரங்க விவரணம்.

வீடென்பது சதுர்வித அங்கத்தை யுடையதாயிருக்கின்றதெனக்கூறியதனால் அச்சதுர்வித அங்கங்களும்யாவை யெனின், அவை கிருதகிருத்தியம், துக்காபாவம், சர்வகாமாப்திகம், பிராப்திபிராப்பியம் என்பனவாம். அவற்றுள், கிருதகிருத்தியமென்பது யாதெனின், சிரவண மனனாதியால் ஆத்மாவாகிய தனது நிச்சயமுணர்ந்து ஆமுண்டெனவிருக்கும் தத்துவக் கூட்டங்களையெல்லாம் அன்றெனவும், இன்றெனவும் நியதி களைந்துகளைந்து பின்னான்று அன்றெனற்கும், இன்றெனற்கும் இயையாது ஆமெனற்கும், உண்டெனற்குமே இயைந்துவிளங்கும் அறிவாகிய தன்னைச் சொரூபம், சகசம் என்னும் இருவகைச்சமாதிவாயிலாக முன்னான்றே

உழைத்து உழைத்துத் தெளிந்திருத்தலாம். அதாவது படித்தல், கேட்டல்,சிந்தித்தல்,தெளிதல், நிட்டைகூடல் ஆகிய கிருத்தியங்கள்யாவும் அறிவாகிய தன்னையறிந்து தெளியுவாகலின் அவ்வெல்லாக்கிருத்தியமும்முன்னரான்றேசெய்துவிட்டதனுல் மேல்செய்யவேண்டியகிருத்தியம் ஒன்றுமின்றி அறிவேவடிவாய் நிலைத்திருத்தலேயா மென்க. ஆகலின்,

கைவல்லியம்.

பாடன் மிகுதொழி லாற்பய னுண்டோ பரிபூ ரணமானல். [எனவும்,

ஷை

வெளியுரு வாயறி வாய்நிறை வாயினர் வேண்டுவ தொன்றுண்டோ. எனவும்,

ஷை

துரிய பரம்பொரு ளானவர் வேறொரு தொழில்செய்வதுமுண்டோ. எனவும்,

பிரதியட்சானுபூதி விளக்கம்.

உழைப்பின் வகையறி யாரய லென்ப ருலகதனை
உழைப்பு தனதறி யாமை கெடுத்திடற் குற்றசெயல்
உழைப்பெது வென்னி லுலகனு வாக்கி யுலைவதறல்
உழைப்பெது காறென்னிற் றுறைகுமட் டென் றுணருமினே.

எனவும் கூறியிருக்கின்றன வென்க.

அன்றியும், தன்னை அறிவுவடிவாகத் தெளிந்தஞான்று அவ்வறிவு வியாபகவிளக்கமென்னும் அகண்டபிரகாசமாயிருத்தலினுல் அவ்வகண்டத்தின்கண் எங்ஙனங்கிருத்தியங்

கள் நிகழும்? கண்டமாயிருப்பதனாலன்றோ கிருத்தியங்கள் நிகழும்? ஏனெனின், கிருத்தியமாவது கர்மம், அல்லதுகிரியையெனப்படுமாதலால் அக்கிரியையும் அசைவுவடிவினதாயிருக்கும். அங்ஙனமாகிய அசைதற்றொழிலை வரம்புபற்றிய வடிவமுடையதாயிருக்கும் கண்டப்பொருள் இயற்றுமேயன்றிவரம்புபற்றிய வடிவமல்லாததாயிருக்கும் அகண்டப்பொருள் இயற்றாதென்க. [வரம்பென்பது எல்லை அல்லது அளவென்க.] திருட்டாந்தத்தில் பிருதிவி, அப்பு, தேயு, வாயுவாகிய சதுர்ப்பூதங்களும் வரம்புபற்றியவடிவமுடைய கண்டப்பொருள்களா யிருத்தலின் அவைகள் அசைதலாகிய பற்பலகிருத்தியங்களை இயற்றுகின்றன. ஆகாயமோ அங்ஙனம் வரம்புபற்றியவடிவமில்லாத அகண்டமாயிருத்தலின் அஃது எக்கிருத்தியத்தையாவது இயற்றுகின்றதா? இன்றன்றோ? (அன்றியும் கிரியையியற்றுஞான்று அசையவேண்டுமாதலால் அவ்வசைவும் தானில்லாவிடத்திலன்றோநிகழும்?) அங்ஙனமே வியாபகவிளக்க அகம்பொருளானது நீக்கமின்றிநிறைந்த அகண்டப்பொருளாகலின் அஃது அசைவுவடிவினதாகிய கிரியையற்று நிஷ்கிரியமாய் இருக்கின்றதென்க. இதனாலேயே அது போக்குவரவற்றது, நிஷ்கிரியம், அசலம், சேட்டையில்லது முதலியனவாக வழங்குகின்றதென்க. இதற்கு உதாரணம்,

தாயுமானவர்.

கூடுதலு டன்பிரித லற்றுநிர்த் தொந்தமாய்க்
குவிதலுடன் விரித லற்றுக்

குணமற்று வரவினெடு பேரிக்கற்ற நிலையான
குறியற்று மலமு மற்று. எனவும்,

**கைவல்லியம்.**

அசலநிரஞ் சனமமிர்த மப்பிரமே யம்விமலம்
வசனு தீதம். எனவும்,

**பகவற்கீதை.**

உரைசெயற் கரிதாய் நெஞ்சி னுணர்விடப் படாதே யெங்கும், புரைவறக் கலந்து போக்கு வரவின்றிப் பொலிந்த தொன்றை. எனவும்,

மற்றும் வருவன வற்ருற் காண்க.

இரண்டாவது-துக்காபாவமாவது யாதெனின், சகலாவத்தைகளாகிய சாக்கிர சொப்பனத்திலும், கேவலாவத்தையாகிய சுழுத்தியிலும் வாய்க்கற்பாலனவாகிய அல்லல்கள் யாவுமின்றி (அல்லல்களின் அபாவத்தோடு) இருத்தலாம். அதாவது ஆரோபமாகிய அஞ்ஞானதிசைக்கண் தூலமுதலிய உபாதிகளின் காரணமாக ஒவ்வோர் விடயத்தையும் சுகமென்று கருதிப் பற்றுவதனுல் அவை பின்ஞான்று துக்கமாய் முடிகின்றன. ஆதலின் அத்துக்கத்தை யநுபவிப்பது யாதெனப்படும்? உபாதியெனின், அது சடமாதலால் அநுபவித்தறியாது. ஆன்மாவெனின், அஃது அதிஷ்டானமாகின்ற ஞானதிசைக்கண் அகண்டமாயும், சம்பந்தமின்றி யுணருஞ் சாட்சிப்பொருளாயு மிருத்தலினுல் யாதொரு துக்கத்தையும் அநுபவித்தறியாது. பின்ன

ரெது அநுபவிக்கின்றபேதனின், சிதாபாசனாகிய சீவன் உபாதி முதலியவைகளை மருவுவதின் காரணமாகத் துக்கம் உண்டாகின்றது. ஆயினும் உபாதி முதலியவைகளும் சீவ னும் அகம்பொருளாகிய அறிவினிடத்தில் கற்பனையாயிரு த்தலால் அக்கற்பனையை யநுசரித்துண்டாகும் துக்கமுங் கற்பனையாய் அவற்றிற்கெல்லாஞ் சாட்சியாகிய அறிவா னது விலட்சணமுற்றிருப்பதனால் சர்வ துக்க நிவிர்த்தியாகி அதாவது துக்காபாவமாய் இருக்கின்றதென்க. ஆகலின்,

கைவல்லியம்.

இங்குமப்படிச் சச்சிதானந்தத்தி லிடர்சடம்பொய்மூன்றுந்
தங்கு மாயையின் கற்பித மன்றியே சகசவாஸ் தவமன்றே.

எனவும்,

ஞான வாசிட்டம்.

அரிந்த பொழுது முடற்றுன்ப மறியே மொன்றி லன் பாகிப், புரிந்து பற்று மனத்தினுடல் பொன்ற வரினுந் துயர் தோன்று. எனவும் மற்றும் வருவனவற்றுற் காண்க.

மூன்றுவது - சர்வ காமாப்திக மென்பது யாதெனின், அகம்பொருளாகிய தன்னையன்றிப் பிபீலிகமுதல் பிரமன் வரையுமுள்ள சர்வவுயிர்களு மின்றுதலால் விடயானந்தத் தையநுபவிப்பதிற் சிறந்த மனுடன் முதற்கொண்டு மனுட கந்தர்வன், தேவகந்தர்வனுதி பிரமன் வரையிலும் சொல் லப்பட்ட பதினொரு வகுப்பாரால் ஒருவரைவிட ஒருவர் மேன்மேலாக அநுபவிக்கப்படும்ஆனந்தங்கள்யாவும்தனது

ஆனந்தமாயிருக்கின்றன. அன்றியும் போகத்தினின்றெழு கின்ற விடயானந்தம், நித்திரையிலெழுகின்றபரமானந்தம், மயக்கமாகிய உறக்கத்தினின் றெழுகின்ற வாசனானந்தம், எங்கும் தனது பிரியவடிவாகக்காணவெழுகின்ற ஆத்மானந்தம், சமாதிநெறித்தாக வெழுகின்ற முக்கியானந்தம், உதாசீனங்காரணமாக வெழுகின்ற நிசானந்தம், தான்மாத்திர மாயிருப்பதைத் தெளிவதாலெழுகின்ற அத்துவிதானந்தம், மகாவாக்கியங் காரணமாகவெழுகின்ற ஞானானந்தம் ஆகிய இவ்வெண்வகை யானந்தங்களும் அறிவாகியதன்கண் உண்டாகுந் தனதுலேசங்களா யிருக்கின்றமையால் ஷை சர்வானந்தங்களாயிருக்கும் தனது அநுபவவிலாசமே சர்வகாமாப்திக மெனப்படுவதாமென்க. ஆகலின்,

**கைவல்லியம்.**

அலகிலா னந்தவடி வாகுமுன் சொரூபத்தை
யாராய்ந்து பார்மைந் தனே. எனவும்,
பினவா னந்தங்க ளுரையாம் பிரளய வெள்ளக் கடல்
பிர மானந்தம். எனவும்,

**குமாரதேவர்.**

எந்தப் பொருள்களினின் றெய்திடு மின்பனைத்தும்
அந்தப் பிரமத்தி னானந்த லேசமதே. எனவும்,

**இதுவுமது.**

தன்னின்பே யின்பாய்த் தானிருக்கு மெப்போதும்
தன்னின்பி னாலே சகமின்பாய்த் தோன்றிடுமே. எனவும்,

அவிரோத வுந்தியார்.

பூரண மும்மாய பொருவி லானந்தக்கு
நேரியா தின்பம்வே றுந்தீபற
நீங்காச் சுகமதே யுந்தீபற. எனவும்
கூறியிருக்கின்றனவென்க.

நான்காவது. பிராப்திபிராப்பியமாவது யாதெனின், எவ்வகைக்காமியநிட்காமியமுயற்சியினாலும், முயற்சி யின்மையினாலும் (வேண்டியும், வேண்டாமலும்) வந்து அடையப்படு பொருள்கள்யாவும்நிலையாது அகன்றகன்றுபோகின்றனவாதலால் அவை அடையப்படு பொருள்களன்று. ஆயினும் அவற்றையும், அடைவாரையும் விசாரித்துத் தெளிந்த முதிர்ச்சியாகிய சொரூப சமாதிநிலையில் தனதுசொரூபம் விளங்குகின்றது. அச்சொரூபவிளக்கமாகிய தனது அடைவே என்றுமுள்ள பாரமார்த்திக சத்தாயிருக்கின்றதனால் அதுவே பலப்பிராப்தியாகின்றது. அது சந்தேகவிபரீதமற சுருதியுக்திக்கொத்ததாய் அநுபவிக்கப்படுகின்றதாகலின் அதற்குமேற்பட்டபலப்பிராப்தி வேறொன்றுமின்று. அன்றியும் எதனை யாவரும் அடையவேண்டுமோ, எதனை அடைந்ததனால் மாறாத்திருப்தியுற்று மேல் அவாவெழுச்சிக்கிடமின்றியிருக்குமோ, அங்ஙனமாகிய வத்துவை என்ஞான்றுமடைந்திருப்பதே பிராப்திபிராப்பியமென்று சொல்லப்படும். அது தானேதானாகிய அறிவைத்தவிர இன்றாதலால் அவ்வறிவின் விளக்கமாகிய அடைவேயாமென்க. ஆயின்

அது சமாதிநெறித்தாக இடைஞான்றுபெறப்படுவதன்றோ? இடைஞான்று உண்டாவது காரியமாகலின், காரியம் அழிவையெய்துமே! அஃது எஞ்ஞான்று மிருப்பதெனப்படுமா? அங்ஙனமே அறிவினது அடைவும் இடைஞான்று வாய்ப்பதாகலின் காரியமெனப்படுமே! அஃது எஞ்ஞான்றுமிருப்பதெனப்படுமா? இங்ஙனயாயதைச் சமாதிகூடி யடைவானேனென்னின், அஃது இடைஞான்றுவாய்ப்பதாவது, இதற்குமுன் எஞ்ஞான்றுமில்லாதிருந்துவாய்ப்பதா? இருந்துவாய்ப்பதா? இல்லாததுவாய்ப்பதென்பது இல்லாதமலடிபுத்திரன் ஆகாயமலர் இவைகள்வாய்ப்பது போன்று 'இல்லதுவாராது'என்பதற்கு விருத்தமாய் முடிகின்றதே! ஆகலின் இல்லாதது நூதனமாக அடையப்படுவ தன்றென்க. பின்னரெங்ஙனமெனின்,

"சொல்லிய மகனே யெங்குஞ் சூழ்வெளி யிருக்க மண்ணைக் கெல்லியபின்னைத் தோன்றுங் கிணற்றினாகாயம்போல" என்று கைவல்லியத் திருச்செய்யுள் கூறுகின்றபடி, நிலத்தில் குழிதோண்டிக்கொண்டுபோகுஞான்று ஆங்குக்காணப்படும் வெளியானது இடைஞான்று நூதனமாக வந்து காணப்படுவதுதானே? அஃது எஞ்ஞான்றுமிருந்தபடி எங்குமிருக்கின்றதே! எங்குமிருக்கும்வெளியானது முயற்சிகாரணமாகத் தோண்டிக்கொண்டுபோகுங் குழியினிடத்துங் காணப்படுகின்றது. இதனால் அது நூதனமாக இடைஞான்று தோன்றுவதாகக் கொள்ளலாமா? இங்ஙனமே தானாகிய

அறிவும் என்ஞான்றுமிருந்தபடியேயிருக்கச் சமாதியுழைப் பாகிய முயற்சிகாரணமாக வெளிப்படுகின்றது இதனால் அது நூதனமாக வெளிப்பட்டு அடைவதாகக் கொள்ளப்படாதென்க. அன்றியும் அவ்வறிவு தானேயாகலின் தானில்லாத காலமிருக்கின்றதா? இன்றாதலால் தானே என்ஞான்று முள்ளவத்துவென்க. என்ஞான்றுமுள்ள தன்னை இடைஞான்று சமாதிகூடி அறிவே வடிவாக அடைவதென்பதென்னை? சமாதிகூடுவதுதானெற்றுக்கெனின், அறிவானது என்ஞான்றுமுள்ள சத்துப்பொருளாயினும் அது மறதியாகின்ற அநாதியறியாமையினால் 'கண்டபூடணநியாயம்' போல் விளங்காதிருக்கின்றது. ஆகலின் சற்குரு வாயிலாய் விசாரித்துச் சமாதிகூடித்தெளியுஞான்று விளங்குகின்றமையினால் அதன்பொருட்டுச் சற்குருவினால்விசாரித்தபின் ஞான்று சமாதி கூடித் தெளியவேண்டுமென்க.

கண்டபூடணநியாயமாவது யாதெனின், ஒருபெண்பாலானவள் தன்கழுத்திலணியப்பட்டிருக்கும் மாங்கல்யமாகிய ஆபரணமானது கழுத்தின்பின்புறத்தில் இருப்பதையறியாது தான்எங்கேயோமறந்துவிட்டுவிட்டதாக நினைத்து அழுதுபுரண்டு வருத்தமுற்றிருக்கின்றகோலத்தை மற்றோர் பெண்பாலானவள்கண்டு அவள் வருந்துவதின் காரணத்தையறிந்து அவ்வாபரணமானது வருந்துகின்ற ஷெ பெண்பாலின் கழுத்திலேயே யிருப்பதாகச்சொல்லுகிறாள். அதனை ஷெ பெண்பாலும் தன்கழுத்திலே யிருக்கின்றதாவெனப்

பரிசித்து அநுபவத்தினல் கண்டபின்ஞான்று தனது துக்கத்தினின்று நீங்கி முன்ஞான்றே அடைந்துள்ள ஆபரணத்தை மீண்டும் அடைந்ததாகவுன்னி மகிழ் வடைகின்ருள். ஆயினும் அவ்வாபரணம் இல்லாமற் போனதின்று; மீண்டும் அடையப்பட்டது மன்று. இங்ஙனமே எஞ்ஞான்றுமே இருக்கின்ற வியாபகவிளக்கமாகிய அகம் பொருளென்னுந்தன்னை அநாதியறியாமையினல் விளங்கா திருக்கின்றதாகமருண்டு நாமரூபத்தாக்குதல்களாகிய துக்கத்தை யடைந்திருப்பதைக்கண்ட ஞானசிரியர் தனதுசொரூபத்தை யுணர்த்த விசாரித்துப் பின்ஞான்று சமாதிகூடிச் சுவாநுபவத்தினல் தெளிகின்றதாயிருக்கின்றதனல் அதனிமித்தம் நாம் ஆவசியஞ் சமாதிகூடவேண்டுமென்க. ஆயினும் அவ்விளக்கம் இல்லாதுபோனதும், மீண்டும் அடையப்பட்டதுமாகுமா? அன்றியும் ஆற்றிலிறங்கிக் கரையேறிய பத்துபுருடரில் பத்தாமவனைக் காணுததாகக்கருதி வருந்தி வேறோர் புருடனல் நானே பத்தாமவனென்று உணர்த்தப்பட அறிந்து இழக்கப்பட்ட பத்தாமவனை மீண்டும் அடைந்ததாகச் சந்தோடமுற்ற 'தசபுமான் நியாய' த்தின்படியும், உண்மையில் பத்தாமவன் இழக்கப்பட்டவனன்றாயும், மீண்டும் அடையப்பட்டவனன்றாயு மிருப்பினும், முன்ஞான்று விபரீதமாய் இழக்கப்பட்டவனக எண்ணினமையால் அவ்விபரீதமற்றஞான்று மீண்டும் அடையப்பட்டவனக இருக்கின்றது. அங்ஙனமே வியாபக விளக்கமாகியதனதுசொரூபத்தை விபரீதமாய் அறியாமையினல் மறந்திருப்பதாகக்

கொண்டிருப்பதால் அது நீங்குமாறு அதாவது அத்தியா ரோபமாயிருக்கும் சொரூபாவரணம் நீங்குமாறு சமாதிகூடித்தெளிய வேண்டியதா யிருக்கின்றதென்க. தெளியினும் அறிவினதுவிளக்கமானது நூதனமாகவெளிப்படுவதன்றே? ஆகலின்;

நீசானந்த வுந்தியார்.

தானா யிருந்த தலைமைப் பரம்பொருள்
நானா யிருந்தேனென் றுந்தீபற
நன்றாகப் பார்த்திடி லுந்தீபற. எனவும்,

ரிபுகீதை.

சோகமெலா மறநீக்கி யென்னை யாண்ட
சுககுருவே நீயருளா முபதே சத்தாற்
பாகமுறத் தோற்றியிடுந் தோற்ற மெல்லாம்
பரப்பிரம வடிவான நானே யன்றி
ஏகபரி பூரணமா மென்னை யல்லால்
எப்போது மெள்ளளவு மெவையு மில்லை
ஆகையினா லன்னியமா முபசா ரத்தை
யன்புடன்யான் செய்திடவோ ரிடமு மில்லை.

எனவுங் கூறியிருக்கின்றன வென்க.

இங்ஙனமாகிய தனது சொரூபவிளக்கத்தைச் சமாதி நெறித்தாகத் தேர்ந்து அடைந்திருப்பதே பிராப்திபிராப்பிய மென்க. இதனாலேயே,

சோநுபசாரம்.

என்னையே யல்லாமல் யான்பெற்ற தேதுமிலை
என்னையான் பெற்றிருந்த தெப்போதும் - என்னையன்றிப்
பந்தமுத்தி யில்லையால் பார்க்கிலிவை யாராயுஞ்
சிந்தனையு மில்லாத தே. என்று

கூறியிருக்கின்றதென்க. மேற்கூறிய கிருதகிருத்தியம், துக்காபாவம், சர்வகாமாப்திகம், பிராப்திபிராப்பியம் ஆகிய நான்கும் தானேதாளுகிய வீடென்னும் புருஷார்த்தத்திற்கு அங்கமாயிருத்தலினால் இவையே முடிந்த மோட்சாங்கமெனவும் படுவதாமென்க. இம்முடிவு தானே தானென்பதற்கு உதாரணம்,

உபநிடதர்.

நானிவன்று னவனென்றே நவின்றறியா தேயுழன்ற
நாயி னேற்குத்
தானமரு நிலையிதுவே தாந்தவுப சாந்தமிது
தானே தாளும்
மோனமொழி யிதுவெனநான் மறையினுப நிடதமொழி
முடிவு காட்டும்
ஞானகுரு தேசிகனை நாவகத்தும் பாவகத்தும்
நவிற்று வாமே. எனவும்,

தாயுமானவர்.

தானை தன்மயமே யல்லா லொன்றைத்
தலையெடுக்க வொட்டாது தலைப்பட் டாங்கே

போனாலுங் கற்பூர தீபம் போலப்
 போயொளிப்ப தல்லாது புலம்வே றின்றாம்
ஞானகா ரத்தினொடு ஞேய மற்ற
 ஞாதுருவு நழுவாமல் நழுவி நிற்கும்
ஆனாலு மிதன்பெருமை யெவர்க்கார் சொல்வார்
 அதுவானா லதுவாவ ரதுவே சொல்லும். எனவும்,

இதுவுமது.

எக்கால முந்தனக் கென்னவொரு செயலிலா
 ஏழைநீ யென்றி ருந்திட்
டெனதாவி யுடல்பொருள்கண் மௌனியாய் வந்துகை
 யேற்றநம தென்ற வன்றே
பொய்க்கால தேசமும் பொய்ப்பொருளில் வாஞ்சை
 பொய்யுடலை மெய்யென் னலும் [யும்
பொய்யுறவு பற்றலும் பொய்யாகு நானென்னல்
 பொய்யினும் பொய்யாகை யான்
மைக்கா லிருட்டனைய விருளில்லை யிருவினைகள்
 வந்தேற வழியு மில்லை
மனமில்லை யம்மனத் தினமில்லை வேறுமொரு
 வரவில்லை போக்கு மில்லை
அக்கால மிக்கால மென்பதிலை யெல்லாம்
 அதீதமய மான தன்றே
அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி
 ஆனந்த மான பரமே. எனவும்,

அவிரோத வுந்தியார்.

நானற்ற போதத்தே நானுன முத்தியை
நானெனங்ஙனஞ்சொல்வ துந்தீபற
நான்மறைக் கெட்டாதென் றுந்தீபற. எனவும்,

ரிபுகீதை.

தன்னிடையே தானாக விளங்கா நின்ற
தற்பதமாம் பரப்பிரமந் தானே யென்று
பின்னமிலா வறிவுற்றுப் பிரமா காரம்
பெற்றவனே பிணிப்பற்ற சீவன் முத்தன்
அன்னியமே யில்லாத வான்மா வின்கண்
அமர்ந்தாங்கே ரமிப்போனா யகண்ட மான
தன்னிடையே தானாகத் தனித்து நின்று
தன்னின்பம் புசிப்பவனே சீவன் முத்தன்.

எனவுங் கூறியவாற்றாற் காண்க.

அறிவானது அறமென்னும் புருஷார்த்த சொரூபமாக விளங்கியிருந்தும் அவ்விளக்கங் கிஞ்சித்துந் தளர்வுறுவண்ணம் பாதுகாக்கின் அதுவே பொருளென்னும் புருஷார்த்த சொரூபமாக விளங்குகின்றதெனமுன்னொன்றுகூறியதனால், அவ்வறமென்னும் புருஷார்த்தசொரூபந் தளர்வுறுமாறெங்ஙனமெனின், விர்த்தியானது மனம், புத்தி, சித்தம், அகங்காரமென்னும் நான்கு வகுப்பாகப்பிரிந்து விடயங்களைப்பற்றி நின்றுஅந்தக்கரணவிர்த்தியாகஆரோபப்பட்டிருந்ததைஅஷ அஞ்ஞானசாதனத்தினின்றுநீக்கி ஞானசாதனமாய் அகண்

டாகாரவிர்த்தியாக அகமுகப்படுத்தியதினால் அதிஷ்டான வசப்பட்ட அவ்விர்த்தியானது ஜன்மாந்தரங்களிற் பழகிய வாசனையினாலும், இஞ்ஞான்று நிகழ்கின்ற பிறவியில் ஞான சாதனமாகச் செய்யாதிருக்குங்காறும் பழகியபழக்கத்தாலும் மீண்டும் அப்பழக்கவழியே எழுந்தெழுந்து விடயங்களைப் பற்றிச்செல்லும். இதனாலேயே,

ஒழிவிலொடுக்கம்.

பழக்கங் கொடியதுபார் பாறையினுங் கோழி
கிழிக்கும் பொலியைக் கிளறும்—விழித்துங்
குருடர்க் கொளிபகையாய்க் கூசுங்கோல் போடார்
அருளைப் பிழிக்குமான் மா.

என்று கூறியிருக்கின்றது. ஆகலின் அந்தக்கரண விர்த்தியென்னும் ஷை மனோவிர்த்தியானது முன்ஞான்று பழகிய தனது பழக்கவழியே விஷயங்களின்மேல் பிரவேசமுறுவதனால் இஞ்ஞான்றிருக்கும் அகண்டாகார விர்த்திக்குத் தளர்ச்சிவருகின்றது. இதனால் அறமென்னும் புருஷார்த்தசொரூபம் விளங்காததாகக் காணப்படுகின்றமையினால் அங்ஙனங் கூறவந்ததேயன்றிச் சதோதயமாக விளங்கும் அறமென்னும் அதிஷ்டான புருஷார்த்தத்திற்குத் தளர்ச்சிவந்ததன்றென்க. இங்ஙனம் ஒன்றினது தர்மம் மற்றொன்றினிடத்தில் காணப்படுவதுண்டோவெனின், மேகங்கள் ஓடிக்கொண்டிருக்க அவற்றின்தர்மம் சந்திரனிடத்தில்காணப்பட்டுச் சந்திரன் ஓடிக்கொண்டிருப்பதாகவும், ஓடமானது நீரின்

கண் ஓடிக்கொண்டிருக்க அதன்தர்மம் கரையிலுள்ள மர முதலியவற்றில் காணப்பட்டு அவைகள் ஓடிக்கொண்டிருப்பதாகவும் இருக்குமாறு விர்த்தியின் தர்மம் அறமென்னும் புருஷார்த்தசொரூபத்தில் காணப்படுகின்றதென்க.

விர்த்தியானது மனோவிர்த்தியாக விடயங்களின்மேல் பிரவேசமடையினும் அவ்வக்கணந்தோறும் அவ்விடயங்களை ஆராய்ந்து ஆராய்ந்து வெளியாக்கி அவ்வெளியையும் தனது சொரூபத்திற் கரைத்துக்கொண்டிருக்கவேண்டும். அங்ஙனம் பலகாலுஞ்செய்துகொண்டுவரின் சிறுகச்சிறுக அம்மனோவிர்த்தியானது நசிந்து அகண்டாகாரவிர்த்தியாக விளங்குமாகலின் அஞ்ஞான்று தனது சுயசொரூபமாகிய (வியாபக விளக்க) அறமென்னும் புருஷார்த்தம் விளங்கிநிற்குமென்க. இங்ஙனம் விடயத்தெழு மனோவிர்த்தியை அகண்டாகார விர்த்தியாக்குதற்கு * ஸ்தூணநிகநநியாயமாக,

கைவல்லியம்.

நரர்குழி பறித்து மெள்ள நாட்டிய நெடிய கம்பம்
உரமுறக் குத்திக் குத்தி யுரப்பிக்கு முபாயம் போல
பரமமாஞ் சொரூபந் தன்னிற் பற்றிய மனோவி ருத்தி
திரநிலை பெறச்சந் தேகந் தெளிதலை மொழிகின் றேனே.

எனவும்,

இதுவுமது.

வாதனை வயத்தி னாலே வருகிற விருத்தி யெல்லாம்
ஏதினா லடக்க லாகு மென்றுதான் விசாரஞ் செய்யின்

---

* ஸ்தூணநிகநநியாயம் = தம்பம் புதைக்குந் திருஷ்டாந்தம்.

போதமா மிராசன் றானைப் புந்தியைப் புலன்க ளெல்லாந்
தாதரா யிருக்கப் பெற்றாற் சகலமு மடங்குந் தானே.

எனவும்,

ஞானவாசிட்டம்.

எங்கே யெங்கே மனமோடி யிளையோ ரென்ன வீழ்ந்தழுந்தும், அங்கே யங்கே நின்றெழுப்பி யகண்ட வறிவிலடைவிப்பாய், சங்கே தமதா யிவ்வாறு சாதித் துளமாமதகரியை, வெங்கே தமறத் தடுத்தெல்லா விசாரத் தானும் வீடணைவாய். எனவும்,

பகவற்கீதை.

வாங்கி யைம்பொறி நின்றம னந்தன்னை
நீங்கி டாவகை நெஞ்சினி றுத்தியே
தீங்கி யாவையுஞ் சிந்தைசெ யாவண்ம்
பாங்கி யாதது வேபயில் வாயரோ.

எனவுங் கூறியிருக்கின்றன வென்க.

விர்த்தியைப் பலகாலும் விடயங்களிற் செல்லவிடாது தடுத்துக்கொண்டேவரின் அவ்விர்த்திவடிவமா யிருக்கும் மனமென்கிற உள்ளமானது தன்பால் இதுகாறுஞ் சடாகாரமாய்ச் சார்ந்திருந்த தடிப்புகளெல்லாங் கெடச் சிதாகாரமாய் நிலைக்குமென்பதற் குதாரணம்,

ஞானவாசிட்டம்.

மெத்து கின்ற வாதனையை விட்டான் மேலா நிலையுளதாம், சத்தி னசத்தி னிடைநின்ற சைதன் னியத்திற் சா

ட்டியத்தின், ஒத்து நடுநின் றலைவதுமே யுள்ள மாகு மவ்வுள் ளம், சித்தின் முயல்வாற் சித்தாகுஞ் சடத்தின் முயல்வாற் சடமாகும். எனவும்,

### தேவிகாலோத்தரம்.

கருத்தடங்கின் முத்தியது கையகலிற் கட்டாகும். எனவும்,

### கைவல்லியம்.

அசத்தி லெம்மட்டுண் டம்மட்டும் பராமுக மாகினு யம்மட்டும், நிசத்தி லுள்விழிப் பார்வையா யிப்படி நிரந்தரப் பழக்கத்தால், வசத்தி லுன்மன நின்றுசின் மாத்திர வடிவமா கிடின்மைந்தா, கசத்த தேகத்தி லிருக்கினு மானந் தக் கடல்வடி வாவாயே. எனவுங்

கூறியிருப்பதனாலும் மற்றும் வருவனவற்றாலுங் காண்க

அன்றியும் ஷெ விர்த்தியானது அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம் என்னும் முத்தோடங்காரணமாகத் தளர்ச்சியை யெய்துமாயின் அதனை முறையே கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்னும் மூன்றின் நெறித்தாக ஷெ தோடங்கள்போக்கி நிலைபெறச்செய்தல்வேண்டும். அஃதெங்ஙன மெனின்,

(1-வது.) அறிவேவடிவாகிய தன்னை மறைத்துத் திணை பாலிடங்களாகிய அயல்பாவமாக ஸ்புரித்தலே அஞ்ஞானம்; இதனை (ஞானாசிரியரிடத்து) விடாச் சிரவணம் புரிந்து கெடுத்தலும்.

(2-வது.) ஞானசிரியனது உபதேசமொழியின் தீர்ந்த நிலையிற் கலக்கமெய்தி அதாவது நமது சுயசொரூபமானது சமாதிக்கண் விளங்கும் வியாபகவிளக்கமோ, அன்றித்திணை பாலிடங்களாக விளங்கும் தேகமோவென ஐயமயமாயிருத்தலே சந்தேகம்; இதனை ஏகாந்ததானத்திலிருந்து யுக்தி பூர்வகமாக விடாது மனனம்புரிந்து கெடுத்தலும்,

(3-வது.) அயல்பாவமாகிய தேகாதி பிரபஞ்சத்தைத் திரமென்று மழுங்கியிருத்தலே விபரீதம்; இதனை விடாது மனனித்தலின் வாயிலாய் உண்டாகும் சித்தமயக்கந் தீர்தலாகிய தெளிதலினாற் கெடுத்தலுமாமென்க. இதனை,

**கைவல்லியம்.**

சிக்கெனப் பழகல் கேட்டல் சிந்தித்தல் தெளித லாலே
விக்கின மடஞ்சந் தேகம் விபரீதம் போக்கு வாயே. என்வும்,

**ஞானவாசிட்டம்.**

திகழ்மனம்போய்த் தற்பதத்தைத் தெளியு மட்டும்
தேசிகனால் சொல்வழியிற் செல்லு வாயே. எனவும்
கூறியிருப்பதனாற் காண்க.

இதுகாறும் விதந்துகூறப்பட்ட அறமுதலாகிய சதுர்விதபுருஷார்த்தங்களென்னும் அருஞ்செல்வமயமாய் நிற்றற்குச் சாதனசதுட்டயத்தை அத்தியாவசியகமாய் வகித்திருக்கவேண்டுமென்க.

## சாதன சதுட்டய விலக்கணம்.

அச்சாதனசதுட்டயமாவது யாதெனின், நித்தியாநித்தியவஸ்து விவேகம், இகமுத்திரார்த்தபலபோகவிராகம், சமாதிசட்கசம்பத்து, முமுட்சுத்துவம் ஆகிய நான்குமாமென்க. இவற்றுள்,

1-வது நித்தியாநித்தியவஸ்து விவேகமாவது: நித்தியப்பொருள் இனையதெனவும், அநித்தியப்பொருள் இனையவெனவும் தெளிந்திருக்கும் அறிவுடைமையாம். அதாவது அகம்பொருளே சதுர்ஞான்றும் உண்மையைத்தழுவிய நித்தியமென்றும், தேகமுதலிய பிரபஞ்சமனைத்தும் ஷை சதுர்ஞான்றும் இன்மையைத்தழுவிய அநித்தியமென்றும் உணர்ந்திருத்தலே யாமென்க.

2-வது இகமுத்திரார்த்த பலபோகவிராகமாவது: இகமாகிய இவ்வுலகத்தின்கண்ணும், (உத்திரம்) சுவர்க்கமாகிய பரவுலகத்தின்கண்ணும் வரற்பாலனவாகிய பலபோகங்களினிடத்தும் வெறுப்புற்றிருத்தலாம். அதாவது இவ்வுலகத்தில் (அநித்தியமாயுள்ள) பெண்டு, பிள்ளை, கிரகம், கிராமம், சேத்திரம், தனம், தானியம் முதலியநாநாவித விடயதேகபோகங்களினிடத்தும்; சுவர்க்கலோகத்தில் (அநித்தியமாயுள்ள) அரம்பையாதிதேவமாதர், காமதேனு, கற்பகவிருட்சம், சங்கநிதி, பதுமநிதி முதலிய நாநாவித பெருந்தேகபோகங்களினிடத்தும், மலமூத்திராதி அசுத்தங்களினிடத்து யாவருக்கும்பிரியமெழாததுபோல முழுதும்விரக்திமய

மாயிருந்து அபுத்திபூர்வகமாக நிகழ்ந்துகொண்டு வருதலா மென்க.

3 - வது சமாதிசட்கசம்பத்தாவது: சமம், தமம், உபரதி, திதீட்சை, சமாதானம், சிரத்தை யென்னும் (செல்வம்போன்ற) இவ்வறுவகை ஒழுக்கங்களையும் பெற்றிருத்தலேயாம். அவற்றுள் (1 - வது) சமமென்பது: விடயங்களிலே எழுந்துசெல்லும் அந்தக்கரணத்தைத் தடுத்துக்கொண்டிருத்தலும், (2 - வது) தமமென்பது: செவிமுதலிய தசேந்திரியங்களாகிய புறக்கரணங்களை விடயங்களைப்பற்றும் பழக்கவழியில் செல்லவிடாது தடுத்துக்கொண்டிருத்தலும், (3 - வது) உபரதியென்பது: மனைமுதலாகிய விவகாரங்களை நாளுக்குநாள் சிறுகச்செய்தலும். (4 - வது) திதீட்சையென்பது: வினைக்கீடாகவந்து தம்மைவருத்துகின்ற சுகதுக்கங்களைச் சகித்துக்கொண்டு அவற்றின்வசமுறாதிருத்தலும், (5 - வது) சமாதானமென்பது: ஆத்மாநாத்ம விசாரத்தைச்சிரவணித்தவாறு அதனைப் பாதுகாத்தற்கு விடாது சிந்தித்துக்கொண்டிருத்தலும், (6-வது) சிரத்தையென்பது: ஞாநாசிரியரிடத்தும்,ஞானசாத்திரங்களிடத்தும் விசுவாசம் வைத்திருத்தலுமா மென்க.

4 - வது. முமூட்சுத்துவமாவது: மோட்சாபேட்சை யெனப்படுவதாம். அதாவது தேகமுழுவதும் தீயால்தகிக்கப்பட்ட ஒருவன் சிரமுழுவதும் மறையத்தக்க சலமிருக்குமிடத்தை அதிக விரைவிற்றேடுமாறு, தேகாதியால் வரற்பா

லனவாகிய தாபத்திரயாக்கினியால் தகிக்கப்பட்டு அதனைத் தணித்தற்கியைந்த தனது போதசொரூபமாகிய தீர்த்தத்தைத் தரிசிக்குமாறு அதிதீவிரதரமுற்றுக்கொண்டிருத்தலாமென்க. இவற்றுக் குதாரணம்,

**கைவல்லியம்.**

நித்திய வநித்தி யங்க ணிண்ணயந் தெரிவி வேகம்
மத்திய விகப ரங்கள் வருபோகங் களினி ராசை
சத்திய முரைக்க வேண்டுஞ் சமாதியென் றாறு கூட்டம்
முத்தியை விரும்பு மிச்சை மொழிவர்சா தனமிந் நான்கே.

எனவும் மற்றும் வருவன வற்றாற் காண்க.

சாதன சதுட்டயத்தாலன்றி ஏனையவற்றால் ஷை புருஷார்த்தங்களைப் பெறக்கூடாதென்ப தென்னை? சரியை, கிரியை, யோகமென்னும் இவ்வரிய ஆற்றல்களால் பெறக்கூடாதோவெனின், இப்பேராற்றல்களானவை உயிர்கள் வழிபடுவதற் கியைந்தனவாயிருக்கின்றனவேயன்றி ஷை புருஷார்த்தத்தைத் தராவென்க. வழிபடுதலாவது: யான், எனதென்கிற சுதந்தரத்துவம் கிஞ்சித்துமின்றித் தாம் வந்திக்கப்பட்ட பரத்தின்வசமுற்று அதனது இன்பாகாரமாக இலயித்திருப்பதாம். இத்துணை அருமையைத் தரற்பாலனவாகிய சரியையாதி கிருத்தியங்கள் ஷை அறமுதலிய புருஷார்த்தங்களைத் தருவதற்கு விருத்தமென்னையெனின், சாதன சதுட்டயமே ஷை புருஷார்த்தங்களைத் தருதற்கியைந்தநேர் சாதனமன்றாயின், அவற்றினுங்கீழ் நிலையினவாகிய சரியை

யாதிகள் எங்ஙனம் மோக்ஷ புருஷார்த்தங்களைத்தரும்? சாதன சதுட்டயமும் நேர்சாதன மன்றென்பது எங்ஙனமெனின், சாதன சதுட்டயத்தால் ஆத்மாநாத்ம விசாரத்தெளிவும், அத்தெளிவாகிய ஞானத்தால் மோக்ஷ புருஷார்த்தமும் வாய்க்கின்றனவாகலின் சாதனசதுட்டயம் ஆத்மாநாத்ம விசாரத்தெளிவுக்கும் இத்தெளிவு, மோக்ஷ புருஷார்த்தத்திற்கும் நேர்சாதனமாம். இதனாலேயே சாதனசதுட்டயம் மோக்ஷபுருஷார்த்தத்திற்கு நேர்சாதனமன்றெனக் கூறியதென்க. ஆயினும் அது பரம்பாரசாதனமாயிருக்கின்றது. அங்ஙனமே சரியையாதி கிருத்தியங்கள் சாதனசதுட்டயம் வாய்த்தற்கியைந்தவைகளாயிருக்கின்றமையினால் அச்சாதனசதுட்டயத்திற்கு நேர்சாதனமென்று சொல்லப்படும். ஆயினும் மோக்ஷ புருஷார்த்தத்திற்கு நேர்சாதன மெனப்படுமா? பரம்பராசாதனமெனப்படுமன்றோ? அதிலும் தூரபரம்பரா சாதனமன்றோ? எங்ஙனமாயினும் மோக்ஷ புருஷார்த்தத்தையடைவதற்குச் சாதனமாயிருக்கின்றனவன்றோவெனின், இச்சரியையாதிமுக்கிருத்தியங்கள் வாய்ப்பதற்கு விதிவிலக்குகள், வழுவாதொழுகும் இல்லறதர்மமாகிய கன்மானுஷ்டானம் நேர்சாதனமாயிருக்கின்றதால் அதனையும் மோக்ஷ புருஷார்த்தத்தை யடைவதற்குச் சாதனமாயிருக்கின்றதெனக் கூறலாமே! இஃது எங்ஙனமிருக்கின்றதெனின், கடத்தை வனைவதற்குக்காரணம் குலாலனாயிருக்க, அங்ஙனங்கூறாது அக்குலாலனையீன்ற தந்தையையும், அவனையீன்ற தந்தையையுங் கூறுவதுபோலன்றோவிருக்கின்றது! இங்ஙனங்கூறு

தற்குக்கூடுமாயின் அங்ஙனமுங்கூறலாம்! கடத்திற்கு நேர் காரணம் குலாலனும், குலாலனுக்கு நேர்க்காரணம் அவன்தந்தையும், அவனுக்கு நேர்காரணம் அவனையீன்றதந்தையும் மற்றும் இங்ஙனமே யிருப்பதுபோல புருஷார்த்தத்தை யடைவதற்கு நேர்சாதனம் ஆத்மாநாத்மவிசாரத்தெளிவாகிய ஞானமும், அதற்குநேர்சாதனம் சாதனசதுட்டயமும், அதற்கு நேர்சாதனம் சரியையாதிகிருத்தியமும், அதற்கு நேர்சாதனம் இல்லறவொழுக்கமாகிய கன்மானுஷ்டானமுமாயிருக்கின்றன. ஆகலின் சரியையாதியை நேர்சாதனமாகக்கூறுதல் முரணென்றுணர்க. இதனாலன்றோ,

பிரபுலிங்கலீலை.

உரைசெயிற் பிரம ஞான மொன்றுமே முத்திக் கேது
சரியைநற் கிரியை யோகந் தாமொரு மூன்று ஞான
மருவுதற் குரிய வென்றே மறைபுகன் றுரைக்குழிந்தக்[றே.
கருவினைப் பொருளென் றெண்ணிக் களிப்பவர் கயவரன்

எனக்கூறி யிருக்கின்றது?

அன்றியும் சரியையாதி முக்கிருத்தியங்களும் உயிர்கள் வழிபடுவதற் கியைந்தனவாயினும், இவற்றைப்புரியுஞான்று உயிர்கள் தம்மை என்னவெனக்கொண்டு புரிந்துவருகின்றன? அடிமையெனக்கொண்டேபுரிந்துவருகின்றன வெனின், இதனால் பரமென்பது ஆண்டானெனப்படுகின்றதன்றோ? ஆமெனின், இங்ஙனம் ஆண்டான், அடிமையெனப்படும் இவ்விரண்டும் பொருள்களா? அன்றா? பொருள்கள் தாமெனின், துவிதமுற்ற இப்பொருள்கள் வெவ்வேறிடத்

திலுள்ளனவா? அன்றி ஓரிடத்திலேயே உள்ளனவா? ஓரிடத்திலேயே உள்ளனவெனின், ஒரேகாலத்தி லுள்ளனவா? வெவ்வேறுகாலத்தி லுள்ளனவா? ஒரேகாலத்தில் தானெனின், திருட்டாந்தத்தில் இங்ஙனம் இருபொருள்கள் ஓரிடத்தில் ஒரேகாலத்தி லிருக்கக் காண்பிக்கலாமே! அன்றியும் இஃது 'இரண்டு சத்துப் பொருள்கள் ஒரேகாலத்தில் ஓரிடத்திலிரா' என்பதற்கும் விருத்தமா யிருக்கின்றதே! ஓர் அறையின்கண் ஒரேகாலத்தில் நாமிருவருமிருந்து வார்த்தையாடுதல் போன்று கொள்ளக்கூடாதோவெனின், ஓரறையிலிருப்பினும் வெவ்வேறு தானத்திலிருக் கின்றனமா? அன்றி ஒரேதானத்திலிருக்கின்றனமா? ஒரேதானத்திலேயே யிருக்கின்றனமெனின், அவ்வோர்தானமாவது யாது? அறையாகியவீடேயெனின், இவ்வீடு சுவர், கூரை, தரைமுதலாகிய அவயவசகிதமா யிருக்கின்றமையினால் அவயவங்களாகிய அவற்றைத் தனித்தனி பிரித்துவிடின் வீடென்பதற்குப் பொருளெங்கே? இன்றெனின், நாமின்றே? இருக்கின்றனமே! இருக்கின்ற நாம் எங்கேயிருக்கின்றனம்? தரையிலிருக்கின்றனமெனின், தரையென்பது பூமியையன்றியும், பூமியென்பது அணுக்களின் சேர்க்கையையன்றியும் இன்றாதலால் ஒருவரிருக்கின்றஇடத்திலுள்ள (பிருதிவி) அணுக்களும் மற்றொருவரிருக்கின்ற இடத்திலுள்ள அணுக்களும் ஒன்றாயிருக்கவேண்டுமே. அங்ஙனமிருக்கின்றனவா? இன்றே! ஆகலின் இருவரிருக்கின்றதானமும் வெவ்வேறாகி ஈரிடத்தனமென்றாகின்றனமன்றே? இங்ஙனமே ஆண்டான், அடிமை

யென்னும் துவிதப்பொருள்கள் ஈரிடத்தனவாகின்றனவெ ன்க. இதனால்ஒன்றிலே மற்றொன்று இன்றென்பதாகின்றது. ஒன்றில்மற்றொன்று இராதோவெனின், குணி குணம் காரண காரியம்முதலியனவாக இருக்கலாம். இருப்பினும் குணியை யன்றிக்குணமும், காரணத்தையன்றிக் காரியமும்இல்லாது கற்பனையாகின்றனவே. இங்ஙனமே கொ ஆண்டான், அடி மையைக் குணிகுணமாதியாகக்கொள்ளின் ஒன்றுகற்பனையா யும், மற்றொன்று யதார்த்தமாயும் ஆகுமே! ஆகலின் எதை க்கற்பனையாகவும், எதை யதார்த்தமாகவுங்கொள்ளலாம்? இரண்டும் யதார்த்தமாகின்றனவேயெனின், யதார்த்தமான வை யிரண்டும் எங்ஙனம் ஓரிடத்திலிருக்கலாம்? மேல், கீழ் பக்கமாதி தசபுறத்திலிருக்கின்றனவெனினும் வேறிடத்தன வென்றாகின்றனவே! அங்ஙனம் எதனது தசபுறத்தில் எது இருக்கின்றது? இன்னும் எவ்விதத்தால் யோசிக்கினும் துவி தப்பொருள்கள் வேறிடத்தனவேயன்றி ஓரிடத்தனவன்றெ ன்க. அன்றியும் உயிர்கள் எண்ணிறந்தன வாகலான் அவ் வெண்ணிறந்தவுயிர்களும் தனித்தனி வெவ்வேறிடத்தனவா யிருக்கவேண்டுமே. இதனால் தனித்தனி இடங்களைக்கொண் டிருக்கும் சீவகோடிகளும், ஆண்டானும் ஏகதேசமாயுள்ள கண்டப் பொருள்களேயன்றி எங்குமாயுள்ள அகண்டப் பொருள்களெனப்படுமா? அகண்டமெனப்படுவது காலதே சவஸ்துபரிச்சேத ரகிதமாயிருப்பதாகிய பரிபூரணபொருள் களினிடத்தன்றோ விளங்கும்? மேற்கூறியவைகளால் ஆண் டான், அடிமைகளாகிய யாவும் ஏகதேசகண்டப்பொருள்க

ளாகின்றனவே! அடிமைகளாயுள்ள பசுக்களிடத்தும், சடமாயுள்ள பாசத்தினிடத்தும் ஆண்டானுயுள்ள பதிப்பொருளானது நிறைவா யிருக்கின்றமையால் பசுபாசங்கள் ஏகதேசகண்டத்துவமா யிருப்பனபோல அப்பதிப்பொருள் எங்ஙனம் கண்டத்துவமாயிருக்கலா மெனின், ஓர் பொருள் மற்றோர் பொருளைத் தன்பால் உள்ளும் புறம்பும் நிறைவா யிருக்க ஏற்றுக்கொண் டிருக்குமாயின் அது கற்பனுத்தோற்றமாயிருக்குமா? அன்றி யதார்த்தமா யிருக்குமா? கயிற்றின்கண் தோன்றிய அரவும், மண்ணின்கண் தோன்றிய கடமும் தத்தம்பால் உள்ளும் புறம்பும் ஷெ கயிறு, மண் ஆகிய பொருள்களை நிறைவாக ஏற்றுக்கொண்டிருக்கின்றனவாதலால்அரவு கடம்,ஆகிய இவைகள்யதார்த்தமாகுமா?கற்பனையன்றோ? இங்ஙனமே பதிப்பொருள் (உள்ளும் புறம்புமாய்) நிறைவுற்றிருக்கப் பசுபாசங்க ளிருக்கின்றனவெனின்,அவைகளுங்கற்பனையெனப்படுமன்றோ?கற்பனையாயின் பதிப்பொருள்நிறைவுற் றிருப்பதென்பதற்கு விருத்தமின்று. பசுபாசங்கள் கற்பனையன்றேயெனின், அவைகள்கற்பனையன்றாயிருக்கப் பதிப்பொருள் நிறைவாயிருக்கின்ற தென்னலாமா? அங்ஙனமின்றிப் பதிப்பொருளின் உள்ளும் புறம்பும் பசுபாசங்கள் நிறைந்திருக்கின்றன வென்னலாமா? இதனுல் பதிப்பொருள் புரையுடையதாகவும், கற்பனையாகவும். முடிகின்றதே! அங்ஙனமுங் கூறக்கூடாதெனின், பின்னரெங்ஙனங் கூறினுல் பசுபாசங்கள் யதார்த்தமாகவும், பதிப்பொருள் அவற்றினுள்ளும் புறம்பும் நிறைவுற்றுப் பரிபூரணமாகவு

யிருக்கும்? இஃது இருதலைக்கொள்ளியி லகப்பட்ட எறும்பு போல் அலைதற்கிடமா யிருக்கின்றதன்றோ? இதற்கென் செய்குதும்?

பதிப்பொருள் கண்டத்துவமா யிருப்ப தெனினும் அஃது இல்லாமற் போகுமா? இருக்கின்றதே! அதனோடு பசுபாசங்களும் இருக்கின்றன வென்பதற்கு முரணென்னை யெனின், இம்முப்பொருள்களும் கண்டத்துவத்தைப்பெற் றிருப்பின் அவைகள் அநித்தியத்தை யேற்குமே! எங்ஙன மெனின், எது கண்டத்துவமுடைய பொருளோ அது அவயவமுடைய பொருளாகும். [அவயவமாவது: மேல், கீழ் முதலிய தசபுறமாம்.] அவயவ முடையது காரியமாகும். காரியம் பின்னொன்று இன்மையை எய்தக்கூடியதாகையால் அஃது அநித்தியமாகுமென்க. இங்ஙனமே பதி, பசு, பாச மாகிய மூன்றும் கண்டப்பொருள்களாயின் அவயவமுடை யனவாகவும், காரியங்களாகவும் ஏற்பட்டுப் பின்னொன்றின் மையையெய்தி அநித்தியமாகுமே! அன்றியும் கண்டமாயும், அநித்தியமாயு மிருப்பதுயாதோ அது சடமாயுமிருக்கும். அதனோடு துக்கமாயுமிருக்கும். ஆகலான் முற்கூறியவைக ளால் பதிமுதலாய முப்பொருள்களும் சடம், துக்கம் என்ப வற்றையும் ஏற்கவேண்டுமே. இங்ஙனம் அசத்தாதி இழிந்த குணங்களைப் பதிமுதலாகிய பொருள்களின்பேரில் ஏற்றி வைக்கலாமா? பசுபாசங்களின்பேரில் ஏற்றிவைப்பினும் அத னால் பதிப்பொருளானது அகண்டம், சத்து, சித்து, ஆனந் தம் என்னும் உயர்ந்தகுணங்களை யேற்றுப் பரிமளிக்கும்.

இவற்றையெல்லாம் ஆராய்ந்து தெளியாமல் பதிப்பொருளை ஏனைய இரண்டினோடுசேர்த்துப் பாழாக்கலாமா? இதற்குத் தானோ துவிதசித்தாந்தமெனக்கூறி முப்பொருள் நிச்சயஞ் சாதிக்கத் திருக்கூட்டங்களைச் சேர்த்து ஆங்காங்குத்திரிந் துகொண்டிருப்பது? முப்பொருள் நிச்சயம் இங்ஙனந் தானிருக்கின்றதோ? பதியைக்கெடுப்பார் பாவிகளன்றோ? அப்பாவிகளால் தாபிக்கப்படுவதுதான் சித்தாந்தமோ? பசு பாசங்களுக்கு எத்துணைத்தோடங்கற்பிக்கினும் அவைகள் அற்பவத்துக்களாதலின் அதனால் நமக்கு யாதொருபாதக மும்இன்று. ஆயினும்பதிப்பொருளுக்கு யாதொருதோடமு மில்லாதிருக்க இருப்பதாகக்கற்பிக்கின் அது மகத்தாகிய வத்துவாதலின் அதனால் நமக்குப் பாதகமேபயனாக முடியு மன்றோ?

அன்றியும் பதியானது சத்து, சித்து, ஆனந்தமுத லிய இலக்கணங்களை யுடையதாகலின் அவற்றிற்கெதிர் மறையான அசத்து, சட, துக்கமுதலிய இலக்கணங்களை யுடைய பொருள்கள் யாவை? பசு பாசங்களேயன்றோ? அங்ஙனமன்று: பசுவானது சத்து, சித்துஆகியகுணங்களை யும்; பாசமானது சத்து, சடமாகிய குணங்களையும் உடை யனவாயிருக்கின்றன வெனின், பசுவுக்குச்சொன்ன இலக்க ணம் ஒருவாறு பொருந்தினும் பொருந்தும். பாசத்திற் குச் சொன்னஇலக்கணம் முற்றும்பொருந்தாதே. எங்ஙன மெனின், சத்துக்கு உபலக்கணங்கள் சித்து, ஆனந்தமும்;

அசத்துக்கு உபலக்சணங்கள் சடம்துக்கமுமாகலான் இவை கள் ஒவ்வோர்பொருளின்கண்ணும் இனமாகின்ற ஒருதொடராகச்சேர்ந்திருக்குமேயன்றி மாறுதலாயிராவென்க. இதன்படிபார்க்கின் பாசமானது சத்திலக்கணத்தையுடையதாகுமேல் அது சித்திலக்கணத்தையும் உடையதாயிருக்குமே! சடவிலக்கணத்தை எங்ஙனம் ஏற்கும்? அதனோடு ஆனந்தவிலக்கணத்தையுஞ் சேர்த்துக் கூறிவிடலாமே! ஏனெனின், ஆனந்தமும் சத்திலக்கணத்திற்கு உபலக்கணமாகலானென்க. இங்ஙனம் சத்திலக்கணமாதியைப் பாசத்தின்பேரி லேற்றிவிட்டால் அவற்றிற்கெதிர்மறை இலக்கணங்களாகிய அசத்தாதியை எவற்றின்பேரிலேற்றுவது? பதி பசுக்களின்பேரிலன்றோ? இன்னும் இவற்றைப்பற்றி விசாரிக்கப்புகின் இத்துணையவெனக் கணிக்கப்படாத் தோடங்களெல்லாம் வாய்க்குமே! இதற்கென்செய்வது? இங்ஙனமாகிய உளறற்றன்மையை வகித்தபட்சமா சித்தாந்தமெனப்படும்? இதனினும் வேறு அறியாமையுமுண்டோ? இன்றாகலின் இது சித்தாந்தமேயன்றென்க. அன்றியும் சித்தாந்தமாவது பிரமாணமுடையதாகலான் அப்பிரமாணமும் வேறுபிரமாணத்தால் யுக்திபூர்வமாக மறுக்கப்படாதிருக்கவேண்டுமே! அங்ஙனமே இஃதும் சித்தாந்தமாகுமாயின் மறுக்கப்படாத பிரமாணமுடையதா யிருக்கவேண்டுமன்றோ?

நிற்க,சித்தாந்தமெனக் கூறப்படும் இப்பட்சம் அறியாமைமயமாயிருக்கின்றதாயினும் தேகபோகங்களிலேயே அழுங்

தியிருக்கும் கன்மகாண்ட ஒழுக்கம்போலல்லாமல் அப்போ கங்களில் முற்றும் விரக்தியுற்று எல்லாவுரிமைகளும், செய லும் இறைவனுடையனவேயென்று திடபாவங்கொண்டு அவ்விறைவன்வசப்பட்டு அவனது இன்பமயமாகவே இருத் தற்கியைந்ததாகலின் இப்பட்சத்தைச்சார்ந்த சரியையாதி கிருத்தியங்கள் சாதனசதுட்டயம் வாய்ப்பதற்கு அடுத்த சாதனங்களா யிருக்கின்றன. அதாவது சாதனசதுட்டயம் வாய்ப்பதற்கு நேர்சாதனமாகின்றன. ஆயினும், ஆத்மாநா த்ம விசார விவேகத்தினால் வாய்க்கக்கூடிய வீடு அறமுத லாகிய புருஷார்த்தமாக அறிவானது நிலைத்திருத்தற்கு நேர்சாதனங்களாகுமா? ஆத்மாநாத்மவிவேகமே சாதனசது ட்டயத்தாலன்றி வாய்க்காதே. இதனாலன்றோ;

கைவல்லியம்.

சாதன மின்றி யொன்றைச் சாதிப்பா ருலகி லில்லை
ஆதலா லிந்த நான்கு மறிந்தவர்க் கறிவுண் டாகும். எனவும்,

குமாரதேவர் சாத்திரம்.

மேலாஞ் சதுட்ட சாதனங்கள் மேவி நிறைந்த பேர்க் குரைக்கின், மேலா மதுநா மெனத்திடமாய் விளங்கு மவை யில் லாதவர்க்கு, மேலாம் பரமன் மான்மழுவாய் விளங்கி யுரைத்தும் விளங்காது, மேலாஞ் சாத னங்கள்வர மேவ வேண்டுஞ் சாதுசங்கம். எனவுங் கூறியிருக்கின்றன?

ஆகலின், ஆத்மாநாத்ம விவேகங் காரணமாகப் பரம புருஷார்த்தத்தை யடைவதற்கு நேர்சாதனம் சாதனசதுட் டயமேயாமென்க.

ஆத்மாநாத்ம விசார விவேகமாவது யாதெனின், அவத்தாத்திரயம், உபாதித்திரயம் முதலியவைகளுக்கு ஆதாரமாயும், சாட்சியாயும், விளக்கமாயும் இருக்கின்றது எந்த சத்து, சித்து, ஆனந்த சொரூபமோ அதுவே அகம்பொருளாகிய ஆத்மாவென்றும்; அவ்வாத்மாவுக்கு அயலாய் அசத்து,சட, துக்கசொரூபமாயிருக்கும் சீவேஸ்வர சகத்தென்பவை அநாத்மாவென்றும் விசாரித்து அயலாகின்ற அவை ஆத்மாவாகிய நம்மிடத்தில் பிராதிபாஸிகமாகவும், வியாவகாரிகமாகவுந் தோற்றப்படும் நமது கோணல்களேயன்றி வேறன்றெனத் திடபாவமுற்று இருவகைச் சமாதியுமைப் பையெய்தித் தானேதானாய் விளங்கியிருப்பதே யாமென்க. ஆத்மாவே யனைத்துமென்பதற் குதாரணம்,

ரிபுகீதை.

"அறிவினிடைக் கற்பிதமாய்க் காண்ப வெல்லாம்
அதிட்டான வறிவன்றி யனிய மாகா." எனவும்,

சொரூபசாரம்.

என்னைத் தவிரமற்றிங் கேதுமிலை யென்னுணை
பொன்னைத் தவிரவிலாப் பூடணம்போல் - பொன்னையுரு
வேறுக்கிப் பேருரைத்த வேற்றுமைபோல் நம்மையுமவ்
வாறுப் பகுத்துரைத்தோ மால். எனவும்,

தத்துவராயர் பாடுதுறை.

போதத்தை யுணராதே பொல்லாத மாயையால்
பேதத்தை யுணர்ந்தோமென் றுந்தீபற

பேதமும் பிரமமென் றந்தீபற. எனவும்,
மற்றும் வருனவற்றாற் காண்க.

**துவைதமுதலிய முப்பட்சத்துள் இது 1 - வது துவைதம்.**

வேதத்தைப் பிரமாணமாகக்கொண்டிருக்கும் துவைதம், விசிட்டாத்துவைதம், அத்துவைதம் என்னும் மூன்றும் ஒன்றுக்கொன்று விரோதமாகிய பட்சங்களையுடையனவாயிருக்கின்றமையினால் அவற்றைப்பற்றிச் சிறிதாராய்வாம்.

இவற்றுள் 1 - வது - துவைதபட்சமானது பதி, பசு, பாசமூன்றும் வெவ்வேறுஅநாதி நித்திய சத்துப்பொருள்களெனக் கூறுவது.

2-வது விசிட்டாத்துவைத பட்சமானது பசு, பாசமிரண்டும் பதிப்பொருளைவிட்டு நீங்காத யதார்த்தகுணபேதங்களாயிருக்கின்றனவெனக் கூறுவது.

3-வதுஅத்துவைதபட்சமானது பதிப்பொருள் சுசாதிக, விசாதிக, சுவகதபேத ரகிதமாயிருக்கின்றதெனக்கூறுவது.

ஆக இம்மூன்றும் ஒன்றுக்கொன்று மாறாயிருத்தலினால் எதைச்சித்தாந்தமெனக்கொள்ளலாம்? துவைதபட்சத்தையேசித்தாந்தமாகக்கொண்டாலென்னையெனின், அதில் பதி, பசு, பாசமூன்றும் சத்துப்பொருள்களாயிருப்பதால் மூன்றும்வெவ்வேறாயிருக்கின்றனவா? ஒன்றாயிருக்கின்றனவா? ஒன்றாயிருக்கின்றனவெனின்,ஓர்பரமாணுவில் மற்றோர் பரமாணு இருப்பதற்கே நியாயமில்லையாயின் மூன்றுசத்

துப்பொருள்களும் ஒன்றாயிருத்தலெங்ஙனம்? அன்றியும் பசுக்கள் எண்ணிறந்தனவாகலின் அவ்வெண்ணிறந்தவைக ளுந் தனித்தனியன்றோ இருக்கவேண்டும்? அவையனைத்தும் ஒன்றாயிருத்தற்கேலுமா? அவைகள் ஒன்றாயிருத்தற்கே முடியாதாயின் அவற்றோடு பதி பாசங்களுஞ்சேர்ந்து எங் ஙனம் ஒன்றாயிருத்தற்கேலும்? இதனால் தனித்தனி பசுக்க ளும், பதிபாசங்களும் ஏகதேச கண்டப்பொருள்களாகின் றனவே! பசுபாசங்கள் அங்ஙனமாயினுந்தோடமின்று. பரி பூரணமாகிய பதிப்பொருள் அங்ஙனமாகலாமா? அன்றியும் உலகத்தைப் பதிமுதலியமுப்பொருளில் எதனோடு சேர்த் துக்கூறுவது? பாசத்தோடெனின், இவ்வுலகமும் சத்தாயி ருக்கின்றதுதானே? ஆமெனின், பாசம் சத்தாயிருக்க அத னோடு சேர்ந்தவுலகமும் சத்தாயிருப்ப தென்பதென்னை? இதனால் நான்கு சத்துப்பொருள்க ளேற்படுகின்றனவே. முன்னொன்று முப்பொருள் நிச்சயமெனப்பட்டதுபோய் இஞ்ஞான்று நாற்பொருள் நிச்சயமேற்பட்டதே!

நிற்க, இவ்வுலகமானது ஜட பாசத்தினதுகாரியமா? அன்று? காரியந்தானெனின், காரியமெனப்படுவது நித்திய மா? அநித்தியமா? நித்தியமெனின், பொன்னினது காரிய மாகின்ற ஆபரணமும், மண்ணினது காரியமாகின்ற கடமும் நித்தியமெனப்படவேண்டும். நித்தியமேயெனின், பொன், மண் இவற்றிற்குவேறாய் மூன்றுகாலத்துமிருக்கவேண்டும். அங்ஙனமின்றாதலால் அநித்தியமென்பதற்கு விருத்தமெ

ன்னே? அங்ஙனமே பாசத்தின துகாரியமாகிய இவ்வுலகமும் அநித்தியமெனப்படுமே! இது சத்தெனப்படுவதென்னை? அன்றியும் பசுக்களாகிய உயிர்கள் என்ன அளவினையுடையன? அணுத்தன்மையையுடையனவெனின், பிபீலிகமெனப்படும் எறும்புமுதல் அதிலும் நுண்ணியனவாய் அணுக்கிருமிவரையிலுமுள்ள சரீரங்களைக் கொண்டவுயிர்கள் அணுத்தன்மையுடையனவென்றாலும் ஒருவாறுபொருந்தும். ஆயினும் யானைமுதலிய பெருஞ்சரீரங்களைக் கொண்ட வுயிர்களும் அணுத்தன்மையினவென்பது எங்ஙனம்பொருந்தும்? அவ்வணுத்துணையானவுயிர்கள் யானைமுதலியசரீரங்களின் எந்தபாகங்களில் ஒட்டிக்கொண்டிருக்கும்? ஏதாவது ஓர்பாகத்திலெனின், அவ்யானையாதி சரீரத்தின் மாறுபட்ட ஈரிடத்தில் ஒரேகாலத்தில்நோயுண்டாயின் அணுத்தன்மையுள்ள உயிர் எங்ஙனம்உணரும்? அன்றியும் அவ்வணுத்தன்மை என்றுமிருப்பதா? ஓர்காலத்திலுண்டாகிமாறுவதா? என்றுமிருப்பதன்று. உயிர்கள் ஒவ்வொன்றும் வியாபகத்துவத்தையே யுடையனவாயிருந்து அநாதியில் பாசத்தால் அணுத்தன்மையடைந்தன. ஆதலால் மீண்டும் முத்தித்திசையில் வியாபகத்தையடையுமெனின், வியாபகமாயிருந்து அணுத்தன்மையடையுஞான்று வியாபகங்கெட்டு அணுத்தன்மையானதா? கெடாமலேஆனதா? கெட்டு ஆனதெனின், மீண்டும் வியாபகமாவதில்லை. கெடாமலே ஆனதெனின், அணுத்தன்மையானதென்று சொல்லுதலேகூடாது. அங்

னமே முத்தித்திசையில் அணுத்தன்மையிலிருந்து வியாபகமாகின்றதென்று கூறுவதுந் தோடமேயாமென்க.

அன்றியும் முத்தித்திசையில் பசுக்கள் வியாபகமாகின்றனவாயின் முத்தியடையும் ஒவ்வோருயிரும் தனித்தனி வியாபகமா? ஏக வியாபகமா? தனித்தனி வியாபகமேயெனின், ஓர்வியாபகமிருக்க அதற்குவிரோதமாக மற்றோர்வியாபகமே யிராதாயின் பலவியாபகமிருப்பதற்கு எங்ஙனம் இடம்பெறும்? அதனோடு பதிப்பொருளும் வியாபகமெனப்படுமா? அன்றா? வியாபகந்தானெனின், பதிப்பொருள் ஓர்வியாபகமும், (முத்தியடைந்த) தனித்தனி உயிர்கள் ஒவ்வோர் வியாபகமும் ஆக இத்தியாதி வியாபகங்கள் எங்ஙனம் பொருந்தியிருக்கக்கூடும்? அங்ஙனமின்றிப் பசுக்களின்வியாபகமும், பதியின்வியாபகமுங்கூடி ஏகவியாபகமாகின்றதென்னலாமேயெனின், பலவியாபகங்கூடி ஒரு வியாபகமாகுமாயின் முன்னொன்று அவை வியாபகமாயிருந்தனவெனப்படாவே! வியாபகமாகவே யிருந்தனவெனின், அவற்றுள் எவ்வெவற்றின் வியாபகங்கெட்டு ஏகவியாபகமானது? பசுக்களின் வியாபகங்கெட்டதாயின் மீண்டும் பசுக்கள் வியாபகமாகப் போகின்றனவன்று. பதியின்வியாபகங்கெட்டதாயின் அஃது ஏகதேச கண்டப்பொருளாகுமே! இன்னும் ஆராயப்புகின் அளவிறந்ததோடங்கள் வாய்க்குமே! இதற்கென்செய்குதும்? அத்வைதபட்சமானது இங்ஙனமா

கிய குழப்பத்திற்கிடனாயும், ஆபாச சித்தாந்தங்களை யுடைய தாயு மிருக்கின்றதுதானே? இதற்காகவன்றோ,

சிவஞான வள்ளலார்.

ஈசன்வே றியான்வேறென் றெண்ணுகின்ற பாதகரை
நீசரெனக் கண்டு நினையென்றான் - ஆசையொடும்
வேத முடிவறிந்த வேதியரைக் கூடென்றான்
பேதநிலை யெல்லாம் பிரியென்றான். எனவும்,

இதுவுமது.

௬
ஒன்றா யுலகனைத்து மானாரென் றப்பமுனி
பொன்றா மொழியாற் புகன்றிருக்கக் - குன்றாத
முத்தியினு மும்முதலு முண்டென் றுரைத்தலெவன்
பித்தமுறு சைவாநீ பேசு. எனவும்,

இதுவுமது.

ஓசையொலி யெல்லாமு மானாய்நீ யென்றபினர்ப்
பேச விரண்டுண்டோ பேய்சைவா - ஆசையெல்லாம்
அற்றவிட முத்தி நிலையோ வஃதெல்லா
முற்றவிட முத்திநிலை யோ. எனவும்,

தத்துவராயர்(கூழ்வார்ப்பு).

ஞானம் போலச் சிலசொல்லி நாடற் கரிய முத்தியினிற், றானுஞ் சிவமும் பாசமெனுஞ் சைவப் பேய்க்கும் வாரீரே. எனவும்,

### இதுவுமது.

வேதாகமங்கள் சொன்னபொருள் மெய்யே யறிவார் போன்றிருந்து, பேதா பேதஞ் சாதிக்கும் பெரும்பேய் தனக்கும் வாரீரே. எனவும்,

மற்றும் இங்ஙனமே ஆன்ரோர்கள் கூறியிருக்கின்றனர்? ஆகலின் மேல்விசாரிக்கப்பட்ட நியாயங்களால் துவைதபட்சமானது யுக்திக்குப்பொருந்தாது முழுதும் முரணாயிருக்கின்றமையினால் அது சித்தாந்தமேயன்றென்க.

### 2-வது விசிட்டாத்துவைதம்.

துவைதந்தான் சித்தாந்தமன்றாயினும் விசிட்டாத்துவைதமாவது சித்தாந்தமாகாதோவெனின், அதனையுஞ் சற்றுகவனிப்பாம். எங்ஙனமெனின், விசிட்டாத்துவைதமென்பது ஏகபதமா? துவைதபதமா? ஏகபதமேயெனின், விசிட்டம் என்பது மட்டிலாவது, அத்துவைதமென்பது மட்டிலாவது தனித்திருக்கவேண்டுமே. அங்ஙனமின்றி இருபதங்கள் சேர்ந்துநிகழ்வதால் ஏகபதமெனப்படுமா? அன்றியும் விசிட்டாத்துவைதமென்றால் பொருளென்னை? மேலான அத்துவைதமெனின், கீழான அத்துவைதமென்பது யாது? அத்துவைதமென்பது ஒன்றேயன்றி இங்ஙனம் மேலானது, கீழானது, குட்டையானது, நெட்டையானது முதலியனவாக வழங்கப்படுவதன்றே! அன்றியும் அவ்விசிட்டாத்துவைதத்தில் பதிப்பொருளை வியாபகப்பொருளெனக் குறிக்கும்

'விஷ்ணு' என வழங்கிவருகின்றதால் அப்பதிப்பொருள் எந் தவியாப்பியத்திற்கு வியாபகமா யிருக்கின்றது? பசு, பாச ங்களாகிய வியாப்பியத்திற் கெனின், இவ்வியாப்பியங்க ளோடு கூடிக்கொண்டிருப்பதனுல் விசிட்டமென்று சொல் லப்படுகின்றதன்றே? எங்ஙனமெனின், விசேடணம், விசே டியம், விசிட்டம் என்னும் இம்மூன்றில் விசேடணமாவது சிறப்பாகிய தர்மமென்றும், விசேடியமாவது அத்தர்மத்திற் குரிய தர்மியென்றும், விசிட்டமாவது தர்மத்தோடு கூடியிரு க்கும் தர்மியின் ஏகநோக்காகிய அவசரமென்றும் சொல் லப்படுமாகலானென்க. இங்ஙனமே பசு, பாசங்களை விசே டணமென்றும், பதியை விசேடியமென்றும், பசு பாசங்க ளோடு பதி கூடியிருக்கும் அவசரத்திற்கு விசிட்டமென் றும் சொல்லப்படுவதன்றே? ஆமெனின், வியாப்பியங் களாகிய பசு பாசங்கள் பொருள்களாகக் கூடிக்கொண் டிருக்கின்றனவா? அன்றிக் குணங்களாகக் கூடிக்கொண் டிருக்கின்றனவா? பொருள்களாகவே யெனின், இப்பசு பாசங்கள் எத்துணைப்பரிமாணமுடையனவோ, அத்துணைப் பரிமாணமும் பதிப்பொருள் இல்லாதுபோகவேண்டும். [அதாவது போலுடைய தாகின்றதென்க.] இதனுல் பதிப் பொருள் வியாபகமென்பதற்கு ஏதுவில்லாமற்போகின்ற தே! அங்ஙனமன்றெனின், பசு பாசங்கள் குணங்களாகக் கூடியிருக்கின்றன வென்னலாமா? ஆமெனின், இப்பசுபாசங் கள் பதிப்பொருளைவிட்டுநீங்காக்குணங்களா? நீங்குங்குணங்

களா? நீங்காக்குணங்களேயெனின், குணங்களாகிய பசு பாச ங்களுக்குவரும் ஆனி விர்த்தி முதலிய தோஷங்கள் யாவும் குணியாகிய பதிப்பொருளைச் சாருமன்றோ? அன்றியும் பசு, பாசங்கள் அசுத்தம், விகாரம், சடம் முதலாகியவைகளா யிருக்கின்றமையினால் அவைகள்யாவும் பதிப்பொருளையே யடைந்து அதனால் பதிப்பொருள் பாழ்படுகின்றதே! இங் ஙனம் பதியைப்பாழாக்கி அப்பாழியிலேயே தம்மைப் பின் பற்றியவரையும் தள்ளுதற்குத்தானோ விசிட்டாத்துவைத பட்சத்தையுஞ் சாதித்துக்கொண்டு வருவது? இன்னும் இதனை ஆராயப்புகின் துவைத பட்சத்தைப்போலவே பல வாகிய தோடங்கட் கிடனாகுமாகையால் இதுவும் சித்தாந்த மன்றென்க. இதனால் ௸ இரண்டுபட்சமும் வியர்த்தந்தா னோவெனின், இவை காரணகாரியமுதலியவை இறந்து தா னே தானாயிருக்கும் அகம்பொருளைத் தெளிவதற் கிசை யாதனவாகலான் வியர்த்தமேயாயினும் வழிபடுதற்கியைந்த சௌபான மார்க்கங்களா யிருக்கின்றன: அதனால் முற்றும் வியர்த்தமன்றென்க. அன்றியும் யதார்த்தமாயிருக்கும் துவைத விசிட்டாத்துவைதங்கள் வேறேயிருக்கின்றன. அவையே தன்னைத் தெளிவதற் கிசைந்தனவாகலின் சித்தா ந்தமெனப்படுமென்க. அவை யாவையெனின், கூறுதும்.

### யதார்த்த துவைதம்.

அஞ்ஞானதிசைக்கண் சகசீவ பரங்களாக விளங்கும் ஆரோபங்களனைத்தும் (சமாதியாகிய) ஞானதிசைக்கண்

அயலாகவும், தான் அறிவாகவும் விளங்க அயல், அறிவாகாமலும்; அறிவு, அயலாகாமலும் இருக்கின்ற இவ்வநுபவம் துவைதமாகலான் இதுவே சொரூபசமாதி விளக்கமாகிய யதார்த்த துவைத சித்தாந்தமாமென்க.

### யதார்த்த விசிட்டாத்துவைதம்.

யதார்த்த விசிட்டாத்துவைதமாவது யாதெனின், விசிட்டமாவது கூடியிருப்பதாகலின் எதனோடு எது கூடியிருப்பதெனப்படும்? அதிஷ்டானமாகிய அறிவோடு ஆரோபங்களாகிய சகசீவபரங்களன்றோ? எங்ஙனமெனின், அதிஷ்டானமாகிய கயிறு, மண்முதலியவைகளினிடத்தில் ஆரோபமாகிய அரவு, கடம்முதலியவைகள் கூடியிருப்பது போலாமென்க. இத்திருட்டாந்தத்தில் கூறப்பட்ட அரவு, கடம்முதலியவைகள் கயிறு, மண் முதலியவைகளன்றெனவும், அவைகளையன்றி யின்றெனவும் இருத்தலால் ஷை கயிறு, மண்முதலியவைகள் அவ்வரவு, கடம் முதலியவற்றில்நிறைவாயிருந்து விளங்குவதுபோல, சகமுதலியவைகள் அறிவென்பதன்றெனவும், அதையின்றி யின்றெனவு மிருத்தலால் அறிவானது ஷை சகமுதலியவற்றில் நிறைவாயிருந்து விளங்குகின்றது. இங்ஙனம் அறிவானது சகமாதி அனைத்துமாயும், மீண்டும் அன்றாயும் விளங்குவதும்; ஷை அனைத்தும் அறிவு சொரூபமாயும், அன்றாயும்விளங்குவதும்ஆகிய இந்நவநவ சுவாநுபவ விலாசங்கள் அறிவானைவிட்டுப் பிரியாது நிகழக்கூடியதாகலான் இதுவே சக்சசமாதிக்கண் விளங்கும்

யதார்த்த விசிட்டாத்துவைத சித்தாந்தமா மென்க. அன்றியும் யதார்த்த துவைத,விசிட்டாத்துவைதங்களாகிய இவைகளே பொருளைப் பொருளாகவுணர்தலாகிய மெய்யுணர்வாக விளங்குகின்றமையினால் யதார்த்த ஆஸ்திகமெனவும் படுமென்க. முன்னொன்று கூறப்பட்டவைகளோ வெனின், அவை பொருளல்லவற்றைப் பொருளாக வுணர்தலாகிய பொய்யுணர்வாக விளங்குகின்றமையினாலும், வழிபடுமார்க்கமாதலானும் போலி ஆஸ்திகமாகுமென்க.

இங்ஙனங்கூறிய யதார்த்த துவைத விசிட்டாத்துவைதங்களே சித்தாந்தமாயின் இவற்றிற்கு மேலாக வேறொன்று மின்றேவெனின், முன்னொன்று கூறப்பட்டவைகள் பூர்வபட்சமாயினமையால் இவைகள் சித்தாந்தமெனப்பட்டன. ஆயினும் இவைகளே முற்றுஞ் சிதாந்தமன்றென்க. ஏனெனின், இவற்றிற்குமேல் அத்துவைத மென்பது யாதுக்கிருக்கின்றது?

## அத்துவைதம்.

அத்துவைதமென்பது யாதெனின், இரண்டாவதென்பதற்றிருத்தலாமென்க. இரண்டாவ தென்பது யாதெனின், வியாபக விளக்க சாட்சியா யிருக்கும் அகம்பொருளாகிய அறிவானது சுசாதிக, விசாதிக பேதமற்றதால்(அச்சுசாதிக, விசாதிக பேதமாகக் கற்பிக்கப்பட்ட) துவைதமும், சுவகத பேதமற்றதால் (அச்சுவகதபேதமாகக் கற்பிக்கப்பட்ட)விசி

ட்டாத்துவைதமும் ஆகிய (அறிவுக்கு அயலாகச் சொல்லப் பட்ட)இவ்விரண்டாவதென்பதுஅற்றுத் தானேதானாய்விள ங்கி நிற்றலா மென்க. இதற்காகவே 'ஏகமேவாத்விதீயம்' என்னும் வாக்கியம் பிறந்திருக்கின்றதென்க. இதனுள் 'ஏகம்'என்பதனால் துவைதத்தையும், 'ஏவ'என்பதனால் (தர் மமாகக்கூறும்) விசிட்டாத் துவைதத்தையும் கடந்தது என் றும், 'அத்விதீயம்' என்பதனால் அங்ஙனங் கடந்துநின்றது எந்த அகம்பொருளோ அதுவே அத்துவைத மென்றும் பொருள் விளங்குகின்றதென்க. ஆகலின்,

### தத்துவராயர் பாடுதுறை.

அன்னிய மில்லையென் றாதேடா காளம்
ஆனந்த மானேமென் றாதேடா காளம்
துன்னு சுடரேயென் றாதேடா காளம்
சோதியுட் சோதியென் றாதேடா காளம்.

எனவும், மற்றும் இங்ஙனமே கூறியிக்கின்றன வென்க.

இவ்வத்துவைதமே கூடஸ்த பிரம ஐக்கிய மெனவுங் கூறப்படு மென்க.

### கூடஸ்த பிரம ஐக்கியம்.

கூடஸ்த பிரம ஐக்கியமாவது யாதெனின், கடோபாதி, மேகோபாதிக ளிரண்டையும் நீக்கி அவ்விரண்டிலும் நிறை

வுற்றுள்ள வெளியைநோக்குழிக் கடவெளியேமேகவெளியாயும், மேகவெளியே கடவெளியாயும் பேதமிறந்து ஏகமாய்விளங்குதலால் அதுவே ஐக்கியமெனப்படும். அங்ஙனமே அவித்தையாகிய(தேகமுதலிய)வியட்டிஉபாதி, குணந், தொழிலையும்; மாயையாகிய (பிருதிவிமுதலிய)சமட்டிஉபாதி, குணந், தொழிலையும் இருவகைச்சமாதியுழைப்பினால் நீக்குஞான்று அவித்தியோபாதி அவிச்சின்னமாகவிருந்த கூடஸ்த சைதன்னியமும், மாயோபாதி அவிச்சின்னமாயிருந்த பிரமசைதன்னியமும்(முன்ஞான்று கற்பனையாகவுள்ள)பேதமிறந்து கூடஸ்த சைதன்னியமே பிரமசைதன்னியமாகவும்,பிரமசைதன்னியமே கூடஸ்த சைதன்னியமாகவும் ஏகமாக விளங்குவதால் இதுவே ஐக்கியமெனப்படுமென்க. அறிவானந்த ஐக்கியமென்பது மிதுவேயாமென்க. எங்ஙனமெனின், ஆரோப திசையின்கண் அறிவாக விளங்கியிருந்த வியட்டி சிற்சடபேதங்களாகிய இந்திரியம், அந்தக்கரணம், சிதாபாசன் ஆகிய இவைகளை விசாரிக்க வேண்டியவாறு விசாரிக்குஞான்றுஅறியாமையாகஏற்பட்டு ஈற்றில் கூடஸ்த சைதன்னியமே அறிவாக ஏற்படுகின்றது. அக்கூடஸ்தன் சொரூபசமாதிக்கண் விளங்கும் அறிவேவடிவாயிருத்தலால் அதுவே அதிஷ்டானதிசையின்கண் விளங்கும் அறிவென்பதாமென்க. இங்ஙனமே சமட்டி சிற்சட பேதங்களாகிய பிருதிவிதத்துவமுதல் நாததத்துவ மீறாகவுள்ள திருசியங்களை விசாரிக்கின் அவை யாவுங் கற்பனையாக ஏற்பட்டு ஈற்றில்

பிரம சைதன்யமே ஆனந்தமாக ஏற்படுகின்றது. அப்பிரமமானது சகசசமாதிக்கண் விளங்கும் ஆனந்தமே வடிவாயிருத்தலால் அதுவே அதிஷ்டானதிசையின்கண் விளங்கும் ஆனந்தமென்க. அறிவு, ஆனந்தமாகிய இவ்விரண்டும் பெயரால் வேறுபட்டிருப்பினும் இவற்றை வெவ்வேறுகக் காட்டக்கூடிய உபாதி முதலிய யாவு மிறந்து நிற்றலினுல் அறிவே ஆனந்தமாகவும், ஆனந்தமே அறிவாகவும் விளங்கி ஏகநிலை யெனப்படும் ஐக்கியமாகின்றதென்க.

இவ்வைக்கியம் இடைஞான்று உண்டாவ தாகலின் மீண்டும் நாசமுறுமன்ருே? அங்ஙனமின்றி முன்ஞான்றே யிருந்துளதாயின் சமாதியை எய்தவேண்டிய அவசியமுமின்றேயெனின், ஐக்கியம் வாய்த்தது எதுகாரணமாக வெனப்படும்? உபாதியாதிகளை நீக்கியதின் காரணமாகவெனின், ஷை அவித்தை, மாயையாகிய உபாதிகள் கற்பனையெனப் படாது யதார்த்தமாயிருக்கட்டுமே. எங்ஙனமெனின், சைதன்னியத்தின்கண் இப்பி வெள்ளியைப்போல (கற்பனையாகத்) தோன்றிய மூலப்பிரகிருதியின்குணத்திரயத்தோடுகூடியசத்துவகுணப்பகுதியே மாயையாகவும், இராசதகுணப்பகுதியே அவித்தையாகவும் விகாரப்பட்டமையினுலென்க. இங்ஙனம் உபாதிகளே கற்பனையாகுமாயின் அவற்றை நீக்குவதென்பதும், ஐக்கிய மெய்துத லென்பது மென்னை? சைதன்னியம் எஞ்ஞான்றும் இருந்தபடியே கூடுதல் பிரிதலற்றுச் சமநிலையாயிருப்பதன்ருே? இதனுலன்ருே,

தாயுமானவர்.

கூடுதலு டன்பிரித லற்றுநிர்த் தொந்தமாய்க்
குவிதலுடன் விரித லற்றுக்
குணமற்று வரவினொடு போக்கற்று நிலையான
குறியற்று மலமு மற்று
நாடுதலு மற்றுமேல் கீழ்நடுப் பக்கமென
நண்ணுதலு மற்று விந்து
நாதமற் றைவகைப் பூதபே தமுமற்று
ஞாதுருவு ஞான மற்று
வாடுதலு மற்றுமே லொன்றற் றிரண்டற்று
வாக்கற்று மனமு மற்று
மன்னுபரி பூரணச் சுகவாரி தன்னிலே
வாய்மடுத் துண்ட வசமாய்
தேடுதலு மற்றவிட நிலையென்ற மௌனியே
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தட்சிணா மூர்த்தியே
சின்மயா நந்த குருவே. எனவும்,

சாந்தலிங்க சுவாமிகள்.

நாலுவேதமு மொருசமநிலைசொல. எனவும்,
கூறியருளி யிருக்கின்றனர்?

இங்ஙன மிருக்க முன்னொன்று கூறிய ஐக்கியமென்பது யாதெனின், வியாபக விளக்கமாகிய சைதன்னியமானது

ஏகமாயினும் அது தன்பால் அநாதி கற்பனையா யெழுந்த மூலப்பிரகிருதியின் பகுதிகளாகிய மாயையில் பிரதிபிம்பித் ததுபோ லிருத்தலினுல் (அதற்கு) ஈசனென்றும், அவித்தை யில் பிரதிபிம்பித்ததுபோ லிருத்தலினுல் சீவனென்றும், ஷை மாயையின்கண் நிறைவுற்று ஈசுரசைதன்னியத்திற்குச் சாட்சியா யிருத்தலினுல் பிரமமென்றும், அவித்தையின்க ண்நிறைவுற்றுச் சீவசைதன்னியத்திற்குச் சாட்சியாயிருத் தலினுல் கூடஸ்த னென்றும் பெயர் வந்திருக்கின்றன. என்னை,

உபநிடதம்.

பேசரிய பரத்தினிலா ரோபமதா மூலப்
பிரகிருதி தோன்றுமிதிற் சாத்திகமா மாயை
ஈசனிதிற் றோன்றுமிரா சதமவித்தை சீவன்
இதிற் றோன்றும்.

என்றுகூறியிருப்பதனுலெனக. இங்ஙனமாகிய சைதன்னி யங்களில் சீவன், ஈசுரன் என்னு மிரண்டும் பிரதி பலனங்க ளாதலின் கற்பனுத்துவைத மென்றும்; கூடஸ்தன், பிரமம் என்னுமிரண்டும் ஷை இரண்டு சைதன்னியங்களுக்கும் சா ட்சியா யிருத்தலினுல் சாட்சித்துவைத மென்றுஞ் சொல்ல ப்படுகின்றன. ஆயினும் ஷை சைதன்னிய பேதத்திற் கேது வாகிய மாயை, அவித்தைகள் யதார்த்தமன்முதலால் சை தன்னிய பேதமும் யதார்த்தமன்று. அங்ஙனமின்றி யதார் த்தமாகுமாயின் சமாதியில் ஏகமாதல் கூடாது. சமாதியா

வது அநாதியறியாமையைப் போக்குவதாகலின் அவ்வறி யாமை காரணமாக விருக்கும் பேதமும் அழிகின்றது. ஆக லின்,

ஞானவாசிட்டம்.

பேதமுறு புந்தியே மாயை யாகும்
பெரிதுவருந் தியுமிதனைப் போக்கல் வேண்டும்.

என்று கூறுகின்றது. அதனால் சைதன்னிய ஏகமும் விளங் குகின்றது. அதுவே ஐக்கியமென்று சொல்லப்படுகின்றத ன்றி ஐக்கியமென்பது நூதனமாக உண்டாவதன்றென்க. அன்றியும் தானே தானாகிய தற்போதத்தையன்றி ஷை சை தன்னிய பேதமு மின்றன்றோ? இதனாலன்றோ,

தாயுமானவர்.

தானான தன்மயமே அல்லா லொன்றைத்
தலையெடுக்க வொட்டாது தலைப்பட் டாங்கே
போனாலுங் கற்பூர தீபம் போலப்
போயொளிப்ப தல்லாது புலம்வே றின்றாம். எனவும்,

உபநிடதம்.

தானமரு நிலையிதுவே தாந்தவுப சாந்தமிது தானே தானும், மோனமொழி யிதுவெனநான் மறையினுப நிடத மொழி முடிவு காட்டும். எனவுங்கூறியிருக்கின்றன?
ஆகலின் தானே தானாகிய இப்பெருஞ்செல்வமே வேதாந்த நூற்களிளெல்லாவற்றாலுங் கூறப்படுவதுபோல இந்நூலாலுங்

கூறப்படுகின்றது. இதனால் இந்நூலை ஆழ்ந்து ஓதியுணர்வோர் ஷை பரமசெல்வங்களைப்பெற்று இனிது வாழ்வாரென்பதற் கையமின்றென்க. ஓம், சுபம், தத் சத்.

ஞானசிரியர் தமக்கருளியதற்குக் கைமாறு வேறின்றென வியந்து துதித்தல்.

நானு யிருந்திலக நன்களித்த சற்குருவுக்
கானாத கைம்மாறெங் காய்ந்தளிப்பே - னானுங்
காண்பனைத்து மென்னுருவாக் கண்டுகரைத் தின்பமுறு
மாண்மையதா நிற்பேனிங் காழ்ந்து.

## வாழ்த்து.

ஆன்றமறை யும்வசிட்ட ஞானஜன காதியருஞ்
சான்றுசுக ரும்வியாசர் சங்கரரும் - மூன்ற
சடகோபர் நால்வருடன் சற்குருமற் றுள்ளோர்க்
கிடருண்டோ வாழிசொலற் கீங்கு.

நான்காவது

# வீடென்னும் புருஷார்த்தம்

முற்றிற்று.

---

# புருஷார்த்தபோதினி

சம்பூர்ணம்.



# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 4 | 1 | வின்றேல் | வின்றதனல் |
| 23 | 16 | தேறப்பட்ட | தேரப்பட்ட |
| 24 | 9 | ஓதலுறுகல் | ஓதலுருகல் |
| 28 | 14 | மாயினும் | மாயின் |
| 29 | 9 | சங்கராகாலத்தில் | சங்காரகாலத்தில் |
| 43 | 9 | தேறப்பட்ட | தேரப்பட்ட |
| 60 | 3 | தோற்ற | தோற்றம் |
| 62 | 12 | உண்டெவு | உண்டெனவு |
| 63 | 16 | லழுதி | லழுந்தி |
| 64 | 22 | பொருள்கலேனைத்தினு | பொருள்களனைத்தினு |
| 88 | 1 | அறியபபடவும் | அறியப்படவும் |
| 93 | 2 | அறிவினுற் | அறிவினல் |
| 95 | 3 | மொவ்வொருவங் | மொவ்வொருவருங் |
| 96 | 12 | துணியாலாமெனின் | துணியலாமெனின் |
| 108 | 11 | சத்தெறுஞ் | சத்தென்றுஞ் |
| 112 | 13 | உபதான | உபாதான |
| 127 | 23 | விவகக்ரி | விவகரிக் |
| 137 | 1 | நிலமை | நிலைமை |
| 163 | 11 | இருகின்றனவே | இருக்கின்றனவே |
| 164 | 12 | இலட்கியாநுபவமும் | இலட்சியாநுபவமும் |
| 167 | 19 | பெரருள் | பொருள் |
| 168 | 2 | நிலமை | நிலைமை |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 188 | 15 | வுபாதனத்தி | வுபாதானத்தி |
| 195 | 8 | விளங்கிங் | விளங்கிக் |
| 200 | 15 | பிரதியட்ச | பிரத்தியட்ச |
| 204 | 19 | முடிக்கின்ற | முடிகின்ற |
| 207 | 6 | வாக்கியத்தியத்திற் | வாக்கியத்திற் |
| ,, | 10 | அவத்தைவுபாதி | அவத்தையுபாதி |
| 210 | 24 | இத்தியாதோடங்கள் | இத்தியாதிதோடங் |
| 216 | 19 | வேண்டுமாதலும் | வேண்டுமாதலாலும் |
| 221 | 1 | மின்றெக் | மின்றெனக் |
| 225 | 20 | மயாசத்தி | மாயாசத்தி |
| 235 | 20 | வெழுக்கி | வெழுச்சி |
| 250 | 20 | தலைகட்டா | தலைகாட்டா |
| 262 | 13 | பந்தத்தினினறு | பந்தத்தினின்று |
| 263 | 12 | அத்தியகந்த | அத்தியந்தா |
| 264 | 12 | அறிவனாகிய | அறிவானாகிய |
| 285 | 11 | பழிக்கு | பகுக்கு |
| 286 | 14 | ஸ்தூனாகநக | ஸ்தூனாநிகந |
| 307 | 9 | ஒன்று | ஒன்று |

